ஞானயோகம், கர்மயோகம் இரண்டும் வெவ்வேறாக பலனைக் கொடுப்பவையென்று குழந்தைகள் (பாலாஹா) சொல்வரேயன்றி பெரியோர்களல்ல என்று பகவான் இங்கு கூறுகிறார். ஏனெனில் எந்த யோகத்தைப் பின்பற்றினாலும் ஆத்மா சாக்ஷாத்காரமெனும் மோக்ஷமெனும் ஒரேவிதமான பலனே கிடைக்கிறது. சிலர் தத்தம் மனவியல்பிற்கேற்ப ஆன்ம விசாரணையுடன் கூடிய ஞானயோகத்தை அனுசரித்து காண்பவை, காட்சி இவற்றை ஒதுக்கி ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்து மோக்ஷ பலனை அடைவர். மற்றும் சிலர், நிஷ்காம கர்மயோகத்தினை பின்பற்றி எல்லாவிதமான செயல்களையும், ஈசுவரார்ப்பணம் செய்து, சுயநலமின்றி பலனைக் கருதாது, சித்த சுத்தியடைந்து அதன்வழி ஆன்ம சொரூப ஞானமடைந்து மோக்ஷத்தைப் பெறுகின்றனர். இவ்வாறாக இரண்டிலும் 'அகம்' எனும் பாவமின்மையே, தானே கர்த்தா எனும் புத்தியின்மையே, குறுகிய மனப்பான்மையின்மையே பொதிந்துள்ளது. ஜீவன் எனும் எண்ணம் மறைந்துவிடின் எஞ்சியிருப்பது சிவமேயல்லவா? எனவெ சாங்க்ய (ஞான)யோக, கர்மயோகங்களில். ஏதேனுமொன்றில் நன்கு ஊன்றி செயல்பட்டால் இரண்டின் பலனுமான மோக்ஷம் கிடைக்கும் என்று சொல்வதன் காரணம் இதுவே.

"ஸம்யக்" - எந்த யோகமாயினும் அதில் நன்கு திடமான எண்ணத்துடன் ஊன்றி ஈடுபட்டால் மாத்திரமே அத்தகைய மோக்ஷம் கிடைக்குமே அன்றி சிறிதளவு அனுபவத்திலேயே கிடைக்காது. எந்த வழியாயினும் அதில் பரிபக்குவமடைதல் வேண்டும். அதில் வல்லுனர் (Expert) ஆக வேண்டும். இதனைத் தெரிவிப்பதற்கே 'ஸம்யக்' எனும் சொல் இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.

உத்தமமான ஞானிகள் உலக நன்மைக்காக கர்மாக்களை (பலனைக் கருதாது) செய்து வருகின்றனர். உத்தம கர்மயோகிகள் சுயநலமின்றி, பலனை எதிர்பாராது, உள்மனத்தில் எல்லாம் இறைவனின் சொரூபமே (ஸர்வம கல்விதம் ப்ரஹ்ம) எனும் ஞானபாவத்துடன் கூடியிருக்கின்றனர். எனவே பரிபக்குவ நிலையில் ஞானயோக,

□

DEIVA MANAKKUM GITANJALI

A Detailed Study of Mysticism in Tagore's Gitanjali

Dr. R. RAJAGOPALAN

TIRUPATTUR (P.M.Dt) 623211

□

First Edition March 1993



□

This Book is Published with the Financial Assistance of Tirumalai Tirupati Devasthanams under their scheme Aid to Publish Religious Books.



□

தெய்வ மணக்கும் கீதாஞ்சலி

□

பக்கம் LXVI + 184 : 250

ரூ. 45/-

□

கிடைக்கும் இடம் :

இரா. இராசகோபாலன். பிஎச்.டி;
அண்ணா நகர், மதுரைச் சாலை,
திருப்புத்தூர் [பசும் பொன்] 623211

திருப்பதி பிரிண்டர்ஸ், மதுரை-1 ○ போன் : 33989

## நன்றி யுணர்தல்

உய்வோர்க்கு எல்லாம் உயிராய் ஒளிரும்
தெய்வத் திருமலை திருப்பதி யப்பன்
பொய்யாக் கருணை மழையால் இந்நாள்
மெய்யாக் கனவு பலித்தது ஆகலின்
நிறைவா மலைமேல் நின்றவன் தனக்கும்
இறைவன் பணியுறை அலுவலர் தமக்கும்
அன்பின் மிக்க கே சுப்பா ராவ்,
பொன்சௌரி ராசர் அறிஞர்கள் தமக்கும்
ஆரா அன்பின் தமியேன்
தீரா நன்றி கூர்வேன் மறவேன்

O

## நினைவு போற்றல்

காலங்கள் மாறும் ஆயினும் இந்த
ஞாலம் மகிழும் இறைமெய் யுணர்வும்
பிறந்த நாடும் பீடுறு மொழியும்
சிறந்திட நாளும் கருதுக என்றே
கடமை உணர்த்தித் தாமே அதற்கோர்
எடுத்துக் காட்டாத் திகழ்ந்த எம்மான்
மகரா சபுரம் [வத்திரா யிருப்பு]
உகந்த ஆசான் ஐயா
மாராம சாமியா பிள்ளை அவர்கட்கு

O

## பொருள் அடக்கம்

முனைவர் ஆ. ஆனந்தராசன்
இணைப் பேராசிரியர்
சைவ சித்தாந்தத் துறை

மதுரை காமராசர்
பல்கலைக் கழகம்
மதுரை–21.

# மதிப்புரை

எக்காலத்திற்கும் உரிய பொதுமையும், இக்காலத்திற்கேற்ற புதுமையும் வாய்ந்த இறைஞானக் கவிதையால் இவ்வுலகை இன்புறச் செய்தவர் கவிஞர் தாகுர். அவரது கீதாஞ்சலி அவரை உலகறிய வைத்தது.

அவர் கீதாஞ்சலியை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தது திட்டமிட்ட செயலன்று; பிறர் வேண்டச் செய்ததுமன்று; தற்செயலாக நடந்த ஒரு நிகழ்ச்சியாகும்.

1912 ஆம் ஆண்டின் முற்பகுதியில் அவர் இங்கிலாந்து நாட்டிற்குக் கப்பலிற் செல்ல ஏற்பாடாகியிருந்தது. புறப்படுவதற்கு முதல் நாள் மாலையில் அவரது உறவினர்களும் நண்பர்களும் அவரை வாழ்த்தி வழியனுப்புவதற்கு ஒரு நிகழ்ச்சியை அமைத்தனர். அதில் கலந்து கொண்டு வீடு திரும்பிய தாகுருக்கு மறு நாள் காலையில் கடுமையான உடல்நலக் குறைவு. அதன் காரணமாக அவரது கடற் செலவு தள்ளி வைக்கப்பட்டது. விரைவில் அவர் குணமடைந்தார், ஆயினும் மருத்துவர்கள் அவர் முழுமையான ஓய்வு பெற வேண்டும் என்றனர். கல்கத்தாவிலுள்ள தம் முன்னோர் இல்லத்திலோ, சாந்தி நிகேதனத்திலோ இருந்தால் ஓய்வு கொள்ளுதல் என்பது இயலாததாகி விடும், ஆதலால் அமைதி தவழும் தனிமையான கிராமப் புறத்தில் உள்ள வீட்டில்—அங்கு தான் அவரது இளமையான, வளமான நாட்கள் கழிந்தன—அவர் சிறிது காலம் தங்குவது என்று முடிவாயிற்று.

அங்கே தங்கியிருந்த காலத்தில் அவருக்கு ஒரு சிக்கல்! ஓய்வு கொள்வதைத் தவிர வேறு எந்த வேலையும் செய்யலாகாது என அவருக்கு அறிவுறுத்தியிருந்தனர். நூல் எழுதுவது கூட மனச்சுமையைத் தரும் என்பதால் அதற்கும் தடை விதிக்கப்பட்டிருந்தது! அந்நிலையில் அவர் நேரத்தைப் போக்க என்ன தான் செய்வது! அப்பொழுது தான் அவருக்குத் தமது கவிதைகளை

ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தால் என்ன என்ற எண்ணம் உதித்தது.

முன்னரே ஒரு சில கவிதைகளை அவ்வாறு மொழியாக்கம் செய்து ஆங்கில இதழ் ஒன்றில் வெளியிட்டிருந்தார். ஆனந்த குமாரசாமி போன்ற அறிஞர்கள் அவரைப் பாராட்டியிருந்தனர். ஆதலால் அந்த எண்ணம் இப்பொழுது கிளர்ந்தெழுந்தது.

இவ்வாறு அமைந்த எதிர்பாராத சூழ்நிலைகளின் காரணமாகவே தாகுர் தம் கவிதைகளில் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க முற்பட்டார். இலக்கியவுலகில் இது பெரும் விளைவுகளை ஏற்படுத்தப் போகிறது என்பதையும், தமது வாழ்க்கையில் ஒரு மாபெரும் திருப்பத்தை உண்டாக்கப் போகிறது என்பதையும் அவர் அப்பொழுது சிறிதும் எண்ணியிருக்க மாட்டார்.

அத் தனிமைச் சூழலில் அவர் தமது கவிதைத் தொகுதிகள் பலவற்றிலிருந்தும் சிலசில பாடல்களைத் தெரிந்தெடுத்து மொழி பெயர்த்தார். அவ்வாறு பெயர்த்த 103 பாடல்களை ஒன்று சேர்த்து அத்தொகுதிக்குக் கீதாஞ்சலி எனப் பெயரிட்டார். கீதாஞ்சலி பிறந்த கதை இது தான்.

கீதாஞ்சலி படிமுறையில் பக்குவம் பெற்று உயரும் ஆன்மாவின் சுயசரிதையாக விளங்குகிறது என்பதும், அந்நூலின் அமைப்பும், அடிநிலைக் கருத்துக்களும், அநுபூதி நிலையும் பிறவும் இந்நூலின் முகப்பில் அமைந்துள்ள கட்டுரைகளில் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன.

கீதாஞ்சலி பலகாலும் தமிழ் வடிவம் பெற்றுள்ளது. இப்பொழுது பேராசிரியர் இராசகோபாலன் அவர்களின் கைவண்ணத்தில் புதிய கோலமும், பொலிவும், மெருகும் பெற்று வெளிவருகின்றது.

மொழி பெயர்ப்பில் மூல நூலின் பொருண்மையை அதன் முழுமையும் செழுமையும் சிறிதும் குன்றாதவாறு கொண்டு வருதல் என்பது இயலாத ஒன்று. அவ்வாறு கொண்டு வந்து விட்டதாக ஒருவர் பெருமை கொள்வது, கடலில் இறங்கிக் கையலைத்து நீந்துகின்ற ஒருவன்

கடல் முழுதையும் அளந்து விட்டதாகக் கூறிக் கொள்வது போல் ஆகும்.

இது பற்றியே இவ்வாசிரியர் இதனை வெறும் மொழி பெயர்ப்பாகச் செய்யாமல் கீதாஞ்சலிக்கு ஒரு வழித் துணை விளக்கமாக அமைத்துள்ளார். எம்முறையில் இது வழித்துணையாக உதவுகிறது என்பதை ஆசிரியரே தம் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார்,

ஒவ்வொரு பாடலுக்கும் மனங் கவரும் தலைப்பினை மகுடமாகச் சூட்டியிருப்பது இதுவரை வந்த நூல்களிற் காணப் பெறாத ஒரு புது முயற்சியாகும். அத்தலைப்பு களுட் சில, அவற்றிற்குரிய பாடல்களின் உயிர்க் கருத்தை ஓரிரு சொற்களில் பொள்ளெனக் காட்டுவனவாக உள்ளன; மேலும் சில, உருவக அடிப்படையில் அமைந் துள்ளன; மற்றும் சில, அவ்வவ்விடங்களின் உணர்வு நிலைகளைச் சித்திரித்துக் காட்டும் ஓவியப் பாங்கு உடையனவாய்த் திகழ்கின்றன.

காட்டாக, முப்பத்து மூன்றாவது பாடலைப் பாருங் கள். பகற் பொழுது சிலர் வந்தனர்; இரவில் தங்க இடம் கேட்டனர்; வழிபாட்டில் உதவியாக இருப்பதாகவும் கூறினர்; ஒரு மூலையில் ஒதுங்கி அமர்ந்தனர்; அன்றி ரவில் தான் தங்களின் உண்மையான சொரூபத்தைக் காட்டினர்; பூசையறையுட் புகுந்து இருந்தவற்றை யெல்லாம் கொள்ளையிட்டுச் சென்றனர்.

இவ்வளவே செய்தி. இதனால் கவிஞர் உணர்த்துவது என்ன? நல்ல ஆன்மாவிடத்தில் தீய எண்ணங்கள் அற்றம் பார்த்து நுழைகின்றன; இருந்த இடம் தெரியாமல் அடங்கிக் கிடக்கின்றன; சமயம் கிடைத்த போது தங்கள் கை வரிசையைக் காட்டுகின்றன; நல்லுணர்வுகளையும் இறைநாட்டத்தையும் இல்லாமற் போக்கி விடுகின்றன. இவ்வனுபவ வுண்மையை எவ்வளவு சுருக்கமாக-அழகாக - உருவக முறையில் கவிஞர் உணர்த்தியுள்ளார் என்ப தைப் பாருங்கள்.

கவிஞர் வந்தவர்களைத் திருடர் என்று குறிப்பிட வில்லை. 'அவர்கள்' என்றே பொதுவாகக் குறித்துள்ளார்.

அவர்கள் பேச்சே அவர்தம் இயல்பைப் புலப்படுத்துவதாக உள்ளது, 'உனது கடவுளுக்கு நீ செய்யும் வழிபாட்டில் உதவுவோம்' என்கின்றனர். கடவுளுணர்வுக்கும் அவர்கள் நிலைக்கும் இயைபில்லை யாதலின் 'உனது கடவுள்' என்று பிரித்துப் பேசுகின்றனர்.

அவர் தம் நிலைக்குப் பொருத்தமாக அவர் தம் புறத்தையும் அகத்தையும் புலப்படுத்தும் முறையில் 'கண்ணியமான திருடர்' எனப் பொருள் முரண் அமையத் தலைப்பிட்டுள்ளார் பேராசிரியர்.

உயிருக்கு நல்லது செய்வது போலக் காட்டித் தீமை பயக்கும் ஐம்புலன்களைக் கள்வராக உருவகம் செய்யும் முறையை நம் பக்தியிலக்கியப் பாடல்களில் பரக்கக் காணலாம். 'புள்ளுவர் ஐவர் கள்வர்' எனவும் 'துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய ஒட்டார்' எனவும் பொறிகள் செய்யும் புன்மையைப் பெரியோர் எடுத்துக் காட்டியுள்ளனர். அவற்றை யெல்லாம் நன்குணர்ந்தவராகிய இப்பேராசிரியர் இப்பாடலுக்கு இவ்வாறு தலைப்பிட்டது எவ்வளவு பொருத்தம்!

ஆசிரியரின் மொழிபெயர்ப்புத் திறனுக்குச் சான்றாக ஒன்றை மட்டும் காட்டுதல் அமையும். கவிஞர் தமது வாழ்வு இறை வழிபாட்டிற்கே பயன்பட வேண்டும் என்பதை மலர் என்னும் குறியீட்டினால் புலப்படுத்துகிறார். இந்தச் சிறிய மலர் வாடி வீழா முன் தலைவனாகிய இறைவன் இதனைப் பறித்துச் சூடிக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறார். இதனைக் கவிஞர் வெளியிடும் முறையில் தான் எத்துணை அழகு! மென்மை! ஏக்கம்! இரக்கம்! பரிவு! மலர் மிகவும் மெல்லியது தான். அதனினும் மெல்லியனவாயிற்றே இறைவனது பூங்கரங்கள்! மலரைப் பறிக்கும் போது அவனது பூ விரல்கள் நோகுமே என்று கவலை கொள்கிறார் கவிஞர். இவற்றையெல்லாம் அவர் வார்த்தைகளால் வெளிப்படையாக விரிக்க வில்லை. 'with a touch of pain' என்ற சிறிய தொடரில் தன் பரிவுணர்ச்சியை யெல்லாம் கொட்டி விடுகிறார்.

இத்தொடரைத் தமிழில் எப்படி மொழி பெயர்ப்பது! முன்னை மொழி பெயர்ப்பாளராகிய அறிஞர் ஒருவர் 'துக்க ஸ்பரிசம்' என்கிறார். இறைவனது தொடும் செயலைத்துக்கம் எனச் சொல்லுவது பொருந்துவதா கமோ? இவ்வாறு மொழி பெயர்த்தது குறைபாடுடையது எனக் கண்ட நமது பேராசிரியர் கவிஞரின் உளப் பாங்கினை உணர்ந்து, பாடலின் உணர்வு நிலைக்கேற்ப 'நின் கையால் தொடும் நோவினால் சிறப்புத்தருக' என அழகுற ஆக்கித் தந்துள்ளார்.

பேராசிரியரின் தெளிந்த நடையும், சிக்கலின்றிச் சிறு சிறு அளவில் அமைந்த வாக்கிய அமைதியும், தேர்ந்த சொல்லாட்சியும் இந்நூலை மொழி பெயர்ப்பு என்று தோன்றாதபடி செய்து விடுகின்றன.

கீதாஞ்சலியில் ஆழ்ந்து கிடக்கும் சமயக் கருத்துக் களையும், ஆன்ம சுகம் தரும் அனுபவங்களையும் முதன் முறையாக எடுத்துக் காட்டும் முன்னோடி நூல் இது என்று துணிந்து கூறலாம்.

இலக்கிய ஆர்வலருக்கும், தாகுரின் கவிதையில் ஈடுபாடு கொண்ட அன்பர்களுக்கும், குறிப்பாக மாணவர் உலகிற்கும் இந்நூல் தெவிட்டாத நல் விருந்து!

ஆ. ஆனந்தராசன்

O

## திருத்தம்

| பக்கம் | வரி | இருப்பு | திருத்தம் |
|---|---|---|---|
| XII | 22 | அதற்கு | ஆதற்கு - |
| XLV | 6 | ஆள்மா | ஆன்மா |
| XLVI | 11 | ஒளி | இருள் |
| LXI | 15 | தொரு | தொகுப்பு |
| LXIII | 12 | யுத்தகங்களை | யுத்தங்களை |
| LXVI | 3 | வதற்கு | அதற்கு |
| 68 | கடைசி | திண்ணம் | ஓடிவந்து கூடும் என்பது திண்ணம் |
| 100 | 29 | பற்றறுத்தல் | — |
| 109 | 1 | மகிச்சி | மகிழ்ச்சி |
| 168 | 12 | 92 | 93 |

# முகவுரை

☐ இந்த நூற்றாண்டின் முற்கூறில் (1913 இல்) இந்தியாவின் ஆன்மிக ஞானத்தைப் பண்ணாக இசைத்து வையப் புகழ் கொண்ட நூல், இரவீந்திரநாத தாகுரின் கீதாஞ்சலி.

கீதாஞ்சலி என்பதற்குப் 'பாட்டுப் படையல்' என்பது பொருள். ''முடிவுள்ள பொருள் முடிவிலாப் பொருளுக்கு அளிக்கும் பாடற்படையல்'' என்று அதற்கு விளக்கம் தந்தார் அறிஞர் ச. இராதாகிருஷ்ணன்.

உபநிடதங்கள், புத்தரின் பொருண்மொழி, பகவத் கீதை ஆகியவை முதலாக-பிரம்ம சமாஜம், இராமகிருஷ்ண இயக்கம் வரையிலான இந்து சமய நுண்மைகளின் பரிணாமங்களை உட்கொண்டு, தென்பால் எழுந்து வடபால் விரிந்த பக்தி இயக்கத்தின் உணர்ச்சிக் கூறுகள் இழைய, மேலை நாட்டு அநுபூதிக் கவிஞர்களின் கவிதை அனுபவங்களோடு தம் சொந்த இறைச்சிந்தனை ஐக்கிய வேட்கை இறை இன்பம் என்பவற்றையும் சேர்த்து இசைப் பாடல்களாக வங்கமொழியில் கீதாஞ்சலி கேய (ஓடம்) நைவேத்திய என்ற மூன்று நூல்களாக யாத்தவற்றுள் நூற்று மூன்று பாக்களை எடுத்து ஆங்கிலத்தில் வசன கவிதைகளாகக் கவிஞர் தொடுத்த பாமாலையே கீதாஞ்சலி யாகும்.

□ அந்நாளில் நாடெங்கும் பரவிய இந்திய அரசியல் பொருளியல் தேசிய ஆன்மிக விடுதலை இயக்கங்களும் எழுத்துக்களும் தாகூரின் நெஞ்சைத் தொட்டன. கபீரின் கவிதைகளில் அவர்க்கு இருந்த ஈடுபாடு, தன் தாக்கத்தைக் கீதாஞ்சலியில் ஏற்படுத்தத் தவறவில்லை, உலகெங்கும் தோன்றிய அறிவியக்கமும் விழிப்புணர்ச்சியும் ஓரளவு கவிஞரின் கருத்தைக் கவராமல் இல்லை.

ஆகவே வேதத்தின் பூர்வப் பகுதியாகிய கரும காண்டத்தின் சடங்குகள் சம்பிரதாயங்களை ஒதுக்கி விட்டு மானுட நேயம் சமுதாயப் பணி ஆகியவற்றைப் போற்றும் புதிய கரும யோகத்தைத் தம் கவிதையில் பாராட்டிப் பேசுகிறார்.

அவ்வாறே அவர் புராணங்களாகிய முந்திய தொன்மக் கதைகளைக் கீதாஞ்சலியில் எடுத்தாளவில்லை. மாறாகப் ''பகுத்தறிவு என்னும் தெள்ளாறு'' (பாடல் 39) பற்றி வலியுறுத்துகிறார். இருப்பினும் ஆங்கிலத்தில் எழுதிய இந்திய எழுத்தாளரில் சிறந்த தொன்மக்கதை புனைவோராக (Myth-maker) இருந்த அவர் புதுத் தொன்மங்கள் புனைந்து தம் கருத்துக்கள் உணர்ச்சிகளுக்கு அவற்றை ஊர்திகளாகச் செல்ல விடுகிறார்.

□ கீதாஞ்சலிப் பாடல்கள் எளிய நடையில் இயன்று கவிதைப் புனைவில் பூத்துச் சிரித்து மகிழ்ச்சி தருகின்றன அல்லது அலை வீசி இன்பம் அளிக்கின்றன அல்லது சிறகு விரித்துப் பறந்து உயர்ந்து மயங்க வைக்கின்றன. கரும, பக்தி யோகங்களின் எண்ணமும் முறைகளும் அவற்றில் ஆட்சி பெற்றிருப்பினும் அதிகமும் ஞான யோகக் கருத்துக்களே ஒளிநடம் புரிகின்றன.

நூலின் எப்பகுதியிலும், அது குழந்தைமையைக் கொண்டாடுவதாயினும் மரணத்தை வரவேற்பதாயினும் இறைமைக் காதலில் சொக்க வைப்பதாயினும், நன்னம்பிக்கையும் இறையுணர்வும் தேனாகப் பாய்ந்து இனிக்கின்றன. ஆகவே கீதாஞ்சலி உயிருக்கம் தரும் 'அமிருத சஞ்சீவினி'யாக விளங்குகிறது.

இருப்பினும் பாடல்கள் யாவும் ஏறத்தாழ ஒரே அடிக் கருத்தே கொண்டிருப்பதாகவும், பாடல்களில் பனிப் படலம் போல அல்லது மஞ்சு படிந்தாற் போலச் சற்றுத் தெளிவின்மை போர்த்திருப்பதாகவும் ஆங்கிலத் திறனாய்வர் சிலர் கருதுவதுண்டு

அது உண்மையே.

பாடல்கள் யாவிலும் இறைமையே அடியும் முடியுமாக இருத்தலால் அதனைப் பல்வேறு கோணங்களில் பாடுவதனால் அடிக் கருத்து ஒன்றாக இருப்பினும் சுவை நலனும் வகைநலனும் பலபட இருக்கின்றன என்பதைச் சமய உணர்வினர்-சிறப்பாக இந்து சமய உணர்வினர் அறிந்து கொள்ளுதல் கடினம் அன்று.

பனிப் படலம் போர்த்தாற் போன்று இருத்தல், கவிஞர் அனுபூதி உணர்வைத் தேடியும் தொட்டும் துழாவியும் தொடர்ந்தும் பாடுவதால் வருதலாகும்.

தாகுர் யோகநெறி நின்று இறையனுபவம் நாடியவர் அல்லர். காலந் தோறும் தோன்றும் கவிஞானிகளின் மரபில் வந்த அவர் கவிநெறி நின்று இறையனுபவம் நாடியவர். இறையனுபவம் சொற்களில் முழுக்க அகப் படுத்த இயலாதது. எனவே பனிப்படலம் போன்ற ஒரு போக்கு இருப்பது தவிர்க்க முடியாதது. குறியீடுகள் படிமங்களின் ஆட்சி அமைந்திருப்பதும் அதனோடு இயைந்த போக்கே ஆகும்.

இதனால் கவிதை எளிதாக இல்லை என்று கருதி விடலாகாது. சொற்கள் மிக எளியவை; ஆயின் கருத் துக்கள் அவற்றுக்கு அப்பாலும் செல்கின்றன.

☐ ஆகவே கீதாஞ்சலிப் பாக்களுக்கு விளக்கம் தருவது இன்றைய நிலையில் இன்றியமையாததாகின்றது.

தமிழில் முன்னரே கவிதை, வசனகவிதை, தம்வயம் ஆக்கிய கவிதை, கீர்த்தனை ஆகிய வடிவங்களில் கீதாஞ்சலி வந்திருக்கிறது. இருப்பினும் அதன் சமயக் கருத்துக்களை-ஆன்ம சுகம் தரும் அருமையான பண்பு களை-எடுத்து ஓதும் நூல் இதுவரை தமிழில் வரவில்லை.

பாக்கள் தாமே இறை மணந்து இனிமை பயக்கின்றன என்றாலும், விளக்கம் அதற்கு மேலும் சுவைப்பெருக்கமும் திட்பமும் தருகின்றது. எனவே முன்னுரை-தெளிவு-விளக்கம் என்ற முறையில் பாடற் கருத்துக்களுக்குப் பின்புலம் சமைத்துப் பொருள் தெளிவு தந்து, குறியீடுகள் படிமங்களின் பொதிவுகளை அவிழ்த்து, பகவத் கீதை முதற்கொண்டு தக்க மேற்கோள் சேர்த்து, பாடல்களுக்கு ஏற்ற மகுடம் இட்டு இந் நூல் வழித்துணையாக உதவ முன்வருகிறது,

இந் நூல் மொழி பெயர்ப்பு அன்று; கீதாஞ்சலிக்கு வழித் துணை விளக்கம்.

☐ ''தெய்வ மணக்கும் செய்யுளெல்லாம்'' என்று மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை தம் சேக்கிழார் பிள்ளைத் தமிழில் இறை நலம் சான்ற பெரிய புராண செய்யுட்களை 'மணக்கும் மணக்கும்...' என்று (பாடல் 26) மகிழ்ந்து பாராட்டினார்.

மணத்தல் என்பதற்கு மிகுந்திருத்தல் என்பது பொருளாகும். மணம் வீசுதல், மணம் புரிதல், கலத்தல், கலந்திருந்தல் என்ற பொருள்களும் அதற்கு உண்டு.

கீதாஞ்சலியில் தெய்விக மணம் யாண்டும் நிர்ந்து நிற்கிறது. தலைவன்-தலைவி மெய்ப்பாட்டில் கடவுளின் கைத்தலம் பற்றி ஐக்கியம் அதற்கு ஏங்கும் கனவும் அது கைகூடப் பெறாமையின் தவிப்பும், கைகூடப் பெறுதலின் மகிழ்வும், விட்டு நீங்கினமையின் துயரமும் ஆகிய ஏற்ற இறக்கங்கள்—எழுச்சி வீழ்ச்சிகள்-மரபியலான நம் இலக்கியப் பாங்கில் காலத்திற்கு ஏற்பப்புதுக் கோலம் பூண்டு உணர்ச்சிச் சித்திரங்களாக வந்துள்ளன. பக்தி மணத்தோடு இயற்கையின் நறுமணமும் அதன் பாக்களில் மருவியிருக்கிறது.

ஆகவே ''தெய்வ மணக்கும்'' என்ற சிறப்புத் தொடரை-மகா வித்துவான் வாக்கை—கீதாஞ்சலிக்குச் சூட்டி மகிழ்வது பொருத்தம் உடையதே ஆகும்.

கவிஞர் தாகூரும், தம் பாடல்கள் எல்லாமும் இறைமை நோக்கின-தெய்வ மணப்பன-என்பதற்குத் தாமே சான்று பகர்கிறார் என்பதும் ஈண்டுக் கருதத் தக்கது.

பாடல் 75 பின்வருமாறு பேசுகிறது;

The river has its everyday work to do and hastens through fields and hamlets; yet its incessant stream winds towards the washing of the feet.

The flower sweetens the air with its perfume; yet its last service is to offer itself to thee.

Thy worship does not impoverish the world.

**From the words of the poet men take what meanings please them; yet their last meaning points to thee.**

□ ஆன்ம சுகம் தருவதில் கீதாஞ்சலி சிறந்து நிற்கிறது. கீதாஞ்சலியை உலகுக்கு அறிமுகம் செய்த மூலவர்களில் ஒருவர் கவிஞர் யேட்ஸ் (William Butler Yeats). அவர் ஆங்கிலக் கீதாஞ்சலிக்கு நீண்டதொரு முன்னுரை வரைந்துள்ளார். தம்மிடம் வங்காளி மருத்துவர் ஒருவர் உரைத்தனவாக அவர் அதில் குறிப்பிடுபவற்றுள் பின் வரும் வாக்கியமும் வருகிறது:

I read Rabindranath everyday, to read one line of his is to forget all the troubles of the world.

அதே மருத்துவர் இன்னொரு செய்தியையும் யேட்ஸிடம் தெரிவித்தார். அது வருமாறு :

‘Words can never express what I owed at seventeen, to his love poetry. After that his art grew deeper. It became religious and philosophical;all the aspirations of mankind are in his hymns. He is the first among out Saints who has not refused to live, but has spoken out of Life itself and that it is why we give him our love.’’.

மனப் பக்குவம், மானுட நேயம், துயரத்திற்கு இளை யாமை, மரணத்துக்கு அஞ்சாமை, மாநில வாழ்வு பயனுற வாழ இறையுணர்வு, மாசறு காட்சி என்பவற்றின் இசைப் பூங்காவாகப் புத்துணர்வு தந்து கொண்டிருக்கிறது. கீதாஞ்சலி. ஆகவே யேட்ஸ் சற்று அதிகமாகவே பரவசப் பட்டு அதனைத் தம் முன்னுரையில் பாராட்டினார்.

☐ இன்றும் அது அன்பர்க்கும் அறிஞர்க்கும் வாசகர்க் கும் நீக்கமற இன்ப ஆன்பும் இறைவலிமையும் தந்து வருகிறது, என்றும் அவ்வாறே தந்து வரும் என்பது திண்ணம். அறிஞர் மு வரதராசனார், கீதாஞ்சலியைத் திரும்பத் திரும்பப் பன்முறை ஓதினார் என்று பேராசிரியர் இலெ. செ. கந்தசாமி 'தினமணியில்' தான் எழுதிய கட்டுரை ஒன்றில் எடுத்துக் காட்டியிருந்தார்.

இத்தகைய இறையின்ப நூல் தமிழறிந்தார் யாவர்க்கும் பயன் தருதல் கருதி இந்த விளக்கநூல் வருகிறது.

☐ கீதாஞ்சலி முதனூலின் பெருமை கவிஞர் தாகுருக்கு உரியது. விளக்கங்களின் பெருமை அவற்றை ஆங்கிலத் தில் தந்த நூலோர்க்கு உரியது. தமிழில் தருகிறோம் என்ற மகிழ்ச்சி ஒன்றே எங்களுக்கு உரியது. அதுவும்

Give me the strength to make my love fruitful in service [36]

என்ற கீதாஞ்சலி வாக்கால் வந்த ஊக்கத்தின் விளைவே யாகும்.

இதனை வெளியிட வளம் தந்த பெருமை திருமலை திருப்பதிப் பெருமானுக்கு உரியது. வணக்கம்.

இரா. இராசகோபாலன்

# கீதாஞ்சலியின் உலகளாவிய கவர்ச்சி - சில காரணங்கள்

## உலகப் புகழ்

கீதாஞ்சலி முதன் முதலாக 1912-13 இல் ஆங்கிலத்தில் வெளிவந்ததும் அது மேலை உலகைச் சூறாவளியாக அள்ளியது. மதிப்பு மிக்க நோபெல் பரிசை அது கவிஞர் தாகுருக்கு வாங்கித் தந்தது. உலக மொழிகள் பலவற்றில் அது மொழியாக்கம் பெற்றது. பல கவிஞர், திறனாய்வர்களின் வெளிச்சமான பாராட்டை அது பெற்றது. வங்கக் கவிஞர் தாகுர் இந்தியக் கவிஞரானார்; உலகக் கவிஞர் ஆனார்.

கீதாஞ்சலி வெளிவந்த நாள் முதல் அது ஏராளமானவர்களுக்கு அமைதியும் ஆறுதலும் அளிக்கும் ஊற்றாதாரமாக விளங்கி வருகிறது. அதன் புகழ் சற்று மங்கினாற் போல் தோன்றினும் அதன் உலகளாவிய கவர்ச்சி - மாந்திரிக வசியம் -இன்றும் வையம் தழுவியதாக நீடித்து வருகிறது. அதற்குக் காரணங்கள் சில உண்டு.

## கட்டமைப்பு

கீதாஞ்சலியில் உள்ள தன்னுணர்ச்சிப் பாக்கள் ஒவ்வொன்றும் முழுமையானவை. அவற்றைத் தனித் தனியே படித்துச் சுவைத்து இன்புறலாம். அதே சமயம் அவற்றைத் தொகுப்புத் தொகுப்பாக வைத்துப் படிக்கும் போது ஒரு பாடலின் பொருளை இன்னொன்று விளக்குவதாக உள்ளது; முன்னதும் பின்னதும் பொருள் தொடர்பு கொண்டு துலக்கி நிற்கின்றன.

ஒவ்வொரு தொகுப்பும் வரன்முறையாகவும் ஒன்றை ஒன்று அவாவி நிற்குமாறும் அமைவு பெற்றுள்ளன. ஒவ்வொரு தொகுப்பும் ஒரு பொதுவான அடிக் கருத்தால் இணைந்திருக்கிறது. அவ் வகையில் கீதாஞ்சலிப் பாக்கள் ஏழு தொகுப்பாக உள்ளன.

**1.** முதல் தொகுப்பு **[1-7]**: இதில் கடவுளின் எல்லை யற்ற நிரந்து பரந்த அன்பு, அவரது கொடைகள், அவருக்கும் மனிதனுக்கும் - கவிஞருக்கும்-உள்ள நெருக்க மான அன்பு என்பன வெளிப்படுத்தப்படுகின்றன.

**2.** இரண்டாம் தொகுப்பு **[8-13]**: இது கடவுளை உணர்தற்கு உரிய வழியைக் கூறுகிறது. மானிட நேயம் இன்றியமையாதது, உழவர் சாலை அமைப்போர் மண் ணின் எளிய மைந்தர் ஆகியோரிடைக் கடவுள் காணு மாறு உள்ளார்.

**3.** மூன்றாம் தொகுப்பு **[14-36]** கடவுளோடு ஐக்கிய மாதற்குக் கவிஞர் கொண்ட பேராவல் இதில் அதிகம் பேசப்படுகிறது. பிரிவின் துயரமும் ஐக்கியத்திற்கு இடைப்படும் தடைகளும் விவரிக்கப் படுகின்றன.

**4.** நான்காம் தொகுப்பு **[37-57]** உண்மையில் கடவுட் கலப்பு வாய்க்கப் பெற்றதும் கவிஞரின் உவகை கங்கு கரையற்றுச் செல்கிறது. விடுதலை உணர்ச்சி கொள் கிறார் கவிஞர். அந்த விடுதலை உணர்ச்சியைத் தேச விடுதலைக்கும் தருகிறார். உவகையின் உறப்பு இந்தத் தொகுப்பில் பலவாறு வெளியீடு பெறுகின்றது.

**5.** ஐந்தாம் தொகுப்பு **[58-70]**: ஐக்கியத்தின் மகிழ்ச்சி ஒருதலைப் பக்கமானது அன்று. கடவுளும் அதில் இன் புறுகிறார். அவர் இங்குத் தனிப் பொருள்போல் இருக் கிறார். காணும் உலகு அவரது மாயையாக-அவரை மறைக்கும் மாயையாகக் காணப்படுகிறது.

**6.** ஆறாம் தொகுப்பு **[71-83]** மாயை. உண்மையுள்ள மாயையாக இருக்கிறது. பிரிவாகிய தளைப்பினால் தான்-அந்தத் தளைப்பின்கண் தான்-மனிதன் கடவுளை அடைய முடியும். கடவுளின் பணிக்கும் கடவுள் நேயத் துக்குமாக ஒருவன் தன்னை முழுக்க ஒப்படைத்துவிட வேண்டும். அதனால் முழுமை என்பது எங்கும் நீக்கம் அற இருப்பதனை உணரலாகும்.

**7.** ஏழாம் தொகுப்பு **[79-103]** பிரிவுணர்ச்சியே-தனிமை உணர்ச்சியே-துயரத்திற்குக் காரணம். அது மனிதனுக்கு

வரும் பரம்பரை நிலைக்கூறு; வாழ்க்கையின் கசப்பான உண்மை. தன் வாழ்வின் விளைபயன்களை விட்டுநீத்து இறைத் தூதனாகிய மரணத்தின் வழிச் சென்று என்று முள தெய்விக மாளிகையில் புகுதலால் பிரிவுத்தன்மை விலகும்.

இத்தகைய கட்டமைப்பு ஒழுங்கு கீதாஞ்சலியின் சிறப்புக்கு ஒரு காரணமாக உள்ளது.

**பக்தி அனுபூதி இலக்கியம் – எளிமை**

கீதாஞ்சலி மகத்தான இந்திய மரபில்—சைவ வைணவ மரபில்-வந்த இறையன்பு இலக்கியமாகும். ஆயினும் பக்தியாகிய அடிக்கருத்தைக் கையாளுவதில் புதுமையும் தற்சுதந்திரமும் அதில் காணப்படுகின்றன. தாய்-குழந்தை அன்பு, தலைவன்-தலைவி அன்பு என்ற மெய்ப்பாடுகளில் பாடல்கள் உள்ளன. உபநிடதங்கள் பகவத்கீதை ஆகியவற்றின் செல்வாக்கு பரவலாகக் காணப்படுகிறது. இவ் வகையில் தொல் இந்தியாவின் தத்துவத்தையும் சிந்தனையையும் தன்பாற் கொண்ட ஆன்மிகமும் அனுபூதியியலும் கீதாஞ்சலியில் ஊறிப் பொதும்பி யுள்ளன. இந்தியாவின் தனி மணம் அதில் கமழ்கிறது அது தனிக் கவிதை அல்லது தூய கவிதையாக—வழிபாட்டுப் பண்பு சார்ந்த கவிதையாக விளங்குகிறது. "இத்தகைய கவிதை, பாதி கீழிருந்து வழிபடலாகவும் பாதி மேலிருந்து இரகசிய ஒலியாகவும் இருக்கும்; வழிபாடு விடையை எழுப்பும், இரகசிய ஒலி வழிபாட்டைக் கிளப்பும்; இவ்வாறு வழிபாடும் இரகசிய ஒலியும் பாடலாகப் பண் பாடும்".

இத்தகைய இலக்கியம் இந்தியர்க்குப் பழக்கமானது; அயலார்க்குப் புதியது. எனவே கீதாஞ்சலி, பழக்கப்பட்ட தன்மையினால் இந்தியாவில் பெயர் பெற்றது; அதன் புதுமை அயல் நாட்டார்க்கு விருந்தாக அமைகின்றது.

ஐக்கியம் ஆதல், இறையோடு ஒருமைப்படல், எல்லாவற்றிலும், ஒரே தன்மையைக் காணல், என்பவற்றை இயல்பு எழுச்சியாலோ அனுபவத்தாலோ உணர்வது அனுபூதியின் முக்கியமான பண்பாகும். அது கீதாஞ்சலியில் தொடக்கம் முதல் இறுதிவரை ஆட்சி புரிகிறது.

பக்திக் கவிதையில் ஆன்மிகமும் அனுபூதியமும் உன்னத மான நவிற்சி பெறுகின்றன. ஐக்கியம் என்ற கருத்து, காணும் உலகின் பொருள்கள் யாவும் ஒரு தெய்விகத்தின் வடிவங்கள், புலப்பாடுகளே; புறத்தோற்றங்கள் தற்காலி மானவை, அவை பற்றி அறிவிக்கும் ஆன்மா நிரந்தர மானது என்ற கொள்கைக்கு இட்டுச் செல்கிறது.

அனுபூதியம்* என்பது ஆழமும் செறிவும் உடையது. அது கீதாஞ்சலியில் எளிமையாக இழைந்திருக்கிறது. ஆகவே இனிமையும் கவர்ச்சியும் பெற்றிருக்கிறது. சொற்களும் சொற்கோப்பும் எளியவாக-செட்டாக-நாமிருக்கும் புவியோடு மிகத் தொடர்புடையவாக இருக் கின்றன. நீண்ட வாக்கியங்கள், பின்னல் சுழற்சிகள் இல்லை. நடை எளிதாக இன்னோசைத்தாக இருக் கிறது. கவித்துவ உரைநடை மிக நன்றாக அமைந் துள்ளது. மந்திரம் போன்ற ஆற்றல் அதில் காணப் படுகின்றது.

நாட்டுப்புறப் பாட்டின் இனிய சந்தமும் அதில் இயைந் திருக்கிறது. அன்றாட வாழ்வின் பொருள்களில் வேர் கொண்டு இருப்பதால் கவிதை மனித நெஞ்சுக்கும் செயலுக்கும் இணக்கமாக இருக்கின்றது.

வகைமையும் வளமும்

கீதாஞ்சலிப் பாக்கள் பொதிபொருளிலும் உரைக்கும் முறையிலும் வளமும் வகைமையும் மிக்கு இருக்கின்றன. நூற்றுக்கு மேற்பட்ட அதன் பாக்கள் தெய்விகத் தேட்டம் என்ற பொன் நாணால் இணைக்கப்பட்டிருப்பினும் கூறப்படும் கருத்துக்கும் உளப்பாங்குக்கும் ஏற்ப அவை அளவும் உணர்ச்சியும் வேறுபட்டு விருந்து அளிக்கின்றன. சிறிய தன்னுணர்ச்சி ஓலம் என்பது முதல் நாடகக் குட்டிக் கதைகள் வரை வகைமை செல்கிறது; தொடர் உருவகம் முதல் அலங்கார நவிற்சி வரை அது விரிகிறது.

நடையும் வகை வேறுபாடு கொண்டு திகழ்கின்றது. சில நொடிகளின் தன்னுணர்ச்சி செறிவு கொண்டு சிறகு அடிக்கின்றது. திரும்பத் திரும்ப இசைக்கும் சந்த அழகு, முற்றுமோனை, எதுகை ஆகியன தக்கவாறு பொருட் பொருத்தத்தோடு இனிமை தருகின்றன. ''அவனது

---

* Mysticism

சந்தடியற்ற காலடியை நீ கேட்கவில்லையா? அவன் வருகிறான் வருகிறான் எக்காலும் வருகிறான்'' ''ஒளி, என் ஒளி, உலகை நிரப்பும் ஒளி, கண்ணை முத்தமிடும் ஒளி, நெஞ்சைத் தித்திக்க வைக்கும் ஒளி'' என்பன ஓரிரு இடங்கள்.

இருப்பினும் வலிமையான கதை கிளத்தல் கூறு தேவையாக இருக்கையில் கவித்துவ உரைநடை பொருத்தமாகக் கற்பனைப் பூமிக்கு நகர்கிறது. ''கிராமத்துப் பாதையில் நான் வீடு வீடாகப் பிச்சை எடுத்துக் கொண்டு சென்றேன். உனது தங்க-ரதம் தொலைவிலே ஒளிவண்ணமான ஒரு கனவு போலத் தோன்றியது. இந்த இராசாதி ராசன் யார் என்ற வியந்தேன்'' என்பது, ஒரு சான்று. எல்லாவற்றுக்கும் மேலாக உரைக்கும் முறை எந்த நிலைமைத்தாக இருப்பினும் எப்பொழுதும் அங்கே சொல்லாட்சிக் கட்டுப்பாடு. படிமத் திட்பம், விட்மன் சிறப்பாக இருக்குமிடங்கள் போலப் பிழைபடாத சந்த ஒழுங்கு உணர்வு ஆகியன இருக்கின்றன. மிக அமைதியான தொனி, ஓசைப்படாத இணக்கங்கள், வீறும் வேகமும் ஆக இருப்பதை விட நயமும் நளினமுமாக இருக்கின்றன என்ற பொதுப் பாங்கு ஆகியவற்றைக் கீதாஞ்சலிக் கவிதையில் காண முடிகின்றது.

**புலன்களால் உணரத் தகும் — பருப் பொருளான — காட்சிகள், படிமங்கள்**❋

கீதாஞ்சலியின் படிமப்பாங்கு, தெள்ளத் தெளிவாக, பருப் பொருளாக, ஓவியம் போன்று விளங்குகிறது. தாகுர் அனுபூதி நெறி நின்ற ஞானி என்றாலும் அவரது ஆன்மிக, அனுபூதிக் கருத்துக்களை அவர் தெளிவாக, உய்த்துணர வைக்கும் உயர்ந்த படிமங்களால் காட்டுகிறார். கீதாஞ்சலி புதிய, தன்முதலான, பொருளுள்ள படிமங்களின் கருவூலமாக இருக்கிறது; இந்திய மணம் கமழ்ந்து பொலிந்து திகழ்கிறது.

படிமங்களிற் பல இயற்கையிலிருந்து வரப்பெற்றனவாகும். பறவைகள் மலர்கள் வானம் விண்மீன் வெங்

---

❋ படிமங்கள் - Images ஆன்மிகம் : Spiritualism
அனுபூதியம் : Mysticism

கதிர் தண்மதியம் கடல் ஆறு நீரோடை ஒளி இருள் நம் நாட்டின் பருவ காலங்கள் மேகம் மழை முதலியன திரும்பத் திரும்ப வந்து ஆன்மிகத்தையும் அனுபூதியத்தையும் குறிப்பால் புலப்படுத்துகின்றன.

திரும்பும் திசை எல்லாம் இயற்கையிற் கண்டெடுக்கப் பட்ட படிமம் இன்பத்தின் ஆதாரமாக அமைகிறது. மேகங்கள், குழந்தையால் மிதக்க விடப்படும் காகித ஓடங்கள் ஆகின்றன. மின்னல் இறைவனின் ஒளிர் வாளாகின்றது. நட்சத்திரங்கள் அவனது கழல் வளையம் ஆகின்றன. இந்தப் பூமி ஒரு வீடாக இருந்தது. நாள்கள் முடிந்ததும் கதவுத் திறவு கோல்களை ஒப்படைத்துவிட்டு அறியப்படாத அப்பால் உலகிற்கு அவர் புறப்படுவார். அந்த உலகமும் இனிதாக இனிக்கும். தாயின் ஒரு பக்க மார்பில் பாலருந்திய குழந்தை இன்னொரு பக்கம் பாலருந்த விடப்படுவது போன்றது அந்த உலகத்தை அடைவது. வாழ்க்கை ஒரு நெடும் பயணம். படகின் சுக்கானைக் கையாளும் கவிஞரை மரணம் என்பவன் மாற்றிவிடுகிறான். சுக்கானைக் கையாளக் கடவுள் வந்து விடுகிறார். இவ்வாறாக உருப்படியான படிமங்கள் புதுமையுள்ளனவாகப் பொலிகின்றன.

அவ்வாறே இந்நூலில் வரும் கதைப் புனைவுகளும் மிகத் தெளிவாக எளிமையுடன் காட்சி தருகின்றன. தாகமுள்ள வழிப் போக்கன் பருகத் தண்ணீர் கேட்டதும் அந்த மாது மெய் சிலிர்க்கிறாள் (பாடல் 45). அவனுக்குக் கொடுத்துத் திருப்தியுறுகிறாள். அவள் தண்ணீர் ஊற்றும் பொழுது தலைக்கு மேலே இலைகள் சலசலக்கின்றன. குயில் எங்கோ ஓர் இருண்ட இடத்திலிருந்து பாடுகிறது, வளைந்த வீதியிலிருந்த வேலா மரங்களின் மலர்கள் மணம் வீசுகின்றன. இலைகளின் சலசலப்பு, சிலிர்ப்பின் பரவுதலையும் இருண்ட இடத்துப் படிமம் மருமத்தையும் காட்டுகின்றன. வேலா மலர்களின் மணத்தைக் குறிப்பிடுதல் வழக்கமில்லை ஆதலின் அதில் வழக்கமின்மையும் தொட்டுக் காட்டப் படுகிறது. பயணி போய் விடுகிறான். அந்தப் பெண்ணைச் சோர்வு பற்றிக் கொள்கிறது. அப் போது "காலை நேரம் தாமதம் ஆக உள்ளது; பறவைகளைப்புடன் பாடுகிறது. தலைக்கு மேல் வேப்ப இலை

கள் சலசலக்கின்றன. நான் உட்கார்ந்து நினைந்த வாறிருக்கிறேன்'' என்று அவள் சொல்கிறாள். குறியீட்டுப் பாங்கில்* இனிய பொருள் பொதிந்த அன்பு நாடகம் இவ்வாறு நடக்கிறது. அதில் அனுபூதியத்தைக் கண்ணுக்கு முன் கொண்டுவரும் முயற்சியும் இணைந்திருக்கிறது.

சில ஒத்திசைவுகள்

தன் கருத்துக்களை விளக்குதற்கு இயற்கையைப் பயன் படுத்துவது போன்று தாகுர் மானிட வாழ்க்கையின் செய்திகளை இயற்கை நிகழ்ச்சிகளை விளக்குதற்குப் பயன்படுத்துகிறார். நம் ஊர்களில், காலை வழிபாட்டிற்கு மகளிர் பூப்பறிக்கச் செல்லுதலும் மாலையில் கிணறு குளங்களிலிருந்து தண்ணீர் எடுத்து வரக் குடங்கள் கொண்டு போதலும் இயல்பு. இந்தப் பொதுவியலான சித்திரங்களைக் காலை விடிவதற்கும் மாலையின் வருகைக்கும் கவிஞர் பயன்படுத்துகிறார். இவ்வாறாக (பாடல் 67) காலை (மாது) தன் வலக் கையில் பொற் கூடை ஏந்திப் பூமிக்கு முடிசூடச் சத்தமின்றி வருகிறாள். மாலை (மாது) இளைப்பாறலாகிய மேலைக் கடலிலிருந்து அமைதியாம் நீர் உள்ள தன் பொற்குடத்தை ஏந்தி வருகிறாள்.

இந்திய நாகரிகத்தின் தனித் தன்மை, கவிதை அன்றாட வாழ்வோடு நெருக்கமுடையதாக இருப்பதாகும். அவ் வாறே இவரது கவிதை அன்றாட வாழ்வின் அடிப்படைகள் – இலை தழை புல் பூ பிறப்பு இறப்பு-என்பவற்றோடு நெருக்கமாக இருக்கிறது என்று மேலை நாட்டுப் புலவர் எழுதுகின்றனர். இரவீந்திரர் உலக வாழ்வைப் பழிக்காத அறவோருள் ஒருவர். அதனால் வாழ்வைக் காதலால் மணந்து கொண்டிருக்கிறது கவிதை என்றும் அறிஞர் எழுதியுள்ளனர். இவரது பாக்களில் உணர்ச்சியும் எண்ணமும் ஒத்திசைந்து இருக்கின்றன. சமயமும் தத்துவமும் கைகோத்திருக்கின்றன. ''சமயமும் கவிதையும் ஒன்றாகவே இருக்கும் ஒரு மரபு காலங்காலமாக

---

* குறியீடு : Symbol

வழிவழி வருகிறது; கற்றவற்றிலிருந்தும் கல்லாதவற்றி லிருந்தும் உருவகங்களையும் உணர்ச்சியையும் அது திரட்டி வந்திருக்கிறது. அது மீண்டும் கற்றோர் புனிதர் களின் எண்ணத்தை ஏந்தி ஏராளமான மக்கள்திரளிடம் கொண்டு போகிறது" என்று மேலைப் புலவர் கூறினர். இங்ஙனம் பார்க்கையில் தாகுர் சிறந்த கவிஞராக இருக்க ஒரு காரணம் கவிதா இனத்தில் வந்த ஒரு கவிஞர் என்பதும் ஆகும்.

## இறைமையை நேரிடையாகக் கொண்டுவரல்

கீதாஞ்சலியின் நிலைத்த கவர்ச்சி ஈர்ப்புக்குக் காரணம் அது முடிவிலாப் பொருளோடு நமக்கு நேரிடைத் தொடர்பு உண்டாக்குதல் ஆகும். வெறும் அருவமாகவோ குறிப்பிட்ட உருவமாகவோ அன்றிக் கீதாஞ்சலியில் இறைவன் எப்போதும் காணுமாறு எங்கும் பரந்து செல்வாக்குச் செலுத்துபவனாக உள்ளான். அவனை எண்ணிலா இயற்கை வடிவுகளில், விண்ணில், மண்ணில், காணலாம்.

சில போது தாமரையின் நறுமணத்தோடு அவன் வரு கிறான். கவிஞர் துயிலும் போது சில சமயம் அவன் யாழ் இசைக்கிறான். அவனது இன்னிசையைக் கவிஞர் துயிலிடைச் செவிமடுக்கிறார். இயற்கையின் பன்னூ றாயிரம் ஓசை ஒலிகளில் அவனது அழைப்பைக் கவிஞர் கேட்கிறார். சில சமயம் கவிஞரின் வீட்டுக்குப் புதிய னாக வருகிறான், சில போது காதலனாக வருகிறான். கவிஞரின் ஆன்மா தனிமையிலும் இருளிலும் அவனைச் சந்திக்கச் செல்கிறது. பரந்து இறைவன் நம் முன்னிருத் தல், அன்றாடம் பழக்கப்பட்ட பொதுப் படிமங்களின் தொகையால் குறிப்பாகக் கூறப்படுகிறது. கடல்மேற் பறக்கும்போது பேருருவப் பறவை சிறகு விரித்திருக்கும் படிமத்தால் இறைமையின் விரிவும் பெருநிலையும் உணர்த்தப்படுகின்றன. இறைவனின் சுடரொளி வாள் குறித்த எண்ணத்தை உண்டாக்கக் கவிஞர் மறைகதிரின் செவ்வொளி பட்ட விரிந்த கருடச் சிறகுகளைக் காட்டு கிறார். வியனுலகின் இனிய பேரிசை இருந்தாலும் இறைவன் கவிஞரின் எளிய இசையைக் கேட்க அவரது

குடிசைக்கு ஒரு பூவோடு வருகிறான். சுதந்திரம், மறைவுண்மை, பரந்த தன்மை ஆகியன கவிஞரின் கடவுள் ஐக்கியத்தால் வருவதைப் பல உருக் காட்சிகள் மென்னயத்தோடு உணர்த்துகின்றன.

## வெட்ட வெளியின் அமைதியான சுகம்

தீவிரமான காதல், பிரிவுத்துயர், கடுமையான ஆர்வம், வளம், வகைமை என்பன கீதாஞ்சலியில் மல்கியிருக்கின்றன. ஆனால் கவிதை முடிந்த முடிபாக அமைதியைத் தந்து செல்கிறது என்ற எண்ணம் மேலோங்குமாறு கீதாஞ்சலி இருப்பது, அதன் சிறப்புக்களில் ஒன்று. கடவுளைச் சந்திக்க வேட்கும் வேதனையான ஓலத்தையும் கூடக் கவிஞர் வெளிப்படுத்தும்போது சலனமற்ற சூழ்புறத்தைக் குலைத்து விடவில்லை. அவரது ஆழ்ந்த விருப்பு (பாடல் 38) அமைதியான வண்ணம் "எனக்கு நீ வேண்டும், நீயே எனக்கு வேண்டும்" என்று திருப்பித் திருப்பிச் சொல்வதால் அழுத்தம் பெறுகிறது. அதன் நிறைவான உறப்பு, "இரவு ஒளியின் ஐக்கியத்தை நாடுகிறது, கொந்தளிப்பான புயல் தன் நிறைவேற்றத்தை அமைதியில் நாடுகிறது" என்ற படிமங்களால் உய்க்கப் படுகின்றது. படிமங்கள் தக்கனவாக, ஓவியமாக மனங் கொள இருக்கின்றன; அதனினும் அவை வரம்போடு, அலங்காரச் சிக்கனத்தோடு இருப்பது, அதிகம் மனங் கொள்ளுமாறு இருக்கின்றன.

இவ்வாறாகக் கீதாஞ்சலியில் காணப்படும் பரபரப்பில்லாத – அமைதியான – சூழ்புறம் தெளிவும் அமைதியும் நிலவிக் குளிரும் திறந்த வெளியில் தென்றற் காற்றிடை இருந்து மகிழ்வது போன்ற மனஉணர்வைத் தருகின்றது.

## ஓர் ஆன்மிக சுயசரிதை

ஆன்மிகச் செல்வங்களோடு பொருட் செல்வமும் கலைஞானமும் பெருங்குணங்களும் வாய்க்கப் பெற்ற பெரிய குடும்பத்தில் பிறந்தவர் இரவீந்திர நாதர். அந்தக் குடும்பத்தின் அங்கத்தவர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் பேர் பெற்று விளங்கினர். ஒருவிதத் தனிமையில் வளர்ந்த தாகுர் நாளடைவில் பல்கலைச் செல்வராக

வளர்ந்தார். இசை ஓவியம் இலக்கியம் நாடகம் நடிப்பு ஆகியவற்றில் அவர் தேர்ச்சி பெற்றிருந்தார். தம் சாந்தி நிகேதனத்திற்குப் பொருள் சேர்ப்பதற்காகப் பின்னாளில் சென்னை உள்ளிட்ட பல பேரூர்களில் அவர் நாடகம் நடத்தியதோடு தாமும் நடித்தார் என்பதனைச் சிலர் கேள்விப்பட்டிருக்கலாம்.

அவர் பெற்ற கல்வி பெரும்பாலும் கட்டற்ற சுயமான கல்வியாகும். இந்த இயல்புகள்-திறமைக் கூறுகள்-இசை ஓவியம் நாடகப்பாங்கு பழைமையாம் கட்டுக் கிடையில் தேங்கிவிடாத தன்னுணர்வு, சுயேச்சையான சிந்தனை போல்வன அவரது கவிதையில் இருப்பது இயல்பே யாகும். ''அருங்கலை விநோதராக'', அருங்கலை வாழ்வினராக வாழ்ந்த தாகுர் சம கால இயக்கங்களிலும் கருத்தூன்றிப் பொதுச் சிந்தையும் முயற்சியும் கொண்டிருந்தார்.

கவலை என்பது இன்னது என்று அறியாதிருந்த கவிஞரை அவரது நாற்பதாவது வயதில் அவர் மனைவி தம் முப்பதாம் வயதில் ஐந்து குழந்தைகளை விட்டு விட்டு மறைந்தது அவருக்கு முதன்முதலாக வாழ்வின் கண்கூடான உண்மையை - கவலையை - உணர்த்தியது. அந் நிகழ்ச்சியை ஒட்டித் தன் பிள்ளைகள் உறவினர் தந்தையின் இறப்புகளும் தொடர்ந்தன. வெளி உலகில்-காதலில்-சிறகடித்துப் பறந்த கவிதைப் பறவை சிறகைச் சேர்த்துக் கொண்டு உள்ளுலகில் புகுந்து பறக்கத் தொடங்கியது.

இத்தகைய காலப் பிரிவில் எழுந்த கீதாஞ்சலியில் சோகம் சுதி கூட்டியுள்ளது. மரணம் பற்றிய பாக்களும் அதில் சேர்ந்தன. தம் மனத்துக்கு ஆறுதலும் அமைதியும் தரக் கீதாஞ்சலியைத் தொடுத்தார் என்பது தெளிவாக உள்ளது. அவ்வாறு இருப்பினும் சூழ்ந்த சோகத்தை வெல்லும் உள வலியும் உயிர் வலியும் கீதாஞ்சலியில் ஓங்கி எழுந்து அவருக்கு ஆறுதல் அமைதியோடு பெரும் மேன்மையும் தந்தன.

கீதாஞ்சலி ஆழ்ந்த அகவயமான கவிதையாகும். உள்ளக் கவிதை ஒரு வகையில் உள்ளங்கள் யாவற்றுக்கும் பொதுக் கவிதை என்று கூறலாம். அந்த வகையில் அது உலகக் கவிதையாக உள்ளது. அது தாகுரின் ஆன்மீக சுயசரிதையாக ஆன்மிக வளர்ச்சியின் படிநிலைகளைக் காட்டுவதாக விளங்குகிறது; டெனிசனின் 'நினைவாக' என்ற பாவரிசையில் அமைந்திருக்கிறது என்று கூறலாம். பல பாடல்களில் "நான்" என்று கவிஞர் தன்மை ஒருமையில் குறிப்பது அவர் தம்மை அல்லது அவரது ஆன்மாவை அல்லது உலக மக்களின் ஆன்மாவைக் கூறுவதாகவோ பிரதிபலிப்பதாகவோ இருத்தல் கூடும். பக்தி என்பது ஒன்றாயினும் உணர்வு - பக்குவம் - ஆன்மிக வளர்ச்சி- வேறுபடுவதால் கவிதைகள் ஒரு வயிரத்தின் பன்முகங்களாக அழகு தருகின்றன.

கவிஞர் தம் தாய்மொழியான வங்க மொழியில் நைவேத்திய (படையல்) கேய (ஓடம்) கீதாஞ்சலி (இசைப்பாவால் வணங்குதல்) என்ற மூன்று பாடல் நூல்கள் எழுதினார். அவற்றை அவர் வெளியிடு முன்பு வங்க இலக்கிய உலகில் அவருக்கு ஒரு நல்ல இடம் இருக்கத்தான் செய்தது. இருப்பினும் இவை அதனை உறுதிப்படுத்தின. அம் மூன்று தொகுப்பிலிருந்து 103 பாக்களை எடுத்து ஆங்கில ஆக்கம் தந்து கீதாஞ்சலி என்ற பெயரில் ராதன்ஸ்டீன் என்பாரின் உதவியோடு வெளிவரச் செய்தார்.

யேட்ஸ், எஸ்ர பவுண்டு போன்ற பெருங்கவிஞர்கள் ஆங்கிலக் கீதாஞ்சலி வெளிவருமுன் திருத்தங்கள் செய்து கொடுத்ததோடு பெரும் புகழுரைகளும் வழங்கினார்கள். இருப்பினும் ஆங்கிலக் கீதாஞ்சலியில் சில வழுக்கள் இருக்கின்றன என்று சொல்லப்படுகின்றது. ஆனால் திறனாய்வர்கள் வளமான பாராட்டுக்கள் தந்தார்கள். புதுமையை வரவேற்கும் நியாயமான இரசனையுள்ள ஆங்கில உலகம் அதனை வரவேற்றுச் சிறப்புச் செய்தது. வங்கத்தில் வெளிவந்த கவிதைப் பதிப்பு ஒருமுறை விற்பனையாகும் முன்பு ஆங்கிலக் கவிதைப் பதிப்பு பன்முறை அச்சாகி நாற்றிசையும் சென்றது.

மொழி பெயர்ப்பு வெற்றி பெறுவது கடினம்-மிகக் கடினம். அதிலும் கவிதை மொழி பெயர்ப்பு வெற்றி பெறுவது மிக மிகக் கடினம். ஆனால் கீதாஞ்சலி வெற்றி பெற்று இன்றும் அதன் சிறப்பை நிலை நாட்டிக் கொண்டு இருக்கிறது. தாகுரே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். வங்க மூலத்தின் இசை வெள்ளம் ஆங்கில வசன கவிதையில் வர முடியாது. வாசகங்கள் அப்படியப்படியே இடம் பெற முடியாது. சிலவற்றை மாற்றியும் திருத்தியும் மறுபடைப் பாக ஆங்கிலக் கீதாஞ்சலி ஆசிரியரால் ஆக்கப் பெற்றது.

'ஆங்கிலத்தில் எழுதிய இந்தியக் கவிஞர்' என்று புகழுக்கு மேலே 'ஆங்கிலக் கவிஞர்' என்ற நிரலில் இடம் பெற்று உலகக் கவிஞர் ஆக நிலை பெற்றுள்ளார் தாகுர்.

"உயர்கவிதை என்பது நிலையாக உள்ள மானிடத் துடிப்புகளை நிறைவான மொழியில் கூறுகிறது" என்றார் டி.எஸ். எலியட். அதனால் அது மானிட நெஞ்சிற்குப் புதுவதான ஆறுதலைக் கொண்டு வருகிறது. கீதாஞ்சலி எலியட்டின் வரைவிலக்கணத்தை நிறைவேற்றுகிறது. என்றும் இருக்கும் மானிடத் துடிப்புகளை அது நன்கு நவில்கிறது.

O

# கீதாஞ்சலி : சில அடிக்கருத்துகள்*

**தலைமை அடிக்கருத்து**

கீதாஞ்சலி அழிவிலாத ஒரு கலையாக்கம். அழகிய மாலை போல் அதில் பல அடிக்கருத்துக்கள் புனையப் பெற்றுள்ளன. அவற்றைத் தலையாய அடிக்கருத்து, துணையாய அடிக்கருத்து என்று பகுத்துக் காணலாகும்.

அவற்றுள் தலையாயது, நிலைபேற்றை நோக்கிய ஆன்மாவின் பயணம் ஆகும். இறைமையை உணர்தற்கான கவிஞரின் முயற்சிகள் இதில் பேசப்படுகின்றன. தனித் தனியான பாடல்கள் பலவற்றில் இறைமையை உணர்ந்து அடைவதற்காக அவர் செல்ல விரும்பும் நெறிகளை நாம் அறிகிறோம். அவற்றுள் முக்கியமானது தன்னை உணர்தலாகும். அது இறைவனை உணர்தற்கான படிநிலையாகும். தன்னை உணர்தல் என்பது தன்னைத் தூய்மைப் படுத்திக் கொள்ளுதல், விடா முயற்சி, இடைவிடா வழிபாடு, பக்தி, நேர்மை, எளிமை உயிர்களிடத்தும் இறைகையிடத்தும் நேயம் ஆகியவற்றைப் பயின்று தோய்வதன் மூலம் தன்னை உணரவும் அதன்பின் இறைமையை உணர்தலும் கூடும். தன்னைக் கடவுளின் விருப்புக்கு முழுமையாக ஆட்படுத்திக் கொண்டு விட வேண்டும். அதற்காக ஏதோ ஒரு இருண்ட மூலையில் அடைத்துக் கொண்டு மானிடத்தை விட்டு விலகிக் கொண்டு விடக் கூடாது. உலகின் இரைச்சல் ஆரவாரங்களிடை இருக்க வேண்டும். அன்பினால் தான் இறைவனை எய்த முடியும் என்பதால் அந்த அன்பினை, படைப்பிற் காணும் எல்லா உயிர்களிடத்தும் காட்ட வேண்டும். ஒருவன் தன் வையக் கடமையை நன்கு ஆற்றுவது இறைவனுக்கு உகப்பாக இருக்கும். கவிஞரைப் பொறுத்த வரை அவரது கடமை இறைவனின் திருச்சபை

* அடிக்கருத்துக்கள் : Themes

யில் பாடல்கள் பாடுவதாகும். 'நான் இங்கே நின்னைப் பாடுதற்காக வந்தேன்' என்கிறார் அவர்.

அத்துடன் கவிஞர் தன்னை ஓர் இசைக் கருவியாகக் கற்பனை செய்கிறார். அந்தக் கருவியை இறைவன் தன் விரல்களால் தடவித் தெய்விகப் பண்களை வாசிக்கிறான். கீதாஞ்சலியில் கவிஞர் ஆன்மிக விடுதலையைப் பாடு கிறார். அன்பும் தொண்டும் கொண்டு நிறை வாழ்வு வாழ்ந்தாரை மரணம் முழுமையின் பால் சேர்த்து விடுகிறது. உடற்கட்டினின்றும் விடுவித்து விடுகிறது.

நான்கு உலகங்கள்

கீதாஞ்சலியில் உள்ள நான்கு உலகங்களைத் திறந்து புலப்படுத்தியுள்ளனர் இலக்கியத் திறவோர். அவை (1) கடவுளும் மனிதான்மாவும், (2) கடவுளும் இயற்கையும், (3) இயற்கையும் ஆன்மாவும், (4) ஆன்மாவும் மானிடமும் என்பன. இவை ஒன்றோடொன்று பிணைப்புற்று இருக்கின்றன.

பாடல்கள் அனைத்தையும் தொகுதிகளாக வைத்துப் பார்க்க அவற்றின் மொத்தமான அடிக்கருத்துக்களைக் காணலாம். ஒவ்வொரு பாடலுள்ளும் ஓங்கலான தனி அடிக்கருத்து இருக்கவும் செய்கிறது. மொத்தத்தில் 'முடிவிலாப் பொருளுக்கு முடிவுள்ள பொருள் படைக்கும் படையல்' இந்நூல் என்ற திறவுரை பொருத்தமாக இருக் கிறது.

மனிதநேய உணர்வு

தாகுர் பிறவிப் பிரபு என்றாலும் கீதாஞ்சலியில் மானிட மதிப்பு, சமத்துவம் என்பன சிறப்பான பண்பாகப் போற் றப்படுகின்றன. 'பிரம்ம சமாச'த்தைச் சேர்ந்தவர், விடு தலை இயக்கங்களின் காற்றை நுகர்ந்தவர் என்பதால் அவர் காலங்காலமாக இந்திய மரபில் கறைப்பட்ட ஒதுக்கம், தள்ளியிருத்தல் என்பவற்றைக் கடிபவராக அன்பும் மனித மதிப்பும் சமத்துவமும் ஒவ்வொருவரிடத் தும் காட்டப்பட வேண்டும் என்பதைக் கீதாஞ்சலியில் சிறப்பாக இசைக்கிறார். மனிதன் சக மனிதனை அலட்சி யப்படுத்திவிட்டு இறைவனை உணர்தலை எதிர்பார்க்க முடியாது. ஏனெனில் இறைவன் புரோகிதர், அதிபர்

களிடம் இருப்பதை விரும்பாமல் நிலத்தை உழுவோர், சாலை சமைக்கக் கல்லுடைப்போர் ஆகியோரிடை இருப்பதை விரும்புகிறான். அவனது திருவடிகள் இல்லோர் எளியோர் இழந்தோரிடை நடையாடுகின்றன. கவிஞர் தம் தேயத்தின் விடுதலைக்காக மட்டுமல்லாது தம் தேயத்தார் உயர்ந்த மதிப்புகளையும் நோக்குகளையும் தம்மிடம் பண்படுத்திக் கொள்ள வேண்டும்-தேய்ந்து பாழ்பட்ட பழக்க வழக்கங்களைத் துறந்துவிட வேண்டும்-என்பதற்கும் ஆர்வம் பொங்க வழிபாடு செய்கிறார்.

## பிறர்க்கு அளித்தல் என்ற அடிக்கருத்து

ஒரு பாடலில் (பாடல். 50) கொடைபுரிதலுக்குச் சிறப்பளிக்கிறார். அதில் ஒரு கதை. கவிஞர் வீடு வீடாகப் பிச்சை எடுத்துக் கொண்டு செல்கிறார். சீர் மிக்க தேர் ஒன்றில் ஒளி மிக்க அரசன் ஒருவன் வந்ததைக் கண்ட அவருக்கு நம்பிக்கை உண்டானது. தன் வாழ்நாள் முழுவதும் வளமாக இருத்தற்குரிய செல்வம்-பிச்சை-அவன் தருவான் என்று நினைக்கிறார். ஆனால் தேரை விட்டு இறங்கிய அரசன் தன் கையை நீட்டி ஏதாவது கொடுங்கள் என்று கவிஞரைக் கேட்டதும் அவருக்கு வியப்பும் ஏமாற்றமும் உண்டாகின்றன. தன் பொதியில் இருந்தவற்றுள் மிகச் சிறு தானிய மணி ஒன்றை அவனுக்குக் கொடுக்கிறார். அன்று மாலையில் கடவுள் அவருக்கு ஒரு தங்கத் தானிய மணி பரிசளித்திருப்பது காண்கிறார். அவரது உள்ளம் கலக்கமும் தெளிவும் அடைகிறது. ஈதலின் மதிப்பை அவர் உணர்கிறார்.

## குழந்தைமை என்ற அடிக்கருத்து

குழந்தைகள் கடவுளுக்கு மிக நெருக்கமானவர்கள். கள்ளங் கரவு அற்ற அப்பாவிகளாகவும், உலகின் வஞ்ச வழிகளை அறியாதவர்களாகவும் அவர்கள் இருப்பது அதற்குக்காரணமாகும். கீதாஞ்சலியில் நன்கு அறியப்பட்ட பாடல் ஒன்று (பாடல் 60) குழந்தைமையைப் புகழ்ந்துரைக்கிறது. இந்தப் பேருலகைக் குழந்தைகள் விளையாட்டுக் களமாக நினைத்துக் கொள்கிறார்கள். சூதுவாது இல்லாத தங்கள் விளையாட்டுக்களை, வளர்ந்து விட்டோரின் தன்னலமான—கூலிக்கு மாரடிக்கும்—வழிகளை

அறியாராய் விளையாடுகிறார்கள். பெரியோர்கள் பணம் பண்ணுவதிலும் முத்தெடுக்க நீருள் மூழ்குவதிலும் மீன் பிடிக்க வலைவீசுவதிலும் சுறுசுறுப்பாக இருக்கையில் குழந்தைகள் மணல் வீடு கட்டுகிறார்கள், சிப்பிகளை வைத்து விளையாடுகிறார்கள். வணிகர்கள் தங்கள் கப்பல்களில் செல்கிறார்கள், ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குச் சரக்குகளைக் கொண்டு செல்கிறார்கள். குழந்தைகளோ காய்ந்து போன இலைகளை வைத்துப் படகு செய்கிறார்கள். சிரித்துக் கொண்டே அவற்றைக் கடலில் மிதக்க விடுகிறார்கள். குழந்தைகள் கூழாங் கற்களை வைத்து விளையாடுகிறார்கள். விளையாட்டு முடிந்ததும் அவற்றை வீசி எறிகிறார்கள். பெரியோர்கள் ஆசையோடு நகைகள் நாணயங்களில் பற்றுக் கொள்கிறார்கள். இயற்கைச் சக்திகள் குழந்தைகளிடம் மென்மையாக நடந்து கொள்கின்றன. அவர்களுக்கு அவை தீங்கு செய்வது கிடையாது.

அடுத்த கவி (61)யும் குழந்தைமையைப் புகழ்ந்துரைக்கிறது. உதடுகளில் புன்னகை மினுக்கிடும் தன் குழந்தையின் சாந்தமான துயிலைப் பற்றி ஒரு தாய் பாடுவது போல் இருக்கிறது அந்தப் பாட்டு. குழந்தைக்கு உறக்கம் மோகினிக் கிராமத்திலிருந்து வருகிறது. அங்கே அது காட்டு நிழல்களில் மின்மினி விளக்கேந்திய இடத்தில் குடியிருக்கிறது. குழந்தையின் புன்னகை, பனி கழுவிய காலைப் பொழுதின் கனவில் பிறந்து வந்தது. அதன் அங்கங்களில் காணப்படும் புதுமை - தளதளப்பு-இனிமை எங்கிருந்து வந்தது? அதற்குக் கவிஞரே பதில் சொல்கிறார். அவன் தாய் இளம்பெண்ணாக இருந்த காலத்து அவள் நெஞ்சில் மென்மையாக, மருமமாக இருந்த காதலிலிருந்து குழந்தைக்குப் பூமென் பொலிவு வந்தது. அடுத்த பாடல் (62) குழந்தைகளின் வண்ண விருப்பம், இனிமை விருப்பம் என்பவற்றின் காரணங்களைக் கற்பனை வளத்தோடு ஆய்கிறது. குழந்தையின் புன்சிரிப்பு வானில் உள்ள காலைக் கதிர் ஒளியினின்று ஓடிவரும் மகிழ்ச்சியின் ஓடையாக இருக்கிறது.

ஒரு பாடலில் (8) குழந்தைகள் தங்களது எளிய இயற்கை விளையாட்டுக்களை விளையாட விட்டுவிடுமாறு

பெற்றோர்களுக்கு வேண்டுதல் புரிகிறார் கவிஞர். ஆடை அணி அலங்காரம் குழந்தையைக் கட்டுப் படுத்துகிறது, அவர்கள் மானிடச் சந்தையில் களித்திருப்பதற்கான உரிமையை அது பறித்துவிடுகிறது என்கிறார் அவர்.

குழந்தைமை, இறைமையின் அவதாரம் ஆகும். வயதானோர் தம் இலட்சியமாகக் கொண்டு பின்பற்றுமாறு குழந்தைகள் இருக்கிறார்கள்; இறைமையை உணர்தற்கு உதவியாக இருக்கிறார்கள்; தாகுரின் இவ்வாறான குழந்தைமைச் சிந்தனை வேட்ஸ்வொர்த்தின் குழந்தை-மைச் சிந்தனை போன்றே இருக்கிறது.

பக்தி – அடிக் கருத்து

கீதாஞ்சலி என்ற நூல்-தலைப்பே நூலின் இறையன்பு அடிக்கருத்தை பொதிந்து வைத்திருக்கிறது மனிதான்மா தெய்விகத்தின் கூறு என்றாலும் அது அதனைப் பெரும் பாலும் மறந்துபோகிறது. ஆனாலும் அதனோடு ஒன்றி விடுதற்கான விருப்பம் ஆன்மாவினுள் இருந்துகொண்டே யிருக்கிறது உலகியலின் இழுப்புகள்-தள்ளுகள்—அதனை அலைக்கழிக்கின்றன. இந்த இடும்பையினின்று விடுபட மனிதனுக்கு வலிமை தரும் ஆதாரமான இறையிடம் உதவி கேட்டுக் குறையிரப்பதாலும் அதனிடம் உண்மையான ஈடுபாடு காட்டுவதாலும் அதற்கான வலிமை வருகிறது. இந்தப் பார்வையில் வைத்துப் பார்க்கையில் கீதாஞ்சலிப் பாக்கள் நம் நாட்டில் இருந்த மீரா, கபீர் போன்ற மெய்யடியாரின் பாமரபில் இருப்பது அறியுமாறு உள்ளது. கடவுள் நாட்டம்-கடவுள் தேட்டம்-பல வடிவு கொள்கிறது. சில சமயம் கவிஞர் மணாளனுக்காகக் காத்திருக்கும் மணப் பெண்ணாக இருக்கிறார். சிலவற்றில் தலைவனைச் சந்திக்கக் குறியிடம் நாடிச் செல்லும் தலைவியாக இருக்கிறார். கடவுளிடம் வேண்டுதல் செய்வது அவரது தேவைகளுக்கு ஏற்ப வேறுபடுகின்றது. ஒரு பாடலில் (36) அவர் இறைவனைச் சந்திக்கத் தன் ஆன்மிக வறுமை தடையாக இருப்பதை உணர்ந்து அதனைப் போக்கி மேலாம் பண்புகளைத் தந்தருளித் தகுதிப் படுத்துமாறு வேண்டுகிறார்:

> என் இன்ப துன்பங்களை இலேசாகத் தாங்கிக்
> கொள்ள வலிமை யருளுக

என் காதல், தொண்டில் பயன் தருமாறு
வலிமை யருளுக
எளியோரை மறுக்கவோ வலியோர்
முன் மண்டியிடவோ செய்யாத
வலிமை யருளுக
அன்றாடச் சிறுமைகளுக்கு மேல்
என் மனம் உயர்ந்தெழ வலிமை யருளுக

பாடல் 5இல் கவிஞர் சற்றே தனக்கு ஒரு சலுகை தருமாறு இறைவனிடம் கேட்கிறார். இறைவனை விட்டு விலகியிருக்குங் கால் அவரது நெஞ்சு அமைதி யிழந்திருக்கிறது. அவரது முடிவிலாக் கடமை முடிவிலாத் தொல்லையாக வெறுப்பளிக்கிறது. ஆகவே அவருக்கு இறைவன் தன் அருகே இமைப்பொழுது இருக்கும் சலுகையைத் தரவேண்டுகிறார். இறைவன் முன்னிலையில் கவிஞர் இருந்தால் அவர் அவனிடம் தன்னை முற்றாக ஒப்படைவு செய்து கொள்வார். சில சமயங்களில் கவிஞர் உலகின் கவர்ச்சிகளைத் தாங்கவும் தடுக்கவுமான வலிமையை வேண்டுகிறார். தனது கோரிக்கைகளில் அற்பமானவற்றைத் தராமல் மறுத்துக் கடவுள் கருணை புரிந்ததற்கு நன்றி தெரிவிக்கிறார். பாடல் 35 இல் தன் அகந்தை ஒழிப்புக்கு வேண்டுதல் புரிகிறார். கடவுளை எப்பக்கமும் காணும் வலிமையளிக்கும் கூறு தன்பால் இருக்கவும் ஆணவக் கூறு தன்னை விட்டு நீங்கவும் கேட்கிறார். தனக்கு முழு விடுதலை வேண்டும் என்று அவர் கேட்கவில்லை. கடவுளோடு கட்டுண்டு இருக்கத் தொழுது கொள்கிறார்.

பாடல் 35 இல் அவரது தொழுகை தன் பொருட்டாக இருக்கவில்லை; தன் நாட்டார் பொருட்டு இருக்கிறது. தன் நாட்டார் சுயமரியாதையும் பகுத்தறிவும் முற்போக்கும் உடையராக இருக்க விரும்புகிறார். பாடல் 38 இல் அவரது பக்தி மெய்ப்பாடு நன்கு தெரிகிறது. உவமைகள் பொருந்த அவர் அதில் விளம்புகிறார். கடவுளை விரும்பி அவர் மந்திர செபம் செய்கிறார். “இரவு தன் இருளிடை விடியலுக்கான விண்ணப்பத்தை வைத்திருத்தல் போல் என் உள்ளுணர்வு - நனவிலியுள்ளம் - ‘எனக்கு நீ வேண்டும் நீயே வேண்டும் என்று ஓலமிட்டு ஒலிக்கிறது” என்கிறார்.

அடுத்த பாடலில் அவரது அழகான வேண்டல்களில் ஒன்று, தெய்விக அருள் - தூண்டுதல் தனக்கு வேண்டும் என்று கேட்கும் போது வருகிறது.

> என் நெஞ்சம் காய்ந்து உலர்ந்த போது கருணை மழையாக வருக.
>
> என் பிச்சைக்கார நெஞ்சம் மூலையில் அடைத்துக் கொண்டு சுருண்டு உட்கார்ந்திருக்கையில் கதவை உடைத்துக் கொண்டு என் அரசே வருக, அரசனுக்கு உரிய படாடோபத்தோடு வருக.

பக்தியின் ஒரு கூறு கடவுள் அளித்த பரிசில்களுக்கு நன்றி உணர்வதாகும். பல பாக்களில் இச் செய்தி காணு மாறு உள்ளது. பாடல் 75 ஒரு சான்று. கடவுள் தரும் பலவாம் கொடைகள் மானிட உயிரின் தேவைகளை நிறைவு செய்கின்றன. ஆனால் அவை அப்படியே குறையாமல் குன்றாமல் கடவுளிடமே திரும்பப் போய்ச் சேர்ந்து விடுகின்றன. சில பாக்கள் கவிஞரின் சாவுக் கோரிக்கையை உணர்த்துகின்றன. சாவு, வாழ்வின் முழுமைக்கு இட்டுச் செல்கிறது என்கிறார் அவர். மரணம் ஒரு தனி அடிக் கருத்தாகக் கவிஞரின் பாக்கள் சிலவற்றில் நிகழ்வுறுகின்றது.

### இசை என்ற அடிக்கருத்து

தாகுர் கவிஞர் மட்டுமல்லர், இசைஞரும் கூட. கீதாஞ்சலிப் பாக்கள் பல இசையோடு தொடர்பு கொண்டிருக்கின்றன. இறைவனை உணர்தற்காம் சாதனங்களில் இசையும் ஒன்றாகும். நமக்குத் தொழில் இசைத்தல் என்று கவிஞர் சாற்றுகிறார். இசைத்தலின் வாயிலாகத் தான் அவர் இறைவனை உவப்பித்தல் இயலும். இறைவன் இசைக் கோமானாக - பேரிசை வாணனாக — இசைக் குருவாக - விவரிக்கப்படுகிறான், அவன் இசைப்பதைக் கவிஞர் பெருவியப்போடு பார்க்கிறார். சில போது கவிஞர் தாமே இசைக் கருவியாக - இறைவன் கைச் சாதனமாக - இருப்ப தாகக் கற்பித்துக் கொள்ளுகிறார். பாடல் 2இல் இறைவன் அவரிடம் 'பாடு நீ' என்று பணித்த அளவில் அவர்க்கு நெஞ்சமே வெடித்துவிடும் போல் இருக்கிறது. அச்

சமயம் அவரது வாழ்வின் கடுமைப்பண்புகள் எல்லாம் கரைந்துருகி இசையாக வருகின்றன. அவரது துதி கடல் மேல் செல்லும் பறவையெனப் பறந்து செல்கிறது. பாடல் 8இல் கடவுளின் ஈடற்ற இசையைக் கவிஞர் புகழ்கிறார்; அதன் நிறைவுடைமையை வியக்கிறார். அந்த இசை யோடு தானும் இசைக்க விழைகிறார். ஆனால் தன்னால் ஒத்திசைக்க முடியவில்லை என்பதனை உணர்கிறார்.

> என் நெஞ்சம் நின் பாட்டோடு இணைந்து பாட விழைகிறது; ஆனால் குரல் வராமல் வறிதே திண்டாடுகிறது. பேச முடியும் ஆனால் பேச்சு பாட்டாக வெடிக்காதே. என் தலைவனே, நின் இசையாம் ஈறிலாக் கண்ணிகளில் என் நெஞ்சைக் கட்டிப்போட்டு விட்டாயே!

என்கிறார். இசை 7ஆம் பாடலுக்கும் அடிக் கருத்தாக அமைந்துளது. இங்கே கவிஞர் தன் பாடலைக் கடவுட் காதலியாகப் பேசுகிறார். அவளுக்கு அணி பூட்டி அலங்கரிக்க மாட்டார் அவர். காரணம் அணிகலன்கள் ஐக்கியத்தின் தடையாகி உவகையை அழித்து விடும் என்பதாம். இந்தப் பாடலிலும் தாகுர் கடவுளின் நிகரற்ற இசையைப் புகழ்கிறார்.

> நினது பார்வையில் என் கவிப்பெருமை வெட்கி மடிகிறது, கவிப் பெருந்தலைவனே, நான் நின் காலடி யில் அமர்ந்திருக்கிறேன். நின் இசையை நீ நிரப்பு தற்கு நாணற்குழல் போல என் வாழ்வை எளிதாக நேராக யான் ஆக்குதற்கு அருள்வாயாக,

பாடல் 13 இல் இசை என்ற அடிக் கருத்து வருகின்றது. இந்த உலகின்கண் பாடுதற்காக வந்த பாடலை அவர் இன்னமும் பாடவில்லை என்று வருந்துகிறார். இசைக் கருவியை ஆயத்தப் படுத்துவதில், நரம்பைச் செறிப் பதிலும் நெகிழ்ப்பதிலும் ஆக நெடும்பொழுதைக் கழித்து விட்டார். எல்லாவிதப் பிழைகளும் குறைகளும் சேர்ந்து அவர்க்கு ஆர்வக்கேடு தந்து விட்டன. சில சமயங்களில் பொழுது பொருந்தவில்லை. சில சமயங்களில் சொற்கள்

பொருந்தவில்லை. அவர் நெஞ்சில் வேதனை அடர்ந்தது; காரணம், விரும்பிய பாட்டு வர இயலாதிருப்பதாகும். இருப்பினும் அதற்காக அவர் நம்பிக்கை இழக்கவில்லை.

பாடல் 15 இல் அவர் பாடல்பாடுவதே தன் தொழில் என்று விளம்புகிறார். "பண்சுமந்த பாடல்களை உனக்குப் பாடவே நான் வந்திருக்கிறேன்" என்கிறார். இந்த வையகம் ஒரு பெரிய மண்டபம் போல்வது; அதில் கவிஞர்க்கு இடம் ஒரு மூலை. அவர்க்கு உலகில் வேறொரு வேலையும் இல்லை. கடவுள் பார்த்து அவரைப் பாடுக என்றதும் தெய்விகப் பண்கள் அவரது நெஞ்சினின்றும் பொத்துக் கொண்டு வருகின்றன. அடுத்த பாடலிலும் (16) இசை மறுபடியும் அடிக் கருத்தாக இசைகிறது. இந்த மாநிலம் ஒரு திருவிழா முற்றமாக இருக்கிறது. கவிஞரும் பங்கு கொள்ள அழைப்பு வந்தது. இசையால் அங்குப் பங்கேற்பாரொடு தானும் இசைவிருந்து அளிக்க வேண்டுவது அவர்க்குத் தரப்பட்ட பணி. இன்னும் பல பாக்கள் கீதாஞ்சலியில் ஏதேனும் ஒருவகையில் இசைக் கருத்துடையனவாக இருக்கின்றன.

#### மரணம் என்ற அடிக்கருத்து

மரணம் என்ற அடிக்கருத்து கீதாஞ்சலியில் பல பாக்களில் இடம் பெற்றுள்ளது. சாவு வருதற்குச் சில பாக்களில் வேண்டிக் கொள்கிறார் கவிஞர். சிலவற்றில் அதனை எல்லா மரியாதையோடும் வரவேற்பேன், அஞ்ச மாட்டேன் என்று உறுதியுரைக்கிறார். சிலவற்றில் அவர் தம்மை ஒப்படைப்புச் செய்தலோடு கலந்து வரவேற்பு வருகிறது. சான்று பாடல் 17. தான் அவனிடம் (சாவுத் தேவனிடம்) தன்னை இறுதியாக்க் கொடுத்துவிடற்காகக் காத்திருப்பதாகக் கூறுகிறார்.

சாவைப் பற்றி நேரிடையாக நவில்வது நூலின் இறுதியில் இருக்கின்றது. 86 ஆம் பாடல். இதில் சாவு (சாவுத் தேவன்) இறைவனின் பணியாளாகத் தன் வாயில் அருகே வந்து நிற்பதாகக் கூறுகிறார். இரவு நேரம், அதிக இருட்டாக, அச்சம் தருவதாக, இருந்த போதிலும் அவர் விளக்கை எடுத்துக் கொண்டு கதவைத் திறந்துவிடப் போவதாகக் கூறுகிறார். காரணம் மரணம்

இறைவனின் அழைப்பைக் கொண்டு வருதலேயாகும். அவனுக்கு (மரணத்துக்கு) அவர் வரவேற்புத் தருவார். நீர் துளிக்கும் கண்களோடும் கட்டிய கைகளோடும் அவனை வழிபடுவார். தன் நெஞ்சின் புதையலை மரண தேவன் முன் வைப்பார். கடவுளின் கட்டளையை நிறை வேற்றிய மரணம் மகிழ்ச்சியோடு திரும்பிச் செல்வான். பாடல் 90 இல் மரணம் தன் கதவைத் தட்டுவதாகக் கற்பனை செய்கிறார். 'அவனை எப்படி வரவேற்பேன்" என்கிறார். அதற்கு அவரே விடையும் பகர்கிறார்:

> ஆ, என் விருந்தாளி முன் என் வாழ்க்கை நிரம்பிய பாத்திரத்தை வைப்பேன். அவன் வெறுங் கையோடு திரும்பிப் போகுமாறு விடமாட்டேன்.
>
> என் கனிமுதிர் காலத்துப் பகல்களிலும் வேனிற் காலத்து இரவுகளிலும் பிழிந்த பழச்சாறு முழுவதை யும், சேர்த்த செல்வம் சேமிப்பு அனைத்தையும், என் இறுதி நாளில் அவன் வந்து கதவைத் தட்டும் பொழுது அவன் முன் வைத்துவிடுவேன்.

பாடல் 91, மரணத்துக்கு உருக்கமான ஒரு வேண்டுத லாக உள்ளது. அவனை வருமாறும் தன்னிடம் இரகசிய மாகப் பேசுமாறும் வேண்டுகிறார். ஏனென்றால் அவன் தான் அவரது வாழ்வின் நிறைவேற்றம். அவனுக்காக அவர் நாள் பலவாகக் காத்திருக்கிறார். அவரது எண்ணங்கள் மரணத்தின் திக்கிலேயே ஓடிக் கொண்டி ருந்தன. தன் சாவினை அவர் இறைவனோடு நடக்கும் திருமணமாக நினைக்கிறார். ஏற்பாடுகள் யாவும் செய்யப் பட்டு விட்டன; மணமகள் தன் பிறந்தகம் விட்டுத் தலைவனைச் சந்திக்கச் செல்ல வேண்டும்.

பாடல் 92, கவிஞரின் இறுதி வினாடிகள் பற்றிய அழகான ஓவியம். பூமியைப் பார்க்கும் பார்வை கடைசியாக முடிந்து விடும், வாழ்க்கை தன் கடைசித் திரையினைக் கவிஞரின் கண்கள் மேல் இழுத்து விட்டு விடும். அது (வாழ்க்கை) அவரிடம் விடைபெற்றுக் கொண்டு விடும் என்று கற்பனை செய்கிறார். இருப்பினும் இரவில் வானில் நட்சத்திரங்கள் இருந்து வரும்; முன்போலவே காலையில் கதிரோன் உதிப்பான்.

மரண நினைப்பால் கவிஞரால் உலகின் மேல் புதுப் பார்வை பார்க்க முடிகிறது. உலகம் புதையல் நிரம்பிய தாக ஆனால் அது அக்கறையின்றிக் (கோரிக்கையற்று) கிடப்பதாகத் தோன்றுகிறது. உலகில் மிகத் தாழ்ந்த பொருளும் உயிரும் கூட அவருக்கு அரியவாகத் தோன்று கின்றன. நெடுகிலும் அவர் புறக்கணித்த அல்லது வேண்டாம் என்று விட்டொழித்தவற்றை வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அவரிடம் இப்பொழுது எழுகிறது.

விடைபெறல் அடிக்கருத்து

பாடல் 93இல் கவிஞர் உலகிடம் விடை சொல்லிக் கொள் கிறார். இந்த உலகப் பொருள்களின் மேல் தனக்கு உள்ள உரிமை சொந்தங்கள் எல்லாவற்றையும் விட்டு விடுவ தாக அறிவிக்கிறார். தற்பொழுது அவர் நாடுவதெல்லாம் நண்பர்களின் அன்பான சொற்களே. அவர் அவர் களுக்குத் தந்ததைவிட அவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டதே மிகுதி என்று அவர்களிடம் சொல்லிக் கொள் கிறார். அவரது வாழ்க்கை விளக்கு குளிரப் போகிறது. கடவுளிடமிருந்து அவருக்கு உத்தரவு வந்திருக்கிறது. இப்பொழுது தன் கடைசிப் பயணம் புறப்பட வேண்டும். அடுத்த பாடலிலும் விடைபெறும் அடிக் கருத்து இருக் கிறது. தான் வெறும் கையோடு பயணம் புறப்பட்டாலும் நெஞ்சில் நம்பிக்கை நிரம்ப இருக்கிறது என்கிறார். மணமாலை சூடிக்கொண்டு அவர் மகிழ்ச்சியுடன் செல்வார். 95ஆம் பாடலில் வாழ்வுக்கும் மறைவுக்கும் இடையே அழகான ஒப்புமை காண்கிறார் கவிஞர்.

> அது போலவே, சாவில், அறிந்திரா அதே சக்தி, என்றும் எனக்கு அறிமுகமான பாங்கில் வந்து தோன்றும். நான் இவ் வாழ்க்கையை விரும்புகிற காரணத்தால் சாவையும் நேசிக்கிறேன் என்று அறிவேன்.

என்கிறார்.

பாடல் 96 இல் தன் முடிவுரையாக அவர் பேசக்கூடிய சொற்கள் பற்றி நினைக்கிறார். இந்த வுலகில் அவர்

கண்டன யாவும் விஞ்ச முடியாதன. உலப்பிலா உருவுகள் உள்ள விளையாட்டு அரங்கில் அவர் விளையாடினார்; உருவற்ற இறைக் காட்சியைக் கண்டு கொண்டார்.

அடுத்த பாடலில் (97) அவர் தன் வாணாள் எல்லாம் இறைவனோடு அவன் யார் என்று தெரிந்து கொள்ள முயலாமலே விளையாடினோம் என்பதை உணர்கிறார். விளையாட்டு முடியும் தறுவாயில் கடவுட் காட்சி சட்டென்று கிட்டுகிறது. விழிகள் அவன் பாதங்களில் பதிந்திருக்க, உலகம் யாவும் பேரச்சத்தில், நிற்கிறது. பாடல் 100 இல் கவிஞர் மரணமற்றதில் மரணமுறத் தற்போது ஆயத்தமாகி விட்டதாகத் தெரிவிக்கிறார். தன் வாழ்க்கையாம் யாழியினை இறைவனின் திருவோலக்க மண்டபத்திற்கு எடுத்துச் செல்வார், என்றென்றும் இருப்பவாம் சுரங்களை அவர் மீட்டுவார். அது தன் கடைசிப் பண்ணைத் தேம்பித் தீர்த்தபின் அவர் அதனைக் கடவுள் அடிக்கண் வைத்து விடுவார்.

இறுதிப் பாடலில் மரணம் என்பது வீடு திரும்பல் என்கிறார்.

> என் பாக்கள் பலவாம் தம் பண்களை எல்லாம் ஒன்று கூட்டி ஒரே நீரோட்டமாக்கி நினக்கு ஒரு வணக்கத்துடன் மௌனப் பெருங்கடலுள் புகுந்துவிடுமாக. வீடு திரும்பும் வேட்புடன் இரவு பகல் பறந்து மலைமேல் உள்ள தம் கூடுகள் நோக்கித் திரும்பும் நாரைக் கூட்டம் போல என் வாழ்க்கை நினக்கு ஒரு வணக்கத்துடன் தன் அழிவிலா வீட்டுக்குப் பயணம் செய்யுமாக.

நாரைகள் பறந்து செல்லுதலை ஒப்பிட்டுரைப்பது மிகப் பொருத்தமாகவும் அழகாகவும் இருக்கிறது.

## கடற்செலவு அடிக்கருத்து

கீதாஞ்சலியில் உள்ள அடிக் கருத்துக்களிற் சில ஒரு பாடல் அல்லது இருபாடல்களில் விளக்கம் பெறுகின்றன. பல பாக்களில் பரவி விரவி இருக்கின்றன; அவ்வாறு

விரவி இருக்கும் அடிக் கருத்துக்களில் கடற்பயணம் என்பதும் இயற்கையுடன் உறவு என்பதும் குறிப்பிடத் தக்கனவாகும். அவை இரண்டும் தெய்விக உறவுக்குச் சாதனங்கள்-வழிகள்-ஆகும். சாவுக்குப்பின் ஆன்மாவின் பயணம் ஒரு கடற்பயணத்துக்கு ஒப்பாகக் கூறப்படுவது அடிக்கடி வருகிறது. பாடல் 42 கடவுளோடு தானும் படகில் உடன் போக்கில் செல்லுவதை எதிர் நோக்கிப் பாடுவதாக உள்ளது. அவ்வாறு செல்லுவதற்கான நேரம் இன்னும் வரவில்லையா என்று கவிஞர் வியக்கிறார். அந்தக் கடற் செலவின் போது தனக்கு எத்தகைய மெய்ம்மறந்த இன்பம் கிடைக்கும் என்று சித்திரிக்கிறார்.

> கரையற்ற அந்தக் கடலில் நீ வாய்மூடிப் புன்னகையுடன் கேட்டுக் கொண்டிருக்க, சொற்களின் கட்டுக்கள் இன்றிக் கடல் அலைபோல் என் பாடல்கள் இன்னிசையில் பெருகுகின்றன.

### இயற்கையுடன் உறவு என்ற அடிக்கருத்து

இயற்கையுடன் உறவு என்ற அடிக்கருத்து கீதாஞ்சலியில் பெருவாரியாக ஊடாடி இருக்கிறது. மனிதனும் கடவுளும் ஒருவர்க் கொருவர் நெருங்குதற்கு இடனாக இருப்பது இயற்கை ஆகும். இயற்கையுலகை, ஆன்ம நாட்டமுடையோர், வலை என்று விலக்கி விடலாகாது. முகில்கள் அலைகள் புயல்கள் முதலியனவற்றின் அழகான வருணனைகள் கீதாஞ்சலியில் மிகுதியாக இருக்கின்றன. அவை இயற்கையின் மாட்டுக் கவிஞர் கொண்டிருந்த காதலையும் நேர்முகமாக வைத்திருந்த தொடர்பையும் ஒப்பற்ற அவரது காட்சித் திறனையும் காட்டுகின்றன.

அவ்வாறே பருவகால அணிவகுப்பு-அதிலும் மழைக் காலம்—பற்றிய வருணனை தனிச் சிறப்புடன் வளம் கொழித்திருக்கின்றது. அந்த வகையில் வனப்பு மிக்க பாக்களில் ஒன்று 5, வரவிருக்கும் வேனிற் பருவத்தின் வசீகரமான வருணனை அதில் வருகிறது.

> இன்று என் சன்னல் பக்கம் வேனில் தன் மூச்சுகள் முணுமுணுப்புகளோடு வந்திருக்கிறது; மலர்ந்தி

ருக்கும் தோப்பாகிய திருவோலக்கத்தில் தேனீக்கள் தம் கூட்டிசை வாசிக்கின்றன.

பாடல் 18 இல் நாளின் பலவாகிய நேரங்கள் பற்றிய மயக்கும் வருணனையைக் காண்கிறோம். பாடல் 22 ஆடி மழைக்காலம் பற்றிய தெளிவான ஓவியத்தைத் தருகிறது. உரத்த கொண்டல்களின் - கீழ்காற்றுகளின் அழைப்புகளைப் பொருட்படுத்தாமல் காலைப் பொழுது தன் கண்ணை மூடிக்கொண்டு விட்டது; விடாது பார்த்துக் கொண்டிருக்கும் நீல வானத்தின் மேல் தடித்த திரை ஒன்று போர்த்தப்பட்டு விட்டது. கனத்த மழைக்கு முந்திய வெறுமை போல் அது தெரிகிறது. ஏனெனில் வனாந்திரங்கள் தங்கள் பாடல்களை அடக்கிக் கொண்டன. வீடுகள் தோறும் கதவுகள் அடைக்கப்பட்டு விட்டன. பாடல் 23 புயல் அடிக்கும் இரவு பற்றிய ஓவியம். அதில் கவிஞரை நாடி வருகின்றார் கடவுள். மைக் கறுப்பாக இருக்கும் ஆற்றங்கரை வழியாகவோ, திகைத்துத் திண்டாடுமாறுள்ள சினந்து சீறும் ஏதோ காட்டு வழியாகவோ அவர் எச்சரிக்கையாக வழி நடந்து வருவதாகப் படம் வரையப் பெற்றுள்ளது.

### பல்வகை அடிக்கருத்துக்கள்

கீதாஞ்சலியில் உள்ள பாக்கள் சில நீதிக் கதைகளின் வடிவில் இருக்கின்றன. அவை பெரும்பாலும் ஒவ்வோர் அடிக்கருத்துப் பொதிந்தனவாக இருக்கின்றன. சான்றாக 31ஆம் பாடல் அது உரையாடல் வடிவில் உள்ளது. சிறையில் உன்னை யார் அடைத்துப் போட்டார்கள் என்று கைதி ஒருவனைக் கேட்க அவன் தானே அவ்வாறு செய்து கொண்டதாக விடையிறுக்கிறான். அதிகாரம் பணம் ஆகியவற்றில் ஆசை காரணமாக மனிதன் கிறுக்காகித் தன் அழிவுக்குத் தானே வேலை செய்கிறான் என்பது அதில் அடிக்கருத்தாக இருக்கிறது. இறுக்கமான வலிய சங்கிலிகளைச் செய்கிறான் மனிதன். அவை உடைக்க முடியாப் பிடிப்பில் அவனைப் பிணைத்து விடுகின்றன.

பாடல் 33, மானிட நெஞ்சில் எப்படி ஆசைகள் சூழ்ச்சியாக இடம் கொண்டு விடுகின்றன என்பது பற்றியது.

தொடக்கத்தில் அவை மிகப் பணிவாக இருக்கின்றன. தங்களுக்கு அதிக இடம் தேவையில்லை என்கின்றன. பின்பு கொஞ்சங் கொஞ்சமாக மனத்தில் ஆட்சியதிகாரம் பெறுகின்றன. பாடல் 51, உண்மையாக இறை நாடுவோன் எப்போதுமே முழு ஆயத்தத்தோடு இருக்க வேண்டும் என்பதனை அடிக்கருத்தாகக் கொண்டுளது. அவ்வாறு இருக்க வேண்டுவது ஏன் என்றால் இறைவனை வரவேற்கும் நேரம் எது என்று அவனுக்குத் தெரிய முடியாது. சோம்பிக் கிடப்போர் முடிவில் இறைவனைத் தங்கள் வெறுமையான அறைக்கு வெறுங்கையோடு வரவேற்றுக் கந்தலாய்ப் போன பாயில் உட்காருமாறு செய்ய வேண்டும். பாடல் 64 இந்து சமயத்தின் மிகப் பழையதான - ஆனால் உதவாக்கரையாகி விட்ட-பழக்கங்களைப் பற்றியது. மங்கை ஒருத்தி மாலை வழிபாடாக ஆற்றில் விளக்கை மிதக்க விடுகிறாள் அல்லது விண்ணுக்குப் படையலாக அவ்வாறு செய்கிறாள் அல்லது விளக்குத் திருநாளுக்காக அவ்வாறு செய்யப் போகிறாள். ஆனால் விளக்குத் தேவைப்படும் தன் உடனாய மானிட உயிருக்கு அதனை இரவலாகத் தர அவளுக்கு மனம் இல்லை என்பது அது தரும் சித்திரம்.

பாடல் 78 இன் அடிக்கருத்து, படைப்பின் சீர்த்தியில் ஏதோ குறை இருக்கிறது என்பது சிலரது வீண் சந்தேகம் அல்லது ஒவ்வொன்றிலும் உடைவற்ற பூரணத்துவம் இருக்கிறது என்பது கவிஞரின் நம்பிக்கை என்பதாக உள்ளது. பாடல் 87 இன் அடிக்கருத்து, மானிடன் இவ்வுலகில் பிறந்த காலை ஆன்மாவுக்கு உரிய ஆற்றலில் பெரும் பகுதியை இழந்து விடுகிறான், சாவுக்குப் பிறகு திரும்பப் பெற்றுக் கொள்கிறான் என்பதாம்.

இந்த அடிக்கருத்துக்கள் எல்லாம், தலையாயதும் துணையானவையும், தனிப் பாக்களில் வருவதும் பல பாக்களில் திரும்பத் திரும்ப வருவதும் ஆகிய எல்லாமும் கீதாஞ்சலியின் மைய அடிக்கருத்தாகிய மானிடன் இறைமையையுணர்தல் என்பதனோடு ஒரு வழியில் அல்லது பிறிதொரு வழியில் இணைந்திருக்கின்றன.

o

# கீதாஞ்சலி : சில குறியீடுகள்

## கவிதைக்குச் சிறப்பு

படிமவியலைக் கவிதைக்குச் சிறப்பு மிக்க இயலாக-அடிப்படை இயல்பாகக் - கூறுவர் திறனாய்வர். உலகப் பெருங்கவிஞர்கள் தங்கள் படைப்புகளில் படிமங்களை யும் குறியீடுகளையும் கையாள்வதில் பெரியவர்களாக விளங்குகிறார்கள். பழங்காலத்தின் பெரிய திறனாய் வராக அமைந்த அரிஸ்டாட்டில் உருவக மொழியை மேதையின் மெய்யான சிறப்பியல்பு என்று புகழ்ந்து பேசினார். 'சொல்லால் பொருட்கு இடனாக, வல்லோர் அணி பெறச் செய்வன செய்யுள்' என்று பவணந்தியார் சொன்னதை நாம் அறிவோம்.

எழுத்தாளர் தம் கருத்தைச் சொல்லால் உடுத்துகிறார். அவரது கருத்தின் - அடிக்கருத்தின்-பல்வேறு கூறுகளை யும் படிமங்கள் புலப்படுத்துகின்றன, சொல்லாமற் சொல்லி விளக்குகின்றன.

படிமவியல் என்பது தனி அலங்காரப் பகுதி என்று கருதுவது பிழையாகும். ஏனெனில் அது கவிதையின் உயிராக-ஆன்மாவாக-இருக்கிறது. கவிதையிற் சொல்லப் படும் செய்தியை விடச் சொல்லும் முறையே உயர்த்தி யாக இருக்கிறது, உயிர் நாடியாக இருக்கிறது. அதனால் மல்லார்மே❋ ''கவிதை கருத்துக்களால் எழுதப்படு வதில்லை; சொற்களால் எழுதப்படுகின்றன'' என்றார். ஹவுஸ்மனும்❋❋ ''சொல்லப்படும் செய்தி கவிதையன்று; சொல்லும் ஒரு முறை அது'' என்றார்.

ஒருமையை உண்டாக்க, ஆழ்ந்த சிந்தனைகளை ஆற்றுப் படுத்த, சுருங்கக் கூறின், தெரிவிக்க முடியாதவற்றைத் தெரிவித்தற்குப் படிமங்கள் கையாளப்படுகின்றன.

---

❋ Mallarme

❋❋ A.E. Houseman

## தாகூரின் தனிமப் படிமத் தன்மைகள்

தொன்று தொட்டு வரும் இந்திய மெய்யியல் படிமங்களை – இயற்கைப் பொருள் படிமங்களை – தாகூர் அதிகமும் கையாள்கிறார், ஆயினும் அவரது படிமங்கள் தெளிந்த தனித்துவமான தன்மைகள் கொண்டிருக்கின்றன. அவரது படிமக் காட்சி அப்படியே கண்ணால் காணுமாறு மூக்கால் மோந்துணருமாறு அமையப் பெற்றுள்ளது. செவிப்புலனால் உணருமாறு அவர் அமைத்த படிமங்களும் அவ்வாறே செவிநுகர்வுக்கு திருப்தி ஊட்டுகின்றன.

பரந்து அகன்று இருப்பதை உணர்த்துவது அவரது தனித் தன்மையான ஒரு படிம வகையாகும். கடலோ நிலைத்தன்மையோ – அதனை நன்கு உணருமாறு அவர் உருக்காட்சி அமைக்கிறார். தேடல், ஐக்கியமாதல், தொடர்பான படிமங்கள் அவருக்கு மிகவும் பிடித்தமானவை. இயற்கையையும் மானிடத்தையும் ஐக்கியப் படுத்தும் அவரது படிமப் பாங்கு தனிச்சிறப்பு உடையது. சிலபோது அவரது படிமங்கள் சித்தாந்தப் பண்பு❋ அல்லது அனுபூதிப் பண்புடன் திகழ்கின்றன. மாறிவரும் பருவ காலங்கள், தட்ப வெப்பங்கள் பற்றிய படிமங்கள் தாகூரின் கவிதையில் வருகின்றன.

படிமங்கள் ஒன்றை ஒன்று தொடர்ந்து வரல், விரைந்து வரல் என்பன ஷெல்லியின் படிமப் போக்கை நினைவு படுத்துகின்றன. படிமங்களைச் சங்கிலித் தொடராக வளையம் வளையமாக–இணைக்கும் ஆற்றல் அவருக்கு இருக்கிறது.

அவரிடம் அடிக்கடி வரும் படிமங்கள் ஐம்பூதச் சார்புடையவை. ஆகாயம் விண்மீன்கள் ஒளி இருள் போல்வன; அவ்வாறே தண்ணீர்த் தொடர்புடையவை ஆறு ஏரி கடல் படகு கப்பல் ஓடக்காரன் போல்வனவும் ஆம். அவர் குறிப்பிடும் 'உயிர்த்தெய்வம்' (ஜீவன் தேவதா) அவர்க்குத் தனித்துவமாக உள்ள ஒரு படிமம்.

---

❋ Metaphysical

## குறியீட்டுப் பொருள்

ஒரு சில படிமங்கள் ஓர் இடத்தில் மட்டுமன்றி வேறு பல இடங்களிலும் வரலாம். அவை ஒரு பொருளில் மட்டு மின்றி வேறு பல பொருள்களிலும் வரலாம்.

படிமம் ஒரு பாடலில் உள்ள ஓர் இடத் தொடர்பான பொருளுக்குள் அடைபட்டு விடுவதில்லை. பாடலுக்கு வெளியில் அது எதை எதையோ குறிப்பிடுவதாக - வேறு பிறவற்றை அவாவிச் செல்வதாக - இருக்கும். அப்போது படிமம் குறியீடு ஆகிறது.

அவரது 'உயிர்த் தெய்வம்' என்பதைக் காணின், எல்லா உயிர்க்கும் தலைவனான பரம்பொருளைக் குறித்துவர அவர் அதனைப் பயன்படுத்துகிறார். அதேபோது, தன் சொந்த வாழ்க்கைக்கு வழிகாட்டுதலும் பொருண்மையும் தருவதற்கு அதனை எதிர்பார்க்கிறார். ஆகவே அது குறியீடாக, தனிப்பட்ட சார்பையும் வையச் சார்பையும் ஐக்கியப் படுத்தக் கவிஞர்க்குக் கை கொடுக்கிறது.

## பூ என்ற குறியீடு

பொதுவாக, இயற்கைப் பொருள்கள் பரம்பொருளின் படைத்தல் உவகைக்கு அடையாளமாக உள்ளன அவற் றின் அழகு படைப்புத் தொழிலில் அவனுடைய இன்பத் தின் குறியீடாக உள்ளது. இயற்கைப் பொருள்கள் என்றென்றும் இருப்பவை. கல் தோன்றி மண்தோன்றிய கால முதல் அவை இருந்து வருகின்றன. ஆகவின் இறை மையின் நிலைத்திருத்தலாகிய இயல்புக்கும் முடிவின் மைக்கும் குறியீடாக விளங்குகின்றன. அவற்றுட் சில வற்றை ஈண்டுக் காண்போம். இயற்கைப் பொருள்களுள், குறியீட்டியலுக்கு அதிகம் பயனாகும் பொருள்களுள், ஒன்று பூ.

இயற்கையின் படைப்பாற்றலுக்கு எளியதோர் சான்றாக இருப்பது பூ. அது தோன்றுகிறது விரிகிறது வாடுகிறது. பிறகு மண்ணில் தன்னைப் புதுக்கிக் கொள்கிறது. பூ வினால் என்ன காரியம் ஆகிறது? ஒன்றும் இல்லை, பின் ஏன் அது வளர வேண்டும்?

இவ்வாறாகப் பூ, படைப்பின் விரிவான மருமத்தைக் குறியீடாகக் காட்டி நிற்கிறது. பூ தோன்றக் காரணம் எதுவும் காட்ட முடியாததால் கவிஞர் அதனைப் புல் காணும் கனவுகளின் வடிவம் என்று நினைத்துக் கொள் கிறார். பூ கனியாவதில் நிறைவு பெறுகிறது. தனி ஆன்மா ஈறிலாப் பொருளுடன் ஒன்றாகிவிடற்குக் கொள்ளும் ஆவலின் குறியீடாக அது உள்ளது. ஒன்றாகி விடலில் ஆன்மா நிறைவேற்றம் காண்கிறது.

பூவின் தோற்றம் முட்களிடை அமைகிறது. நோவு அழுக்கு ஆகியவற்றின் மேல் அழகு காணும் வெற்றிக்கு அது குறியீடு ஆகிறது. காதல், காதலின் சக்தி ஆகியவற்றின் குறியீடு பூ. ஆகவே மணமக்கள் மாலை மாற்றிக் கொள் கிறார்கள். மனிதன் கடவுளை மலர்களால் அருச்சிக் கிறான்.

பூவின் நூற்றிதழ், வாழ்வின் பன்முகத்தையும் விரிவு டைமையையும் காட்டுகிறது.

அது பின்பு உதிர்கிறது வாழ்வின் ஒழுங்கான இசையை, பிறப்பிறப்பு மறுபிறப்பு என்ற உருள் வட்டத்தைக் குறிக் கிறது அது. வாழ்க்கை மீட்டும் மீட்டும் யாண்டும் புது வனப்பு வடிவுகளுடன் புதுக்கப் பெறலுக்கு அது குறி யீடாக உள்ளது.

பூ எளிய ஒரு பொருள். அதன் புலனுகர்வுக் கவர்ச்சி, செறிவான யாப்பு உடையதாக இருக்கிறது. மென்மையாக, அழகாக, மணமாக அஃது இருக்கிறது. அதற்கு ஒலி யில்லை. ஆனால் இறைவனின் தனி இசையமுதைத் தன்பால் அது தாங்கியிருக்கிறது.

காணும் உலகவாழ்வு மாயை என்ற கொள்கைக்கு மறுப் புரையாகி மலர்கள் அமைகின்றன. புலனுகர் பொருள்கள் திரும்பத் திரும்ப மரணத்தினால் உயிரோடு இருக்கப் பெறுகின்றன. மாயையாம் பூமியின் மலர்கள் எப்போதும் மரணத்தினால் புத்துயிரோடு வைக்கப் படுகின்றன.

பூவினின்று வரும் மணம், காதலும் உவகையும் குறித் தலோடு, கட்டிலிருந்து விடுபடும் சுதந்திரத்தின் குறி யீடாகவும் இருக்கிறது.

XLVI

## ஒளியும் இருளும்

ஒளி சுதந்திர உணர்வின் குறியீடு. மரணத்தை வாழ்க்கை வெல்வது, கட்டினை விடுதலை வெல்வது என்ற குறிப் புகள் கொண்டது அது.

ஒளி சுதந்திரத்தின் அடையாளம் என்பதால் இருளைப் பிணிப்பின் அடையாளம் என்று தள்ளிவிட முடியாது, இருள், படைப்பின் மருமத்தைக் குறிக்கும். ஏனெனில் ஒளியானது இருளில் தன்னை இழந்துவிடுகிறது.

இருள் இடையறாது புதுப்பிக்கப் படுகிறது. ஆகலின் மரணத்தின் முடிவில் வாழ்வு புதுப்பிக்கப் படுவதன் குறியீடாக உள்ளது. ஒளி அழகிய ஒரு மாதாக, அது ஒளியைச் சந்திக்க வானில் தன் தேரில் பயணம் செய்வ தாகப் பிறிதோர் சந்தர்ப்பத்தில் கவிஞர் வருணிக்கிறார்.

இருள், வாழ்வுப் புதிருக்குக் குறியீடு. மணமகனும் மணமகளும் சந்திக்கப் பொருத்தமான பின்புலம் தரு கிறது அது.

கடவுள் இருப்பதைக் கண்ணாற் காணமுடியும் என்ப தினும் உணர்தலால் காண முடியும். எனவே கடவுளை 'இருட்டறை வேந்தன்' என்பர். அவனைப் புரிந்து கொண்டோர் அல்லது அவனுடன் ஐக்கியம் ஆகப் பெற்றோர் ஒளிக்கு வருகின்றனர்

இருள், மருமப் புதிராக இருப்பதோடு பயங்கரமாகவும் இருக்கிறது. அது அழிப்பின் குறியீடு அழித்தல் புரிவோன், இரவுத் திரையின் பின்னால் மறைந்திருப் பதாகக் கற்பனை செய்யப்படுகிறான். புயற் காற்று கடவுளின் முன்னறிவிப்பாகவோ சினத்தின் அறிகுறி யாகவோ இருக்கிறது.

## விண்மீன்கள்

இரவின் மாட்சியாக இலங்குவன விண்மீன்கள் அவை இருளில் மிளிர்கின்றன. ஒளிச் சிலம்புகள் - காப்புகள் - அவை. சுதந்திரம் அன்பு உவகை என்பவற்றின் குறியீடு அவை.

அவை வானப் பூக்கள். தேவனின் இசையை இசைத்து வருகின்றன. அவற்றின் விரிபெருந்தன்மை, நிலைபேறு காரணமாக அவை மிகுதிக்கும் நிலைபேற்றுக்கும் பொருத்தமான குறியீடாக உள்ளன.

அவை இரவின் விளக்குகள். மானிட விளக்குகள் உடைந்த போதும் விண்மீன் விளக்குகள் ஒளிதரு கின்றன. மேகங்களின் பின்னால் அவை ஒளிந்திருக்கை யில் மானிடரின் நொய்தான விளக்குகள் இருளை ஒட்டி ஒளி தருகின்றன.

அவை தத்தம் இடத்தில் ஊன்றி வைக்கப் பெற்றன போன்று காட்சி தருகின்றன. அவற்றின் இடையேயுள்ள இடைவெளி, பிரிவுக் காலங்களைக் குறிக்கின்றன. அவை ஒன்றை ஒன்று ஓயாது நெருங்கி வருவதாகக் கூறு கின்றனர். அது காதலுக்கும், முடிவிலாப் பொருளோடு ஐக்கியமாதற்கு ஆன மானிட விருப்புக்கும் குறியீடாகும்.

### அடிவானம் வானம் மேகம்

முடிவுடைப் பொருளும் முடிவிலாப் பொருளும் கூடுவதன் குறியீடாக அடிவானம் அமைகிறது. நீல வானம் இறைவனின் எல்லையிலாப் பரப்பு,பெருமிதம், மென்மை ஆகியவற்றைக் காட்டும். அறிந்ததிலிருந்து அறிந்திரா வானங்களுக்குச் செல்லும் வழியாக மரணம் குறியீட்டுப் பொருள் கொள்கிறது.

வானில் மிதக்கும் முகில்களும் காற்றும், வாழ்க்கையின் கைகண்ட பயனாக-இன்பமாக—இருக்கும் உல்லாசமான சுற்றித் திரிதலுக்கும் சுதந்திரத்திற்கும் குறியீடாக உள்ளன. வானிற் பறக்கும் பறவையின் பறப்பு மானிட ஆன்மா தான் அடைய அவாவி வெற்றி காண முடியா விடுதலையின் குறியீடாகும். அந்தி அரை இருளில் கூடு நோக்கித் திரும்பும் சிறகுகள் மானிடக் காதலின் வேக மான சக்திக்குக் குறியீடாகக் கவிஞர்க்கு இருக்கின்றன. ஆகாயமாகவும் கடலாகவும் கடவுள் குறியீடு பெறுகிறார்.

### பறவைகள்

விரைவாகப் பறக்கும் பறவைக் கூட்டம் பிரபஞ்சத்தின் நெஞ்சில் உள்ள விரைவுக்கான உணர்ச்சிக்குக் குறியீ

டாகும். தொலைவினில் ஒரு குடியிருப்பு அல்லது தங்கு மிடம் தேடி உலகம் நகர்ந்து கொண்டேயிருக்கிறது. அத்தகைய இயக்கத்துக்கு - ஓயா ஓட்டத்துக்குக் குறியீடாகப் பல படிமங்கள் ஆளப்படுகின்றன.

அதிகமும் அது நீரோட்டம் என்ற குறியீட்டைப் பெற்று வருவதுண்டு. அறியப்படாத பெரும் பொருளுக்குக் குறியீடாகச் சமுத்திரம் வருவதுண்டு; மானிடன் அடைய விரும்பும் ஓய்வுச் சுவர்க்கத்தையும் அது குறித்து வரலாம்.

படகுக்காரர், பயணி

கடவுள் அல்லது மரணத்தின் குறியீடாகப் படகுக்காரர் வருகிறார். படகில் போதல், வாழ்க்கைப் பயணத்தின் குறியீடு.

ஆற்றின் இன்னொரு கரை, அறிந்திராப் பெரும் பொருளை, என்றுமுள பரம்பொருளை மரணத்தால் அடையப்படுவதன் குறிப்புடையது.

பாதை எங்கே போகிறது, எங்கே மறு கரை என்ற கேள்விகள் வாழ்வின் நிரந்தரமான மருமத்தைக் குறித்திருப்பன. சில சமயம் கடவுளாகிய காதலன் அல்லது மணவாளன் தூரத்திலிருந்து வருகிறான் அல்லது மணமகள் - காதலிக்குப் புறத்தே காத்துக் கொண்டிருப்பான்.

கடல்

ஆறு, பெருந் தொலைவில் உள்ள இலக்கு ஆகிய கரையற்றதும் இருளில் இருப்பதும் ஆகிய கடலுக்கு ஓடுகிறது. அறியப்படாததற்குள் அருவியோ ஆறோ பாய்ந்து உட்புகுகிறது. அந்த இரகசியத்துக்கு மௌனம் பாதுகாவலாக இருப்பது போல் தோன்றுகிறது. ஆனால் புயற்காற்று கடலைப் பந்தாடும் போது அலைகள் கொந்தளித்து எழுகையில் அது உண்மைக்கான அமைதியுள்ள உத்தரவாதமாக இருக்கவில்லை. மாறாக வானுக்கு அது எழுப்பும் என்றுமுள வினாவாக இருக்கிறது. கடல் அலைகள் உள்ளடங்கி ஓய்கையில் அறியப்படாத தன் மருமத்தை ஆழ்ந்து காண்பதாகக் குறியீடு செய்கிறது.

விண்ணோக்கி எழும் கடல் அறியப்படாததனோடு கலந்துவிட விழையும் ஆவலின் குறியீடாகவும் உள்ளது.

புல்லாங்குழல் ஓசை

தாகுரின் படிமங்கள் வண்ண மயமாக, பெரிதும் புலத் தொடர்பாக, சில சமயம் சிற்றின்பச் சார்பாக இருக்கின்றன. மிகவும் பொதுவான அன்றாடப் பொருள்களிலும் இயற்கைப் பொருள்களிலும் இருந்து படிமங்களை அவர் எடுக்கிறார். அதனால் அவர் கடினமானதை எளிமையாக்கி விடுகிறார். அவரது கவிதையில் நுண் பொருள் பருப்பொருளாகிறது, பழக்கமில்லாதது பழக்கப்பட்டது ஆக்கப்படுகிறது. ஆன்மிகம் புலன் தொடர்பாகக் காட்டப்படுகிறது. இவ்வாறு தனது படிமங்களால் எளிமையில் உன்னதத்தை இணைத்து விட அவரால் முடிகிறது. ஆக, கலையை மறைக்கும் கலை அவருடையது என்பது தெளிவு.

புல்லாங்குழல் என்ற எளிய பொருளை அறியார் உளரா? அது மானிட யாக்கைக்குக் குறியீடு. தெய்விக ஆற்றலால் தூண்டப்படும் கவிஞரது கவித்திறனுக்கும் அது பொருளாக வருகிறது. புல்லாங்குழல் ஊதுவோன் என்றென்றும் காதல் இசை எழுப்பும் கண்ணனாக இருக்கலாம். அவனது அழைப்பை இராதையாம் ஆன்மாவினால் தடுக்க முடியாது. (அவ்வாறே சைவ ஆனாய நாயனாரின் பக்திப் பண்ணாகவும் இருக்கலாம்; அதன் உருக்கத்தைத் தேவதேவனாம் இறைவனாலும் அலட்சியப்படுத்த முடியாது)

> கவிஞன் என்ற என் செருக்கு நின்னைக் கண்டதும் வெட்கத்தால் மடிகிறது. தலைமைக் கவிஞனே, நின் காலடியில் அமர்ந்துவிட்டேன். நீ இசை நிரப்புதற்கான பூங்குழலாக என் வாழ்வை எளிமையும் நேர்மையும் உடையதாகச் செய்தருள்.

O

L

## அனுபூதி* நலம் : சில குறிப்புகள்

### இறையனுபவம் : ஒருமையும் பன்மையும்

இறையன்பு-பக்தி-எல்லார்க்கும் பொதுவானது. இறைவன் பொதுவன். அவனைக் "கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே" என்று அனுபூதிச் செல்வராகிய இராமலிங்கர் பாடினார். அவன் "காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்"ணாகவும் "நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடு"வாகவும் "எல்லார்க்கும் பொதுவில் நடம் புரிகின்ற" அரசாகவும் இருப்பதாக அவர் தெளிவிக்கிறார்.

இறை பொதுவாக இருத்தல் போன்றே இறையனுபவமும் பொதுவாக உள்ளது. நாடு மொழி வருணம் வயது பால் தொழில் படிப்பு பதவி என்பன இறையனுபவம் பெறத் தடையாக இருப்பதில்லை, உரிய தகுதியும் அவற்றால் ஆவதில்லை.

---

❋ அகராதிப் பொருள்கள் :

அனுபூதி (அ) அனுபூதியம் : **Mysticism** : தியானத்தால் உண்மையையும் பரம் பொருளையும் (கடவுளையும்) காணலாம் என்ற நம்பிக்கை (கொள்கை); இறைநிலை இணைவுப் பண்பு; இறை நுகர்வுப் பண்பு. belief, experiences of a mystic; teaching belief that know -ledge of God and of real truth may be obtained through meditation or Spiritual insight, independently of the mind and the sense.

**Mystic ;** Person who seeks union with God and, thought that, realization of truth beyond men's under-standing. ஆன்மிக முறையில் கடவுளின் மாயையை அறிய முற்படும் ஒருவர்; அனுபூதியாளர்.

**Mystic :** of hidden meaning or spiritual power.

இறையனுபவத்தை அனுபூதி என்கிறோம். கந்தர் அனுபூதி என்ற நூற்பெயரை அறியார் யார்? அந்த நூல் கந்தர் தந்த அனுபவத்தால் - இறையனுபவத்தால் - போந்ததே என்பதனைத் தாயுமான அடிகள் சான்று பகர்கிறார்; சான்று பகர்வதோடு அதனை அருளியவரின் அருள் தமக்குக் கிடைக்க வேண்டும் என்றும் வேண்டுகிறார்.

> கந்தர்அனு பூதிபெற்றுக் கந்தர்அனு பூதிசொன்ன
> எந்தைஅருள் நாடி இருக்குநாள் எந்நாளோ?
> (எந் : 3 : 8)

(கந்தரனுபூதி-இறையனுபவம். கந்தரனுபூதி-நூற்பெயர். எந்தை-அருணகிரியார் )

இறையனுபவம் காலமும் இடமும் கடந்து பொதுவாக வரப் பெறினும் அணுகுமுறை, அடையும் முறை, அடையும் நிலை, கொள்நிலை என்பவற்றால் ஒரு படித்தாக இருப்பதில்லை. 'விண்டுரைக்க முடியாத விந்தை' அது என்பதால் உரைபெறும் முறையிலும் வேறுபாடுகள் உள்ளன. சொல்மனம் கடந்த சுகநிலை என்பதால் உரை பெறுவதில் ஆளாளுக்கு வேறுபாடு இருப்பது இயல்பே ஆகும். ஆயின் வேறுபாடுகள் நீர்மேல் எழும் குமிழிகள் போல்வன; அடியாழம் சமன்போக்கிலே இருக்கிறது.

படாத பாடு பட்டு இறைக்கலப்பு எய்தப் பெற்றார் இராமகிருஷ்ணர். அத்துடன் அவர் நின்று விடாமல் வேறுபடு சமய நெறிகளையும் அவ்வந் நெறி நின்று கடைப்பிடித்து, துணிவு மிக்க சோதனையில் தம்மை ஈடுபடுத்தி அவ்வவ் அனுபவங்களைப் பெற்று எல்லாம் ஒன்றே என்று கண்டார். ஆனால் அவ்வளவு அல்லற்பாடின்றி இளம் வயதிலே அனுபூதி வாய்க்கப் பெற்றார் இரமணர். இதனைச் சுத்தானந்த பாரதியின் இரமண விஜயம் விளம்புகிறது.

இறையனுபவத்துக்காக ஆன்மா படாதபாடு படுவதனைத் திருவாசகப் பாக்கள் பல நெஞ்சம் உருகக் காட்டுகின்றன. பக்குவப்பட்ட ஆன்மா விரைந்து அனுபூதி பெறுவதனைத் திருநாவுக்கரசரின் நன்கு அறியப்பட்ட

தேவாரப் பாட்டு ஒன்று அகத்துறைப் பாங்கில் அகங் கனியச் சித்திரிக்கிறது.

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
 மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
 பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
 அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை
தன்னை மறந்தாள்தன் நாமம் கெட்டாள்
 தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.
(திருநா. 6:25:7)

[பிச்சி: பித்து; பித்துப் பிடித்தவள். ஆரூர்-திருவாரூர். அத்தன்-தந்தை. ஆசாரம்-உலகியல் சட்ட திட்டங்கள்]

அனுபூதியாளர் பெறுவது பேரின்பம் எனப்படுகிறது. தெய்வ இன்பம்* என்பதும் அதுவே. மிகப் பழங்காலந் தொடங்கி நம் நாட்டிலும் பிறநாடுகளிலும் தோன்றிய மகான்கள் அது பற்றிக் குறிப்பாலோ குறியீட்டாலோ உணர்த்துவன ஏறத்தாழ ஒரே வகையான வெளிவரிக் கோட்டு ஓவியங்களாக-புனையா ஓவியங்களாக-உள்ளன எனலாம். தன்மை அணிக்குச் சான்று காட்டும் தண்டியலங் கார உதாரணச் செய்யுள் பின் வருமாறு ஒரு சித்திரம் வரைந்துள்ளது:

உள்ளம் குளிர உரோமம் சிலிர்த்து (உ)ரையும்
தள்ள, விழி நீரரும்பத் தன்மறந்தாள்-புள்ளலைக்கும்
தேந்தா மரைவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்
பூந்தா மரைதொழுத பொன்.

(தில்லைத் திருநடம் செய் பூந்தாமரை-அம்பலக் கூத்தனின் அடி, பொன்-தலைவி; ஆன்மா.)

''இது கடவுளைத் தொழுதலாலாகும் ஆனந்தத்தின் தன்மையைக் கூறியதனால் தன்மையணி'' என்று பொருட் பொருத்தம் அதற்குத் தரப்பட்டுள்ளது.

---

* Bliss Divine

அரும்பு பூ காய் கனி எனப்படும் சரியை கிரியை யோக ஞான நெறி நிற்பாரும், கரும பக்தி இராச ஞான யோக நெறி நிற்பாரும் அவை போன்ற கடைப்பிடிகளில் முயல்வாரும் முயற்சி பயிற்சி அருட்பேறு என்பவற்றால் அனுபவ முதிர்ச்சி பெறுகிறார்கள். அவ்வாறின்றி அக ஒளியால் ஆக்கப்படும் கவிதை இசை ஓவியம் சிற்பம் முதலிய நுண்கலைகளும் கணிதம் அறிவியல் போன்ற ஒண்கலைகளும் செய்யப்படும் பல்வகைத் தொழில்களும் சிந்தை ஒருமையாலும் நிறைவினாலும் அனுபூதிப் பேற்றுக்கு உறுதுணை புரிதல் உண்டு. எப்பேர்ப்பட்டவர்க்கும் உளந்தூய்மையாலும் உலகிற்கு ஒல்லும் வகை செய்யும் பணியாலும் அனுபூதி, மினுக்கு மின்னல் பேரொளி-இன்பம் பேரின்பம் ஆரா இன்பம்-என்றெல்லாம் வாய்ப்பதுண்டு.

அனுபூதிக் கூறுகள்

மொத்தத்தில் வைத்து அனுபூதியியல் பற்றி எளிமைப் படுத்திப் பார்க்குங்கால் பின்வருவன அதன் கூறுகள் எனலாம் :

1. அனுபூதியாளர் இறைமையோடு ஐக்கியமாதலை நாடுகிறார். 2. வாழ்வின் உலகியற் பொருள்களிலிருந்து தன்னை (ஆமைபோல்) உள் இழுத்துக் கொள்கிறார். 3. உண்மையானது உள்ளுணர்வால் உணரப்படுகிறது. 4. புத்தியின் முழுமையான ஆற்றலில் அனுபூதியாளர்க்கு நம்பிக்கை கிடையாது. 5. பகுத்தறிவு, புலனுணர்ச்சி என்பனவற்றை அவர் நம்பியிருப்பதில்லை. 6. மற்ற அனுபவங்களுக்கு முற்றாக வேறுபட்ட ஒரு விநோத வகையான அனுபவத்தை அனுபூதியாளர்க்கு உள்ளுணர்வு தருகிறது. 7. எல்லா நடப்புண்மைகளிலும்-யதார்த்தங்களிலும்-அனுபூதியாளர்க்கு உலகமானது வேறுபிரித்தறியப்படாத ஒற்றுமையில் திகழ்கிறது. 8. அறிவான்-அறியப்படு பொருள்-இரண்டும் ஒன்றாக இழந்துவிட, அன்றாட வாழ்க்கை உலகு ஒன்றுமின்மையில் மறைந்து போகிறது. 9. ஒழுக்க மேம்பாடு, உயர்ந்தோங்குதல், வெற்றிச் செருக்கு, குதூகலம் என்பவற்றால் கண்டறியப்படும் அனுபவங்களை அனுபூதியம் கண்டுணர்கிறது. 10. உயர்வுபடுத்தப்படும் நுண்ணறிவின் ஆற்றலை விட ஒழுக்க உணர்வின் விரைவினுக்கு அனுபூதியாளர்

முக்கியத்துவம் தருகின்றனர் 11. உள்ளார்ந்த வாழ்க்கை உணர்வை அவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். 12. தெய்விகத்தோடு கூடிய ஒருமை உணர்வு அவர்களுக்கு உண்டாகிறது. ஒரு மயக்கம் போன்ற - துயில் போன்ற நிலையில் விழிப்பை, ஒளிக்குளிப்பை அவர்கள் அறிகிறார்கள். 13. மேலாம் சக்தியை உணர்தலில் அனுபூதியாளரின் தன்முனைப்பு தன்னை இழந்துவிடுகிறது. 14. அனுபூதியால் வருவது தவிர மற்ற உண்மை எல்லாம் வெறும் தோற்றம் என்று பெயர் சூட்டப்படுகிறது. 15. அது ஒன்றே என்ற (அத்வைதப்) பண்புடையது. 16. அளவுக்குட்பட்ட அனுபவங்களைச் சொல்லும் முறையில் அனுபூதியைச் சொல்ல முடியாது 17. புற உலகம் - காணும் உலகம்-முழுவதும் ஒரு வித தெய்விகப் பேரொளியால் போர்த்தப் பெற்றுள்ளது. 18. தெய்விக இருப்பு, பிரபஞ்சத்தில் எவ்வெவ் விடத்திலும் உணருமாறு உள்ளது. 19. அனுபூதியாளர்க்கு [ஆன்மா தவிர மற்றப்] பொருள் வெறும் மாயையே 20. இயற்கையிடத்துத் தெய்விகத்தின் பிரதிபலிப்பை அனுபூதியாளர் அவ்வப் போது உணர்கிறார்.

சுருங்கக்கூறின், அனுபூதியாளர் தெய்விகத்துடன் நேரிடையான உறவு அனுபவம் கொண்டிருக்கிறார். இந்த அனுபவம் கலையிலக்கியத்தில் பதிவு நவிற்சி பெறுகிறது. அவற்றை அனுபூதிக் கலை இலக்கியம் என்கிறோம்.

## தாகுரும் அனுபூதியமும்

கவிதையில் கவித்துவத்தை விட அதிகமான எதையோ பின் தொடர்ந்து சென்று கொண்டிருந்தார் தாகுர். ஏதோ அறுதியான உண்மையை அவர் நாடினார். "இந்த உண்மையை என் கற்பனை, பின் தொடர்ந்து - நாடிச்—செல்கிறது, ஆனால் முடியவில்லை" என்பதாக 1866 இல் அவர் கூறினார். வெளியிட முடியாத இயற்கையின் உண்மையைத் தேடுவதாக இருந்தது அவரது அனுபூதி வேட்கை.

"தாந்தேயைப் போன்றே தாகுரும், தொன்மவியல் இறையியல், தத்துவம் எல்லாம் இலகுவாக ஒன்று சேர்ந்திருக்கும் வளமிக்கதும் விரிவுடையதும் ஆன ஒரு மரபுக்கு

உரியவராகப் பிறந்தார். அந்த மரபு அவருக்குக் குருதியாக இருந்தது. குழந்தைப் பருவ முதல் அவர் உபநிடதங்களில் ஆழ்ந்து பருகினார்.''

''அவரது அனுபூதியம் தெள்ளத் தெளிவானது, கண்கூடான - புலன்களுக்குப் படுவதான - காட்சியாக இருக்கிறது. இயற்கையின் மருமம், ஆன்மாவுக்கு அதனோடு கூடிய ஆதியான ஐக்கியம், அதன் மகிழ்ச்சி - விந்தை- எல்லாம் கவிதைகளாக நெய்யப் பெற்றுள்ளன; அவை உள்ளார்ந்த காட்சியை — அகக் காட்சியைக் - குறியீடுகளாகப் படிமங்களாகப் புத்தம் புதுமையுறக் காட்டும் கற்பனையால் தெளிவு படுத்தப் பட்டிருக்கின்றன'' என்று ஆய்வர் குறிப்பிடுகின்றனர்.

தொடக்கத்திலிருந்தே தாகுர் அனுபூதி உள்ளறிவு அடையப் பெற்றார். ''நான் வெகு காலமாகப் புறக் காட்சியால் உலகைப் பார்த்து வந்தேன் .. திடீரென்று என் உயிரின் உள்ளாழத்திலிருந்து, ஓர் ஒளிக் கீற்று அதுவாக வழிகண்டு வந்தது, அது விரிந்து பரந்தது, பிரபஞ்சம் அனைத்தையும் வெளிச்சமயமாக எனக்குக் காட்டியது...இந்த அனுபவம் பிரபஞ்சத்தின் நெஞ்சத்திலிருந்து வெளியிடுகின்ற இசை ஓடை பற்றி எனக்குச் சொல்வதாக இருந்தது. வெளி, காலம் என்பவற்றின் மேல் அது பரவி அங்கிருந்து மகிழ்ச்சி அலைகளாகத் திரும்பத் தன் மூலாதாரத்துக்கே ஓடிப் பாய்வதாக, எதிரொலிப்பதாக எனக்குக் காட்டியது ''

என்று அவர் தம் நினைவுகளில்❋ குறிப்பிட்டுள்ளார், அதன் பின் அவரது கவிதைத் தன்மை பெருத்த மாறுபாடு பெற்றது.

தனி ஆன்மா என்றுமுள ஆன்மாவுடன் கொள்ளும் ஊடுறவு ஆகிய அனுபூதியத்தைக் கீதாஞ்சலிப் பாடல்களில் மின்னல் வெட்டாக, மழைத் தூறலாக, வீசு தென்றலாக நாம் காண்கிறோம். கடவுளை நண்பன் தோழன் காதலன் ஆசான் தலைவன் பெருமான் என

❋ Reminiscences

அவர் அழைக்கிறார், பழகுகிறார், எல்லாப் பாக்களையும் அவர் தன் தலைவனாகிய படைப்பாளியின் திருவடிகளில் படைக்கிறார். கவிஞனின் மனநிலைகள், சிந்தனைகள், விருப்புகள், உணர்ச்சிகள், நம்பிக்கைகள் ஏமாற்றங்கள் எல்லாம் அவரது பாடல்களில் வெளியிடப் படுகின்றன. இறையின்ப மகிழ்ச்சியில் மகிழ்வதும் பிரிவினில் துயருறுவதும் அவரது பாக்களின் பண்களாக இயைபு பெறுகின்றன. கடவுள், தன்னை நெருங்கி வருவதை அவர் உணர்கிறார். 'அவன் வருகிறான் அவன் வருகிறான் எப்போதும் வருகிறான்' என்கிறார். மழையிலும் தூறலிலும் கதிரொளி மூலமும் வேனில் மூலமும் தன் மகிழ்ச்சி துயரங்களின் மூலமும் கடவுள் தன்பால் வருவதைக் கவிஞர் உணர்கிறார்.

கடவுள் யாண்டும் பரந்திருத்தலைப் பல பாக்களில் நாம் காண்கிறோம். கவிஞரது நாடி நரம்புகளில் ஓடும் அதே உயிராறு பிரபஞ்சம் முழுமையும் ஓடுகிறது. அது எவ்விடத்தும் எக்காலத்தும் ஓடும் உயிராற்றுடன் ஒன்றாக உள்ளது. வேற்றுமையில் ஐக்கியம் இருக்கிறது. எண்ணற்ற வடிவங்கள் எல்லாமும் வடிவற்ற தெய்வத்தின் வெளித் தோற்றங்களே,

இவை போன்ற பலவாகிய கவிதைக் காட்சிகள் தாகுரின் அனுபூதியத்தைத் தெளிவாகக் காட்டுகின்றன. ஆனால் தாகுர் முற்ற முழுக்க அனுபூதியாளர் என்று கூற முடியாது. பகுத்தறிவையும் புலனறிவையும் அவர் நம்பாமல் இல்லை. அவரது அனுபூதியம் புதுமையான கூறுகள் கொண்டுள்ளது. அவர் மற்ற அனுபூதியாளர்கள் போல் உலக வாழ்க்கையைத் துறக்குமாறு போதிக்கவில்லை. மாறாக உலக வாழ்க்கையின் மகிழ்ச்சி அவரிடம் நிரம்பியிருக்கிறது. புலனுகர்ச்சிகளை அவர் மறுக்கவில்லை. ஆனால் அவற்றை ஆன்மிக அனுபவச் சாதனம் ஆக்குகிறார். அவரது அனுபூதியம் ஆழ்ந்த மனிதநேயத்தை - இயற்கை இரசனையை-கொண்டாடுகிறது, அதில் மகிழ்ச்சி கூர்கிறது. அவரது நடப்பியல் மனப்பாங்கு, அனுபூதிச் சார்புகளை வரம்புக்குட்படுத்துகிறது.

தாகுர் போலச் சென்ற காலத்தில் ஆங்கிலத்தில் கவி பாடிய அனுபூதியாளர்களில் வால்ட் விட்மன், அரவிந்தர் ஆகியோர் நம் நினைவுக்கு உரியவர்கள். கலீல் ஜிப்ரான் (1883-1931) அனுபூதி எழுத்தாளராகவும் ஓவியராகவும் விளங்கினார் என்பதை நாம் அறிவோம்.

தாகுரும் அரவிந்தரும்

இந்திய விடுதலைப் போராட்ட காலத்தில் சிறை வைக்கப் பட்டிருந்த போது "கண்ணனின் குழலோசை" கேட்டு ஆன்மிகவாணராக மாறியவர் வங்கத்து ஆங்கிலப் புலவர் அரவிந்தர். தாகுரைப் பற்றி உயர்ந்த மதிப்பு வைத் திருந்தார். அவர், "எல்லைகளுக்கு மேலே விஞ்சி நிற்கும் நிரந்தரமான இசை தாகுருடையது" என்று புகழ்ந்து உரைத்தார்.

"சாவித்திரி" என்ற பெருங்காப்பியத்தை ஆங்கிலத்தில் படைத்தவர் அரவிந்தர். தொகுதி தொகுதியாக அவரது ஆங்கில எழுத்துக்கள் அடைவு பெற்றுள்ளன. அருண கிரியார் ஆண்டாள் திருவள்ளுவர் பாக்கள் சிலவற்றை அவர் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்.*

கவிஞர் தாகுர் ஆன்மிகக் கலைஞர்; அரவிந்தர் ஆன் மிகக் கல்விப்புலவர். மனத்தை உயர்மனம் என்ற நிலைக்கு உயர்த்தும் ஆன்மிக ஆய்வில் தன்னை இழந்து விடுபவர் அரவிந்தர்.

மனங்கடந்ததைத் தேடும் கடும் முயற்சியர்; அதில் வெற்றியும் கண்டவர் அரவிந்தர். தாகுரின் முன்ஈடுபாடு கலை உணர்வாகும்; அதே சமயம் ஆன்மிகத்தை அதனோடு இணைத்திருத்தலும் ஆகும். ஆன்மிகம் என்ற அளவுக்கு தாகுர் அரவிந்தர் இருவரும் சமய உணர் வினர்.

தாகுரிடம் வகைமை உண்டு. அது புலன்களைப் பரவ விடுதலால் வருவதாகும். அரவிந்தரிடம் உயர்ந்த உள் ளொருமையைக் காண்கிறோம்: உண்மையை உணர்தற்

---

* அவை பாரதியாரின் மொழி பெயர்ப்புகளாகப் பாரதி யாரின் ஆங்கிலத் தொகுப்பிலும் சேர்க்கப்பட்டுள் ளன. இருவரும் சேர்ந்து எழுதினார்கள் போலும்.

கான ஓவிலா முயற்சியைக் காண்கிறோம். இமயத்தின் கொடுமுடியில் உள்ள பனியைக் கவனிக்கும் மலை யேறிக்கு ஒப்பாவார் அரவிந்தர்; அழகிய வனங்களில் ஆன்மிகப் பிரதேசங்களைத் தேடுவோர்க்கு ஒப்பாவார் தாகுர்.

தாகுர் அரவிந்தர் இருவரும் உயர் மனத்தினர், அனுபூதி யாளர், வாழ்க்கைக் கலைஞர். அவற்றோடு அரவிந்தர் ஒரு யோகியும் ஆவர். ஆன்ம உலகில் எல்லையற்றது அவரது வேலை. தாகுரின் ஆன்மிகத் தத்துவம், கலை வடிவங்களுக்கான அவரது அணுகலைத் தடுக்கவில்லை. வரம்புகளை அவர் ஒப்புக்கொள்கிறார். வரம்புகளின்றி அழகு இருக்க முடியாதே! வகைமையில் ஒற்றுமை வேண்டும். ஏனெனில் கலைஞனால் முயலப்படும் கலை வடிவத்தில் அழகுப் பண்பை ஒற்றுமை நிர்ணயிக்கிறது. அழகின் சக்தியில் அழுத்தம் வைத்திருந்தவர் தாகுர். ஆன்மிகம் தன் பங்கைச் செலுத்தும் இடத்திலும் விகிதப் பொருத்தமுள்ள அழகியல் கலைஞர் தாகுர். அரவிந்தர் தம்மை முழுக்க ஈடுபடுத்திக் கொண்ட ஆன்மிகப் பொருள்களில் தாகுர் ஆதிக்கம் கொள்ளவில்லை.

தாகுர் தன்முன் உள்ள பொருள்களைத் தெய்வம் ஆக்கு வதில்லை. ஏனெனில் அவர் மனிதன் இயற்கை கடவுள் என்ற மூன்றன் இணக்கத்தைக் கருதி நிற்பவர். அவர் உண்மை நற்பண்பு அழகு ஆகிய மூன்றும் மெய்ப் பொருளின் இயற்கூறுகள் என்று நம்புகிறவர்.

### தாகுரும் வால்ட் விட்மனும்

மேலை உலகில் பெயர் வாய்ந்த அனுபூதிக் கவிஞர் வால்ட் விட்மன் (1819-1892). புல்லின் தாள்கள்* என்ற அவரது கவித் தொகுப்பு வசன கவிதை யாப்புக்கு முன்னோடி என்பதோடு புது உலகமாகிய அமெரிக்கா வின் புது மக்கள்நாயகப் பொதுக் குரலாகவும் அது புகழ் பெற்றது.

தெய்விகத்தின் இயல்பு, ஆன்மாவின் உடைமைகள், மானிடப் பேரின்பம், உலகில் மானிட வாழ்வும் தேட்டங் களும் நிலையாமைக்கு உள்ளாதல், மரணம், பகுத்தறிவு,

* Leaves of Grasses

உள்ளறிவு, மானிட இலட்சியங்கள் ஆகியன அவரது பாடல்களில் எதிர்ஒளி பெறுகின்றன.

தாகுரும் விட்மனும் இயற்கையில் அனுபூதி அழகைப் பார்த்தனர் என்பதை அவர்களது கவிதைப் படைப்புகள் தெரிவிக்கின்றன. விட்மன் ''தெய்விகப் பொருள்கள் நன்கு மூடப் பெற்றிருக்கின்றன'' என்று அனுபூதிப் பொருள்களின் படிமங்களின் பற்றிக் கூறுகிறார். கீதாஞ்சலி யில் தாகுர் அடைந்துள்ள அழகில் அனுபூதிச் செவ்வி தோய்ந்திருக்கிறது. குறியீட்டுப் பொருள் கொண்ட வருணனைகள் தாகுரில் அனுபூதித் தொனி கொண்டுள்ளன. விட்மனில் ஆன்மிக வெளிப்பாடுகள் நம்பிக் கைத் திட்பம் கொண்டுள்ளன. தாகுரில் அழகு தெய்வி கத்தைப் போற்றுவதில் இருக்கிறது. அது விட்மனில் ஆன்மிக உண்மைகளின் மினுக்கொளியில் காணுமாறு உள்ளது.

தாகுரின் பாக்கள் கடவுளை மையமாகக் கொண்டிருக் கின்றன. விட்மனின் பாடல்கள், மனிதப் பாடல்கள், கடவுட் பாடல்கள் ஆகிய இரண்டுமாக உள்ளன. தெய்விகத்தின் உயிருள்ள அடையாளமான இருகாற் பிராணிக்குப் படையல் செய்பவராக விட்மன் அமை கிறார். ''மற்றவர்களுக்காக எல்லாவற்றையும் விட்டு விடுவதில், மற்றவர்களுக்காகத் துன்பப்படுவதில் எவ்வளவு உற்சாகம் இருக்கிறது'' என்பார் விட்மன்.

ஆன்மாவின் உன்னதமான ஆரோகணத்தில் அனுபூதிக் குரல் தங்குகிறது. மெய்யுணர்வு ஆன்மாவின் உள்ளுள் இருக்கும் இடைவெளிகளில் ஆழ்ந்து முக்குளிக்கிறது. அனுபூதிச் செயலைத் தாகுர் ''முத்துக் குளிப்போர் முத்துக்களுக்கு மூழ்குகிறார்கள், வணிகர் தம் கப்பல்களில் செல்கிறார்கள், குழந்தைகள் கூழாங் கற்களைச் சேகரிக் கிறார்கள், பிறகு சிதறி எறிகிறார்கள்'' என்கிறார். ''களிப்பு ஓர் இலையிலிருந்து இன்னோர் இலைக்குப் பரவுகிறது'' என்கிறார் அவர். ''ஆன்மாவே, நீ என்னை மகிழ்விக்கிறாய், நான் உன்னை மகிழ்விக்கிறேன்'' என்பர் விட்மன். புலங்கடந்த மேல் தளங்களில் விட்மனின் ஆன்மா விரிகிறது; தாகுரில் அது மிக உணர்தலில் தங்குகிறது.

அவர்கள் இருவரும் தெய்வ அழகை உணர்கிறார்கள். சொற்கள் சுட்ட முடியாத மிக்க அழகுடைய தெய்விகப் பொருள்கள் இருக்கின்றன என்று பிரமாணம் செய்கிறார் விட்மன். தாகுரால் அழகை உணர்தல் அனுபூதியின் இலகுவோடு நிறைவேறுகிறது.

தாகுரும் விட்மனும் இறைமை யாண்டும் விரவியிருத்தலை நம்புகின்றனர். அன்புக்கு உரியாளிடம் அனுபூதிக் கூடலுக்கு ஏங்குவது போலத் தெய்விகக் கூடலுக்குத் தாகுர் ஏங்குகிறார். விட்மன் ''உண்மையானதும் நல்லதும் அன்புள்ளதுமான'' பொருளின் பெருமையை உணர்ந்து கொண்டுள்ளார்.

அனுபூதியில் காணப்படும் உவகை வருத்தம் ஆகிய இரு பான்மைகளும் அனுபூதிப் படைப்புகளில் காணுமா றுள்ளன. விட்மனின் மகிழ்ச்சி ஒரு வகை 'முரட்டுத்தனத்' துடன் மோதுவதாக இருக்கிறது. கீதாஞ்சலியில் கவிஞர் 'நம் தலைவன்தானும் படைப்பாகிய தளையை மகிழ் வோடு தன் மேல் போட்டுக் கொண்டிருக்கிறான்' என்கிறார்.

உவகை என்பது விட்மனுக்கு ஓர்ஆன்மிக உண்மை; தாகுருக்கு அது கவிதைச் சிலிர்ப்பு, அனுபூதியாளரின் உள்ளனுபவம்.

தாகுரும் விட்மனும் மானுட நேயம் போற்றும் பண்புடை யவர்கள். உலக மானுடம் அனைத்தையும் ஒருமிக்க வைத்துப் பேசுகிறார் விட்மன். எளியோர் தாழ்ந்தோர் வைகுமிடங்களில் கடவுள் நடக்கிறார் என்கிறார் தாகுர். விட்மனோ உலகக் கவலைகளில் வழிதவறிச் செல்லும் மானுடத்துக்காக வருந்துகிறார். ஓர் ஆணோ பெண் ணோ அருகில் வருகையில் விட்மனின் குருதி விரிகிறது; மானுடம் பற்றிய அவரது கருத்தமைதி தாராளத் தன்மை யது. தாகுர் உழவர் உழைப்போரைப் போற்றுகிறார்; கடவுள் அவர்களிடம் நிற்பதாகப் பாடுகிறார். விட்மனின் மானுடம் விரிவுடையது, பற்றிக் கொள்வது; தாகுரின் மானுடம் தெய்விகத்தோடு உடனுறைவது. O

# தாகுர் [1861-1941] : சில செய்திகள்

## கீதாஞ்சலிக்கு முன்னும் பின்னும்

□ "கீதாஞ்சலிக்கு முற்காலப் பிரிவில் தாகுர் மனிதனுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவினை ஆய்கிறார். கீதாஞ்சலிக் காலப் பிரிவில் மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவை ஆய்கிறார். கீதாஞ்சலிக்குப் பிற்காலப் பிரிவில் அவர் மனிதனுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவினை ஆய்கிறார்"

□ அலெக்சாண்டர் போப் தான் எழுதிய கவிதை மடல் ஒன்றில் தன்னைப் பற்றிக் கூறுவது போலத் தாகுரும் பாலப் பருவத்திலேயே 'கவிதை மழலை' மொழிந்தார். ஏனென்றால் அவர் 'வாயினின்றும் கவிதைகள் உருண்டோடி வந்தன.'

ஏழு வயதில் தாகுர் கவிஞர். இருபது வயதில் நல்ல கவிதைத் தொகு மாலைப்பாட்டுகள் (சந்தியா சங்கீத்), இருபத்தொரு வயதில் காலைப்பாட்டுகள் (பிரபாத் சங்கீத்) ஆக அவரது கவிதை வெளிவந்தது.

□ **1905** இல் அவர் எழுதிய ஒரு பாடல் காந்தி அண்ணலுக்கு மிகவும் விருப்பமானது "தனியாகப்போ முன்னால்" என்கிறது அது.

அவர்கள் உன் அழைப்புக்கு-நாட்டுப் பணிக்கு-
　　உடன் வராவிட்டால் தனியாக நட
அவர்கள் அஞ்சி நடுங்கிப் பேச்சின்றிச்
　　சுவர்ப் பக்கம் திரும்பிக் கொண்டால்
ஆ, துரதிர்ஷ்டக் காரனே
உன் மனத்தைத் திற தனியாக உரத்துச்சொல்
அவர்கள் வேறுபுறம் திரும்பி, நெருக்கடியைக்
　　கடக்கும் போது விட்டோடினால்

ஆ, துரதிர்ஷ்டக்காரனே, உன் அடிவைப்பில்
முட்களை நொறுக்கு
குருதிக் கோடு விழுந்த தடத்தில்
தனித்துப் பயணம் செல்

என்பது அந்தப் பாட்டு.

சுதேசி இயக்கத்தின் போது அவரது பாட்டுகள் பொன்னார் வங்கம் முழுதும் முழங்கின.

பேறு பெற்றேன் நான், இந்த நாட்டில்
பிறந்தேன் என்பதால், அதனை
நேசிக்கும் அதிர்ஷ்டம் பெற்றேன் என்பதால்

என்று பாடினார்.

உலக யுத்தகங்களை-போர்க்கான பேய்க் கருவிகளை அவர் வெறுத்தார். அவரது கடவுளின் மைந்தன் என்ற பாடலின் கடைசியில்

என் கர்த்தரே என் கர்த்தரே என் கர்த்தரே
என்னை ஏன் கைவிட்டு விட்டீர்

என்று கரைந்து ஏங்கும் குரல் எழுகிறது.

□ பொதுமக்களான ஆடவர் பெண்டிரை விட்டுத் தான் ஒதுங்கியிருந்த குற்ற உணர்வோடு தன் வாழ்வின் பின்னாளில் வருந்தி எழுதுகிறார்.

எவ்வெவ் விடத்தும் நான் புகுதல் பெறவில்லை
என் வாழ்க்கை வழிகள் என்னை
இடைமடக்கிவிட்டன
புறத்தே இருத்திவிட்டன
ஏர்ப் புறத்தே உழவன்
கைத்தறியில் நெய்வோன்
வலை எறியும் மீனவன்
இவர்களும் மற்றவர்களும்
தங்களின் உலகளாவிய உழைப்பால்
உழைக்கின்றனர் உலகு புரக்கின்றனர்

என்கிறார்.

□ அவர் பாடிய தேசபக்திப் பாக்களுள் ஒன்று - இக்கால தேசிய கீதம்-''ஜனகணமன''. 1905 இல் அவரது கல்கத்தா மாளிகையில் அவரது வால்மீகி பிரதிபா நாடக

நிகழ்வைப் பார்க்க வந்திருந்த காந்தி அண்ணல், திலகர் பெருமான், லஜபதிராய், பண்டித மாளவியா முதலிய இந்தியத் தலைமக்கள் முன்னிலையில் அதனை எழுதிப் பாடிக் காட்டினார் அவர்.

நல்ல குடும்பம்

நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம் என்றனர் கவிஞர் பாரதிதாசனார். நல்ல ஒரு பல்கலைக் குடும்பத்தில் பிறந்தார்; ஒரு பல்கலைக் கழகத்தையும் தம் தந்தை ஆசிரமம் நிறுவிச் சாந்தி நிகேதனம் என்ற பெயரிட்ட இடத்தில் 'விசுவ பாரதி'யாக நிறுவினார்.

சாண்டில்ய கோத்திரத்துப் பிராமண வீட்டில் பிறந்தார் இரவீந்திர நாத தாகுர் ('ரபி'). தாக்கூர் என்பது ('தாகுர்' அதன் திரிபு) மொகல் அரசர்கள் பிராமணப் பிரபுக் களுக்குக் கொடுத்த பட்டம். இரவீந்திரரின் முப்பாட்டன் ஜெயராம் தாக்கூர் கிழக்கிந்தியக் கம்பெனிச் சேவையில் கணக்கில்லாத பெரும்பொருள் சேர்த்தார். பாட்டன் துவாரகநாத் அரசராக வாழ்ந்து பொருள் ஈட்டிப் பெரும் பகுதியைக் காலி செய்தார். அவர் புரட்சிகரமான கருத்துகள் உள்ளவர்; வைதிகத்திற்கு எதிரி. முதன் முதலில் இங்கிலந்து சென்ற சீர்திருத்த மேதை-இராசா என்று ஆங்கில அரசால் பட்டம் பெற்று மதிக்கப்பட்ட புலவர் - இராம் மோகன்ராயின் கூட்டாளியாக அவர் விளங்கினார்.

இரவீந்திரரின் தந்தை தேவேந்திரநாத் முடிந்த அளவு மீண்டும் சொத்துச் சேர்த்தார். இறுதி வரை பெரிய மாளிகையில் வேலைக்காரப் பட்டாளத்தோடு வசதியாக இருக்கும் வாழ்வு இரவீந்திரருக்கு வாய்த்தது. கம்பன் வீட்டுக் கட்டுத் தறிபோலத் தாகுர் வீட்டு வேலையாள் களும் கதை கற்பனை வல்லவராக இருந்தார்கள். இளம் இரவீந்திரர்க்கு கதைகள், பெருங்காப்பியக் கதைகள் சொன்னவர்கள் அவர்கள் தாம்.

இரவீந்திரர், தேவேந்திரநாத் - சாரதாதேவி தம்பதி களுக்குக் கடைசிப் பிள்ளை; பதினாலாவது. தாய் சாரதா

ஒரு கையால் சமையலும் ஒரு கையால் புத்தகம் பிடித்து வாசித்தலும் செய்வார் என்பர். கடுமையான படிப்பாளி அவர். ஆனால் பெரிய குடும்பத்தின் பொறுப்பும் உடல் நலமின்மையும் காரணமாக இளம் தாகுரை அவர் அதிகம் கவனிக்க முடியவில்லை; அதிக காலம் வாழவும் முடிய வில்லை.

தாகுர் குடும்பம் 'பிரம்ம சமாஜ'த்தில் சேர்ந்திருந்தது. உருவ வழிபாடு, சாதி வேறுபாடு, பிற்போக்கு, மூட நம்பிக்கைகள் என்பன அவர்களுக்கு ஆகா. இறை யுணர்வு, புதுமை விருப்பு, சர்வதேச மனப்பான்மை, உலகம் சுற்றல், மானுட நேயம் ஆகியன அவர்களுக்கு இணக்கம். இரவீந்திரர் 'ஆதி பிரம்ம சமாஜ'த்தின் செய லாளராக இருந்தார்.

தாகுரின் மாளிகை எப்போதும் பாட்டு மயமாகஇருக்கும்; நடனம் நாடகம் ஆராய்வு விவாதம் என்று கோலாகல மாக - சிந்தனைச் சார்பாக - இருக்கும். இரவீந்திரரின் அண்ணன் ஒருவர் முதன் முதலில் ஐ.சி.எஸ் தேறிய இந்தியர் ஆவர். உண்மையில் அவர்கள் இல்லம் ஒரு நல்ல பல்கலைக் கழகம். மேற்கும் கிழக்கும் அங்கே சங்கமம். பாரசீகம் சமஸ்கிருதம் ஆங்கிலம், வங்கத்தொடு அங்கு உரையாடின.

☐ தந்தை தேவேந்திரர் முனிவர் போன்ற படிப்பு ஒழுக்கம் மேற்கொண்டவர். ஆகவே அவரை மக்கள் மகரிஷி என்றார்கள். தன் கடைக்குட்டி மகனோடு வெள்ளிப்பனி மலையின் மீது உலவினார். அமிர்தசரஸ் முதலிய தலங்களுக்குச் சென்றார். மைந்தனுக்கு உப நிடத அமுதை ஊட்டினார். சீர்திருத்த விழிப்பு மனப் பான்மையை உண்டாக்கினார்.

### வெள்ளம் போற் கவிப் பெருக்கு

☐ வியக்கத்தக்க அளவுக்கு இரவீந்திரரின் எழுத்தாட்சி நடைபெற்றது. தன்னுணர்ச்சிப் பாக்கள் ❋ இரண்டா யிரம்—அந்த அளவு; யாரும் எழுதவில்லை என்பர் அறிஞர் - எழுதியுள்ளார். அவர் எழுதிய பாவடிகள்

❋ Lyrics

ஒன்றரை லட்சம் என்றொரு கணக்கு இருக்கிறது. அவை யல்லாமல் நாடகம் சிறுகதை புதினம் கடிதம் தன் நினைவு சொற்பொழிவு என்று படைப்பாக்கம் விரிந்து கிடக்கிறது.

தன் கடைசி மூச்சு இருக்கும் வரை அவர் கவி பாடினார். நிறைவாழ்வு (80) வாழ்ந்தார். வாழ்க்கையைக் காதலித் தார்; அதிலே மூழ்கினார், மகிழ்ந்தார், கொண்டாடினார்.

☐ காந்தி அண்ணலை 'மகாத்மா' என்று அழைத்து அந்த மதிப்புரையே அவருக்குப் பெயராக உலகெங்கும் விளங்கச் செய்தவர் தாகூர். தொடக்கத்தில் காந்தி அண்ணலின் கைராட்டை இயக்கத்தைக் குறைகூறி அது நாட்டு விடுதலையைத் தராது என்று எழுதினார் அவர். அதற்குப் பதிலாகக் காந்தி அண்ணல், கவிஞரின் வானிற் பறக்கும் பறவைகள் இந்தியாவின் கோடானு கோடி மக்களின் பசிக்கும் வயிற்றுக்கு இரை கொண்டு வந்து தரமாட்டா என்று இளம் இந்தியாவில் எழுதினார். காலப் போக்கில், கும்பகருணப் பெருந்துயிலில் இருக்கும் நாட்டைக் காந்தியம் தான் எழுப்பும் என்று கண்ட கவிஞர் தன் கருத்தை மாற்றி இணக்கம் கொண்டார்.

## பட்டங்கள் தேடி வரல்

☐ தாகுரின் இலக்கியத் திறனை மதிக்கக் கருதிய ஆங்கில அரசு (1914 இல்) அவருக்கு நைட் (சர்) விருதி னைத் தந்தது. சர் பட்டம் அந்நாளில் கிடைத்தற்கு அரிய ஒன்று. ஆனால் ஆங்கிலத் தளபதி ஒருவன் ஜாலியன் வாலாபாக்கில் (1919) பேயாட்டம் போட்டு ஏராளமாக உயிர்ப்பலி வாங்கியதைக் கடிந்து கவிஞர் அந்தப் பட்டத்தைக் கொடுத்தவர்களிடமே திருப்பிக் கொடுத்து விட்டார்.

அவர்க்குக் கிடைத்த பட்டங்களில் ஒன்று. மூத்த பல்கலைக் கழகமாகிய ஆக்ஸ்போர்டு கொடுத்த மதிப்புறு டாக்டர் பட்டம். உடல்நலம் போதாதிருந்த கவிஞர்க்கு 1940 இல் சாந்தி நிகேதனில் பட்டமளிப்பு நடத்தி வைத்தது அந்தப் பல்கலைக் கழகம். சர் மோரீஸ் க்வேயரும் டாக்டர் ச. இராதாகிருஷ்ணனும் ஆக்ஸ்

போர்டு சார்பில் பட்டமளிப்புச் செய்தனர். பட்டமளிப்பு ஐரோப்பாவின் மூத்த மொழிகளில் ஒன்றாகிய இலத்தீனில் நடைபெற்றது. வதற்கு இந்தியாவின் மூத்த மொழிகளில் ஒன்றாகிய சமஸ்கிருதத்தில் பதில் அளித்தார் தாகுர்.

இந்தோ ஆங்கிலிய இலக்கியம்[1]

▢ ஆங்கிலத்தில் இந்தியரால் எழுதப்படும் எழுத்து, இந்தோ ஆங்கிலிய இலக்கியம் எனப்படுகிறது.

ஆங்கிலோ இந்திய நூல்[2] என்பது ரட்யார்டு கிப்ளிங்[3] போன்றோர் இராஜாக்கள் காடுகள் பாம்புகள் நிரம்பிய இந்தியாவைப் பற்றி எழுதியவையாகும்.

இந்தோ - இங்கிலீஷ்[4] இலக்கியம் என்பது மொழி பெயர்ப்புகள்.

இந்தோ ஆங்கிலிய இலக்கியம் என்பது தாகுர், கா.சீ. வேங்கடரமணி, முல்க்ராஜ் ஆனந்த், இராஜா ராவ் போன்ற இந்தியர் ஆங்கிலத்தில் எழுதியனவாகும்.

இந்தோ ஆங்கிலிய இலக்கியம் தாகுரால் மேற்கிலும் கிழக்கிலும் வடக்கிலும் தெற்கிலும் மதிப்பும் உலக அங்கீகாரமும் பெற்றது

இன்று அதன் கவிதை வகையில் பெயர் பெற்று விளங்குபவர்களில் ஒருவர் ஏ.கே. இராமானுஜன்; புதின வகையில் தனித்து உயர்ந்து திகழ்பவர் ஆர். கே. நாராயண். இந்த இலக்கிய வகை பற்றி மிக நுட்பமாகவும் விரிவாகவும் ஆய்வு நூல்* அளித்தவர் பேராசிரியர் கே. ஆர். சீனிவாச அய்யங்கார்.

இவர்கள் தமிழ் நிலத்திற்கும் இந்திய நாட்டிற்கும் உலக இலக்கியத்திற்கும் பெருமை சேர்க்கிறார்கள்.

O

---

1. Indo-Anglian Literature :
2. Anglo-Indian Literature : 3. Rudyard Kipling
4. Indo-English Literature
* Indian writing in English

இன்பம் கொழிக்கும் இறைமை இலக்கியம்—
எல்லோரும் இன்புற்றிருக்க எண்ணி
நித்தம் தவம் செய்யும் இந்தியத்தின்
தெளிந்த ஆன்மிக மெய்ப்பாட்டு — கீதாஞ்சலி
அதன் 103 பாடல்களுக்கு உள்ளுறை தெளிவு விளக்கம்

# தெய்வ மணக்கும் கீதாஞ்சலி

## ஒன்று
## மகிழ்ச்சிப் பெருக்கு

☐ நம்பிக்கையோடும் உவகைக் களிப்போடும் **கீதாஞ்சலி** தொடங்குகிறது. நிலையாமை நில்லாமை இல்லாமை என்பவற்றுக்கு எதிராக, நிலைபேறு உறுதி நிறைவுடைமை என்பவற்றின் ஆற்றலுடன் பாடல் அடியிட்டு நடக்கிறது.

'என்னை அழிவிலனாக நீ சமைத்திருக்கிறாய்; இவ்வாறு இருக்கிறது நின் மகிழ்வுணர்வு' என்று கொண்டாட்டத் துடன் தொடங்குகிறது முதற்பாடல். முதற் கொண் டாட்டம் முற்றிலும் கொண்டாட்டம் என்னுமாறு நூல் முழுதும் இன்பச்சுவை அடிப்படைச் சுவையாக அலை வீசுகிறது.

☐ நொய்தான இந்தக் கலத்தை மீட்டும் மீட்டும் ஒன்றுமிலதாகச் செய்து அதனை மீட்டும் மீட்டும் புத்திளம் உயிரால் நிரப்புகிறான் இறைவன். சிறிதான இந்தப் புல்லாங்குழலை அவன் மேடு பள்ளங்கள் எல்லாம் கொண்டு செல்கிறான். அங்ஙனம் செல்லுங்கால் அதில் என்றென்றும் புதியவாம் பண்களைப் பொழி கிறான்.

இறைவன் தன் கையால் கவிஞரின் இதயத்தைத் தொடு கிறான். இறைமையின் தொடு உணர்ச்சி பட்டதும் மகிழ்ச்சிப் பெருக்கில் கவிஞரின் நெஞ்சம் தன் எல்லை களை இழக்கிறது. உரைக்க இயலா உரைகள் அதனின் றும் பிறந்தோடி வருகின்றன.

இறைவனின் ஈறிலாக் கொடைகள் கவிஞர்க்கு அவர்தம் சிறு கைகளின் வழியே வருகின்றன. ஊழிகள் கழிகின்றன. இறைமையின் கொடைகள் வந்தவாறிருக்கின்றன. இருப் பினும் நிரப்புதற்கு இன்னும் இடம் இருக்கிறது என்று இன்பக் கலப்பில் கவிஞர் உணர்கிறார்.

1. என்னை முடிவிலன் ஆகச் சமைத்தனை. அவ்வாறு உளது நின் உவகை. வலுவற்ற இந்தக் கலத்தை வறிதாக்கி வறிதாக்கி அதனைப் புத்துயிரால் எப் போதும் நிரப்புகிறாய்.

   இந்தச் சிறிய புல்லாங் குழலை நீ குன்றுகள் தாழ் நிலங்களிடைக் கொண்டுசெல்கிறாய், இதனுள் நிரந்தரம் புதுப்புதுப் பண்களை உயிர்க்கிறாய்.

   நின் கைகளின் அமரத்துவத் தொடுதலால் என் சிறு நெஞ்சம் மகிழ்ச்சியில் தன் வரம்புகளை இழக்கிறது. உரைத்தற்கு இயலா உரைகளைத் தோற்றுகிறது.

நின் கணக்கிலாக் கொடைகள் எனது இந்தச் சிறு கைகளின் வழியே வருகின்றன. காலங்கள் செல் கின்றன. நீ இன்னமும் பொழிகிறாய்; ஆயின் இன்ன மும் நிரப்ப இடமிருக்கிறது.

□ என்றும் இருப்பது ஆன்மா. அதற்கு அழிவு கிடை யாது. அஃது அவ்வாறு இருப்பது இறைவனின் விழைவு. தன் கூறாகிய மானிட ஆன்மா தன்னைப் போல் என்று முளதாக இருத்தல் வேண்டும் என்பது தானே இறை வனின் விருப்பாக இருக்க முடியும்?

ஆயின் ஒரு வினா. மானிட யாக்கை மண்ணின் கலம் போல்வது; வாழ்க்கை நீர்மேல் எழுத்துப் போல்வது; அதற்கு ஏது நிலைபேறு?

ஆம். யாக்கை நொய்தானதே; மண்ணின் கலம் போன்றதே. ஆகலின் இறைவன் அதனை வறிதாக்கி வறிதாக்கி உயிரைப் புதிது புதிதாக இளமையோடு புதுப் பித்து அளிக்கிறான்.

□ இறைவன் மிகப் பெரிய இசைவாணன். அவன் கை களில் கவிஞர் ஒரு புல்லாங்குழல். இன்ப துன்பங்கள், மலைகள், தாழ்வெளிகள் என்று எல்லாவற்றிலும் அவன் அதனை ஏந்திச் செல்கிறான். இறைமையின் உள்ளு ணர்வு — அகத் தூண்டல் - கவிதைக்கு உயிராகிறது. அந்த உள்ளுணர்வின் உயிர்ப்பு கவிஞரிடம் முகிழ்த்ததும் அவர் தம் நெஞ்சம் அவரை யறியாமல் அவரது இயற்பியல் எல்லைகளைக் கடந்து செல்கிறது. அவர் தன்னை இழக்கிறார்.

□ இறைவன் பெருங் கொடைஞன். அளவின்றி அள்ளி வீசுகிறான். ஆனால் மானிடத்தின் கரங்கள் சிறியன. ஆகவே மானிட ஆன்மா பேரின்பத்தின் முழுமையைத் துய்க்க முடியாமல் திணறுகிறது. தன் அருளின்பக் கொடையை இறைவன் என்றும் நிறுத்தியதில்லை. மானுடத்தின் அறிவும் பெருமையும் பெருகப் பெருகப் பேரின்பக் கொடையைப் பெரிதும் துய்க்க முடியும்.

☐ தன்னைப் பற்றிச் சொல்கையில் கவிஞர் நொய்தான கலம், சிறிய புல்லாங் குழல், சிறிய இருதயம், மிகச் சிறிய கைகள் என்ற படிமங்களை ஆள்கிறார். இறைமையைப் பற்றிச் சொல்கையில், குழலூதி, நிரப்புவோன், உயிர்ப்போன், அமரத்துவக் கையான், முடிவிலாக் கொடைஞன் என்று, என்றுமுளதாம் தன்மையின் படிமங்களை ஆள்கிறார்.

☐ நைந்த உடைகளைக் களைந்து எறிந்துவிட்டு ஒருவன் புதிய உடைகள் அணிதல் போன்று நைந்த யாக்கையை உதறிவிட்டுப் புதிய இளைய யாக்கையில் மானிடன் மீண்டும் மீண்டும் தோன்றுதல் பற்றிக் கண்ண பெருமான் கூறும் கீதைக் கருத்து இப்பாடலில் மிளிர்வது காண்கிறோம்.

C

# இரண்டு
# பறவைச் சிறகு

☐ 'பாடுக' என்று இறைவன் கவிஞர்க்கு கட்டளையிடுகிறான். கவிஞரின் நெஞ்சம் பெருமிதத்தில் அப்படியே வெடித்துவிடும் போல் இருக்கிறது. அவர் இறைவனின் முகத்தைப் பார்க்கிறார்; அவரது கண்களில் நீர் துளிக்கிறது.

அவரது வாழ்வில் கடூரமும் முரண்பாடுமாக இருந்தன யாவும் உருகி இனியதோர் இசையாகி விடுகின்றன. அவ்வளவில், மகிழ்ச்சி மிக்க பறவை ஒன்று கடல்மேல் பறக்குங்கால் சிறகு பரப்பிச் செல்லுதல் போல் அவரது ஆராக் காதல் சிறகு பரப்புகின்றது.

தான் பாட்டு இசைப்பது இறைவனுக்கு உவப்புத் தருகின்றது என்பதைக் கவிஞர் உணர்கிறார்; இறைவனது முன்னிலையில் ஒரு பாடகன் என்ற முறையில் தான் வருகிறோம் என்பதும் அவருக்குத் தெரிகிறது.

வேறு எவ்வகையாலும் அடைதற்கு ஆசைப்பட முடியா இறைவனின் அடிகளைக் கவிஞர் நெடுக விரிந்த தன் சிறகுகளால் தொடுகிறார்.

பாடுங் களிப்பைப் பருகிய கவிஞர் அதில் தன்னை மறக்கிறார். தன் பிரானைத் 'தோழனே' என்று அழைக்கிறார்.

2. யான் பாட நீ ஆணையிட்டதும் என் நெஞ்சு பெருமிதத்தில் வெடித்துவிடும் போல் இருக்கிறது. நின் முகம் நோக்குகிறேன்; என் கண்கள் நீர் துளிக்கின்றன.

   என் வாழ்வின் கடூரமும் முரணும் ஓர் இன்னிசையாய் உருகுகின்றன. கடல் மேல் பறக்கும் மகிழ்ச்சியான பறவை என, என் போற்றுதல் சிறகு விரிக்கிறது.

   யான் பாட நீ உவகை கொள்கிறாய் என நான் அறிவேன். ஒரு பாடகன் என்ற முறையில் தான் நின்முன் வருகிறேன் என அறிவேன்.

   ஒருகாலும் அடைதற்கு இயலாத நின் அடியை, வெகு தூரம் விரியும் என் பாடற் சிறகின் விளிம்பால் தொடுகிறேன்.

   பாடுதலாம் உவகை மதுவைப் பருகி என்னை யான் மறக்கிறேன். என் பெருமானே, நின்னை நேயனே என்று அழைக்கிறேன்.

☐ பாடுமாறு தன்னை இறைவன் பணித்ததாலே தான் பாடுவதாகக் கவிஞர் கருதுகிறார். தெய்விக உள் தூண்டல் வாய்க்கப் பெற்றதால் இசை கனியப் பாடுகிறார். தெய்விக உள்ளுணர்வால் அவரது நெஞ்சம் உவகைச் செருக்கில் விம்மிதம் உறுகிறது. பரவசத்தில் கண்கள் தொடுநீர்க் கேணியாகின்றன. தன்னை ஆக்கியோனை[' அவர் நேர் காண்கிறார்.

ஆன்மாவைக் கவிந்திருந்த கடூரமும் மாசும், கேடும் தீயவுமான சக்திகள் எல்லம் உருகி அதனைத் தூய் தாக்கி விழுப்பமுறச் செய்யும் இன்னிசையாய் உருமாற்றம் பெறுகின்றன. அமைதியும் களிப்பும் கனிவும் இன்னி

சையின் ஆக்கக் கூறுகள் ஆகின்றன. தன் மாநில இருப்பை மறந்து கவிஞர் ஒன்றிய தேனிப்பாலும் உள்ளுதலாலும் தன்னை இழக்கிறார். மேன்மேல் உயர்ந்து எல்லையற்ற பெருங்கடலைக் கடத்தற் பொருட்டுச் சிறகு மலர்த்திப் பறக்கும் பறவை போல் அவர் ஈறிலாப் பெரும் பொருளை அடைய ஒரு பாட்டுப் பறவையாகக் களிப் புடன் பறக்கிறார்.

□ திறமிக்க இசைஞன் குழப்பத்திலிருந்து ஒழுங்கைச் சமைக்கிறான்; கரடுமுரடான கடிய ஓசைகளை உருக்கிக் குழைத்துப் பண்களாக வார்த்து, அழகும் உவகையும் கொழிக்க இசைக்கிறான். ஆகவின் அவனுக்குள் கடவுளி யற் பார்வையும் பண்பும் வந்து சேர்கின்றன. இறைவன், ஒழுங்கின்மையும் மோதலும் சீர்கேடும் மலிந்த குழப்ப நிலையிலிருந்து ஒழுங்கும் சீர்மையும் உடைய பண்ணாக இவ்வுலகை இசைமையுறச் செய்தான். இந்த அண்ட பேரண்டமாகிய அழகிய படைப்பு இறைவனின் இசை யின் பயனேயாகும். அதனால் தான் கவிஞர், தன்னைப் போன்று இசைக்கும் பேரிசைவாணனான இறைவனை அணுக முடிகிறது. இசை வாயிலாக மானிட ஆன்மா இறைமையுடன் ஒன்றுதல் இயலும் என்பதால் அருள் வாய்த்த இசைஞர்கள் அனுபூதிப்பேறு எய்துகிறார்கள்.

ஆயினும் கவிஞர்க்கு ஒரு மனக்குறை. அனுபூதித் தருணங் களிற் கூட இறைவனது காட்சியை முழுமையாகக் கண்டு நுகர முடியவில்லை என்பதே அது. பறவை தன் விரிந்த சிறகரின் விளிம்பால் எட்ட முடிதல் போல் இறைவனின் அடிகளைத் தன் ஆன்மிக இசையின் விளிம்பால் தொட்டு விடலாம் என்று நம்புகிறார்.

பாடும் பரவசத்தில் மயங்கிய கவிஞர், தான் எளிய ஓர் அடியவர் என்பதை மறந்து விடுகிறார். இறைவனாம் தலைவனைத் தனக்கு நிகரானவன் என நினைந்து 'நண்பா' என்று அழைக்கிறார்.

□ இசைஞன் அல்லது கவிஞன் தன் இதயம் ஆர்ந்த ஈடுபாட்டால் இறைக் கலப்பாம் களியைப் பெற முடி கிறது. யாவரே யாயினும் தத்தம் திறங்களை இறை

வணக்கத்தில் முழுமையாக ஒப்படைத்தால் அனுபூதி இன்பம் கிட்டுகிறது. அத்தகைய சந்தர்ப்பங்களில் மானிட ஆன்மா கடவுளுடன் ஒன்றுதற்காக மிக உயர்ந்து எழுகிறது.

இந்த மெய்ம்மையினை விளக்குதற்குக் கவிஞர் அழகிய இசைவான படிமம் ஒன்றை—விரி சிறைப் பறவையினைப் பெருங்கடல் மேல்—காட்டுகிறார்; பாதம் தொடுதலும் காட்டப்படுகிறது. மானிடனையும் இறைவனையும் பிரிக்கும் பெருங்கடலைக் கடக்க அந்தப் பறவையாம் உருக்காட்சி வழி துலங்கச் செய்கிறது. கடல் பெரிது, அதற்கு ஏற்பச் சிறகு விரிந்தது; அதனால் இன்பம் மிகுந்துளது.

O

# மூன்று
## கவர்ச்சி வலை

□ தன் ஆசானாகிய இறைவன் எப்படித் தான் பாடுகிறானோ என்று திகைக்கிறார் கவிஞர். அவனது பாட்டைச் செவி மடுத்துச் செவிமடுத்து மௌன வியப்பில் மயங்கி நிற்கிறார் அவர்.

அவனது இன்னிசை வையத்தை ஒளிரச் செய்கிறது. அவனது இசையாம் உயிர்க்காற்று அண்ட முகடுகளில் தாவி ஓடுகிறது. அவனது இன்னிசையாம் தூய நீரோடை கற்களாம் தடைகளை உடைத்துக் கொண்டு ஊடு பாய்ந்து செல்கிறது.

ஆசானின் பாட்டு இசையோடு தானும் இணைந்து பாடச் சிடராம் கவிஞரின் நெஞ்சம் அவாவுகிறது. ஆனால் குரல் வராமல் திண்டாடுகிறார். அவரால் பேச முடியும். ஆனால் பேச்சு பாட்டாகக் குழையவில்லை. பேச்சு பாட்டு ஆகாதே! கதறுகிறார் அவர்.

ஆகா! ஆசான்—தலைவன்-ஆகிய இறைவன் தன் இசையாகிய கண்ணி வலையில் கவிஞரது நெஞ்சை அகப்படுத்திவிட்டான்!

3. நீ எப்படிப் பாடுகிறாய், அதனை யான் அறிகிலேன். ஐயனே, வாய் மூடிய வியப்பினில் நான் எப்போதும் நின்னை நோக்குகிறேன்.

நின் இசையின் ஒளி, உலகை ஒளிரச் செய்கிறது. நின் இசையின் உயிர்க்காற்று விண்ணில் ஓர் புறத்திருந்து இன்னோர் புறம் ஓடுகிறது. நின் இசையின் புனித ஓடை, கல் தடைகளை எல்லாம் நெருக்கித் தள்ளிப் பாய்கிறது.

நீ பாடுங்கால் நானும் கலந்து கொள்ள என் நெஞ்சம் அவாவுகிறது. ஆனால் குரல் வாராது வீணே போராடுகிறது. நான் பேசுவேன், ஆனால் பேச்சு பாட்டாக வெடிப்புற்று வருவதாக இல்லை. குழப்பத்தில் கதறுகிறேன். ஆ! என் ஐயனே, நின் இசையாகிய ஈறிலா வலைக் கண்ணிகளில் என் நெஞ்சைச் சிக்க வைத்து விட்டாய்!

□ ஈடற்ற இசை வல்லுநன் இறைவன். அவனது பண் இந்த மன்னுலகாக மலர்ந்திருக்கிறது. ஒழுங்கும் இனிமையும் அழகும் விழுப்பமும் கொண்டது அது. அதன் மேன்மை, கவிஞர்க்கு மயக்கம் தருகிறது. அந்த இசை, ஒளியாக-உயிர்க் காற்றாக-நன்புனல் ஓடையாக-அண்டமெங்கும் பாய்ந்து ஒளியும் உயிரும் வாழ்வும் சுவையும் தருகிறது. தடைகளைத் தகர்த்துச் செல்நெறியைச் செந்நெறியாக்கி வளம் சேர்க்கிறது அது.

ஆசானொடு சீடன் இணைந்து பாடுதல் மரபு. அவ்வாறு இணைந்து பாட விழைகிறார் கவிஞர். ஆனால் கலைத்திறம் சான்ற ஆசானுக்கு ஒப்ப உயர்ந்து நின்று பாட முயல்கிறார். குரல் வரவில்லை. பேச்சு இசையாக இழையவில்லை. திண்டாடுகிறார், கதறுகிறார். அதற்குக் காரணம்?

இசைமயமாக வியனுலகு அனைத்தையும் படைத்த இறைவன் மயக்கம் அளிக்கும் கவர்ச்சிகளையும் எவ்விடத்தும் பொருத்தி வைத்துள்ளான். கவர்ச்சிக் கண்ணிகள் பறவையின் கால்களைப் பற்றிக் கொள்ளல் போல்,

கவிஞரின் குரலைப் பற்றிக் கொள்கின்றன. கவிஞர் கதறுகிறார்; இசை கனியவில்லை.

ஆன்மிகப் பேரிசையைப் படைத்த இசைவாணனே, மாறி விடும் பிரபஞ்ச இசையையும் ஊதுகிறான். கவிஞரின் நெஞ்சம் பிரபஞ்சக் கவர்ச்சி வலையுட்பட்டு விடுகிறது. ஆகவே மீமிசை எழுந்து இறையிசையோடு ஒன்ற முடியாமல் சிக்கித் தடுமாறுகின்றது. எனவே அலமரல் உண்டாகின்றது.

▢ இப் பாடலில் இசையானது, ஒளியாகி செவிப் புலனின் இலக்கணத்தைக் கட் புலனுக்குத் தருகிறது. இலக்கணை எனப்படும் இது Synaesthetic என்று கூறப் படுகிறது. இசையானது, இசையாக-ஒளியாக-புனலோ டையாகக் காட்சி பெறுகின்றது.

▢ முற்காலத்துப் பக்திப் பாவலர்களின் தாக்குரவு இந்தப் பாடலில் அறியுமாறு உளது.

O

# நான்கு
# உயிரின் உயிர்

▢ 'உயிரின் உயிரே!' என்று இறைவனை உட்கனி வோடு அழைக்கிறார் கவிஞர். அழைத்துத் தனது முயற்சிகளை, இறைமையின் இணைவுக்கான ஆள்வினை களை, இதயப் பூர்வமாக அவனிடம் இயம்புகிறார்.

நம் யாக்கையின் பகுதி ஒவ்வொன்றிலும் இறைமையின் உயிரோட்டமான ஊறு (ஸ்பரிசம்) இருக்கிறது. இறைமை யின் ஊறே உடம்பின் உறுப்பு அனைத்துக்கும் வாழ்வும் ஆற்றலும் தருகின்றது. ஆகவே கவிஞர் தன் ஊனுடம் பைத் தூய்தாக வைத்திருக்க எப்போதும் முயல்வார்.

இறைமை என்பது மெய்ம்மை. இறைவன் தன் மெய்ம்மை யொளியால் மானிட மனத்தில் அறிவாம் சுடரைப் பொருத்துகிறான். ஐயறிவு (பிரபஞ்ச அறிவு) பகுத்தறிவு

(விவேகம்) மெய்யறிவு (ஞானம்) என்பன அந்தப் பேரொளியின் சிறிய பெரிய சிதறல்கள். ஆகவே கவிஞர் தன் நினைப்பினின்று உண்மையல்லாதவற்றை-இருளானவற்றை-தூர விலக்க எப்போதும் முயல்வார். இறைமை ஒளி அதனால் மனத்தின்கண் விடாது இலங்கிவரல் இயலும்.

இறைமை என்பது அன்பு. ஆகவே கவிஞர் அன்பினை அதன் முழு மலர்ச்சியோடு நெஞ்சில் வைத்துப் போற்றுவார். நெஞ்சின் உள்ளார்ந்த பீடத்தின்மிசை இறைவன் இருக்கை கொண்டுள்ளான் என்பது அவருக்குத் தெரியும். ஆகவே கடிய உணர்ச்சிகளை, தீயவற்றை நெஞ்சினின்று துரத்திவிட அவர் எப்போதும் முயல்வார்.

இறைமை, உயிரின் உயிர். அதுவே மூலாதார சக்தி, செய்கைக்கு வித்து, ஆற்றும் துணை. ஆகவே கவிஞர் தன் செயல் அனைத்திலும் இறைமையின் சீரும் சிறப்பும் துலங்கித் தோன்ற எப்போதும் முயல்வார்.

4. என் உயிரின் உயிரே, நின் உயிர்த்துடிப்பான ஊறு (ஸ்பரிசம்) என் உறுப்புகள் யாவற்றிலும் இருக்கிறது என்று அறிகிறேன். ஆகலின் என் உடம்பைத் தூய்தாக வைத்துக் கொள்ள எப்போதும் முயல்வேன்.

   என் மனத்தில் பகுத்தறிவின் ஒளியைத் தூண்டிய உண்மை நீ தான் என்று அறிகிறேன். ஆகலின் என் எண்ணங்களினின்று பொய்ம்மை யாவற்றையும் விரட்டிவிட எப்போதும் முயல்வேன்.

   என் நெஞ்சின் உள்ளுறை பீடத்தில் நீ இருக்கை கொண்டுள்ளாய் என்று அறிகிறேன். ஆகலின் என் நெஞ்சினின்று தீமை அனைத்தையும் வெளியே துரத்தவும் மலரில் என் அன்பை வைத்துப் பேணவும் முயலுவேன்.

   நின் சக்தியே எனக்குச் செயலாற்றல் தருகிறது என்று அறிகிறேன். ஆகலின் என் செயல்களில்

எல்லாம் நின்னைப் புலப்படுத்துவது என் முயற்சி யாக இருக்கும்.

☐ இயன்ற வகையில் தன்னை இறைமையாம் பேரான் மாவின் இணக்கத்துக்குத் தகுதியுடையவர் ஆகச் செய்து கொள்ளும் முயற்சிகளை இப் பாடலில் நிரல்படக் கூறு கிறார் கவிஞர். அன்பு நெஞ்சினர், அருள் நெஞ்சினர் ஆகிய பலர்க்கும் பேராளராக (பிரதி நிதியாக) இருந்து கவிஞர் விளம்பும் பயிற்சிப் படிகள் இவை. எங்கும் பரவி ஊடுருவி நிறைந்துள்ள இறைமை, மானிடனின் யாக்கை மனம் நெஞ்சு செயல் என்பவற்றிலும் ஊடுருவி; நிற்றலின் ஒவ்வொருவரும் அவ்வவற்றிலும் தூயராய், கேட்டினின் றும் தம்மைக் காத்துக் கொள்ளுதல் இன்றியமையாதது. இறையனுபவத்திற்கு முக்கியமானது தன் துப்புரவு என்பது இப் பாடலால் வலியுறவு பெறுகிறது.

☐ மலர் என்ற குறியீடு கீதாஞ்சலி யில் பல விடத்தும் பூத்துத் திகழ்கிறது. அழகு அன்புடைமை இனிமை என்பவற்றின் அடையாளப் பொருள் அது. இதயத்தின் குறியீடாகவும் அது வரும். இதயமலர் என்று கூறுவது வழக்கு. 'மலர்மிசை ஏகினான்' என்றனர் நாயனார்.

O

# ஐந்து
# ஒரு நொடிச் சலுகை

☐ இறைவனிடம் ஒரு நொடிப் பொழுதுச் சலுகை ஒன் றைக் கேட்கிறார் கவிஞர்.

இறைவனின் அருகில் சற்று நேரம் அமர்ந்திருக்க வேண் டும்; இதுவே அவர் வேண்டும் சலுகை. அதனைக் கெஞ்சிக் கேட்கிறார்.

கைவேலைகள் இருக்கின்றன. அவற்றை அவர் அப்புறம் முடித்துக் கொள்வார். தனக்கு ஊக்கம் ஊட்ட, உள்ளுரம் ஏற்ற, இறைமைக் காட்சி என்ற வீரிய மருந்து வேண்டி யுள்ளது. ஆகவே தன் வேலைகளை நிறுத்தி விட்டுத்

தியானத்தில், இறைமை யின்பத்தில் இருத்தற்கு அவர் ஆசைப் படுகிறார்.

இறைவனின் திருமுகக் காட்சி அவர்க்கு வாய்க்காது விலகி விட அதனால் அவருக்கு ஓய்வும் ஒழிந்தது, இடையிடை நிலவும் அமைதியும் தொலைந்தது. ஆகவே உலகியற் கடமைகள் என்பன கரை காணா வேலையாம் கடலில் முடிவறியா உழைப்பாகத் தோன்றுகின்றன. ஆதலின் அவருக்குச் சலிப்பு வந்துவிட்டது. இறைமைக் காட்சி என்ற அனுகூலம் கிடைக்குமாயின் மலையும் கடுகு ஆகி விடும், கடலும் துளியாகி விடும், வேலைகள் தூசாகி விடும்.

இளவேனிற் பருவம் வந்துவிட்டது. கவிஞர் வீட்டுச் சன்னல் ஓரத்தில் வந்திருக்கும் அழகிய காட்சிகள், நலமான ஓசைகள் என்பன அதற்குக் கட்டியம் கூறு கின்றன. மென்காற்றின் சுறச்சு ஒலி, ஓடைகளின் இனிய முணுமுணுப்பு ஓசை, பூமரக் காடெலாம் சுரும்பரின் பண்கள்-இவை மேவித் தவழ்கின்றன. அவை கவிஞரின் எண்ணங்களைப் படைப்பாளியின் பக்கம் திருப்புகின்றன.

எங்கும் அமைதியும் மகிழ்ச்சியும் அணைந்துள பருவத் தில் இறைவனை நேருக்கு நேர் காணவும் அவன்முன் அமரவும், அமைதியும் ஓய்வும் நிறைந்த அவ்வேளை யில் தன் வாழ்வை அவன்முன் ஒப்படை செய்து பாடி மகிழவும் வேணவாக் கொள்கிறார் கவிஞர்.

5. நின் அருகே அமர்ந்திருக்க ஒருகணப் பொழுதுச் சலுகையை நின்னிடம் நான் வேண்டுகிறேன். என் கையிலுள்ள வேலைகளை நான் அப்புறம் முடித்துக் கொள்வேன்.

   நின் முகங் காண்பதை நான் விட்டு விலகியதும் என் நெஞ்சுக்கு ஓய்வோ அமைதியோ இல்லை. என் வேலை கரையற்ற உழைப்புக் கடலில் முடிவற்ற பாடாக உள்ளது.

   கோடை என் சன்னல் அருகே இன்று தன் பெருமூச்சுகள், முணுமுணுப்புகளோடு வந்திருக்கிறது.

தேனீக்கள், பூக் குலுங்கும் தோப்பாகிய அரசவையில் தம் பாண் தொழிலை நிகழ்த்துகின்றன.

நின் முகத்துக்கு நேராக, அமைதியுடன் அமர்ந்து, ஒலியற்றுப் பொங்கி வழியும் இவ் ஓய்வின்போது வாழ்க்கையின் படையலைப் பாடுதற்கு ஏற்ற தருணம் இதுவேயாம்.

☐ இயற்கையின் பூரிப்பான அழகும் பொங்கும் இனிமையும் இணைந்திருக்கும் அந்த அமைதியான வேளையில் தானும் இறையின்பத்தில் கலந்து மகிழக் கவிஞரின் ஆன்மா தவிக்கிறது. அதனைச் செய்யவிடாமல் புறம் புறம் ஈர்க்கும் உலகியற் கடன்களைப் பின்னர்ப் பின்னர் நிறைவேற்றிக் கொள்ளலாம். உலகியற் கடன்களுக்கு முடிவேது, அடைவேது? ஆகவே அவ் அலைகள் ஓய்ந்த பின் ஆன்மீக நுகர்வு கொள்ளலாம் எனில் அது நடைபெறக் கூடியது அன்று,

☐ வையத்தில் இனிய வேனில் வருகை புரிந்திருக்கிறது. கவிஞரின் உள்ளத்தும் இன்னிள வேனில் விருப்புகள் கூர்ந்திருக்கின்றன. தனிமையும் இனிமையும் சேர்ந்த அந்த நேரம் நல்ல நேரம். ஆகவே இன்ப நிறைவை, ஆன்ம ஈடேற்றத்தை அவர் நாடுவது சாலப் பொருத்தமாகின்றது.

O

# ஆறு
# இந்தச் சிறு மலர்

☐ 'இந்தச் சிறிய மலரைப் பறித்துக்கொள், காலம் தாழ்த்தி விடாதே' என்று இறைவனிடம் பணிந்து வேண்டுகிறார் கவிஞர். பூப் போன்றது வாழ்வு. விரைவில் வாடி வீழ்ந்துவிடும் இயல்புடையது. தன் வாழ்க்கையை, ஆன்மாவை, இறைவனுக்குப் படையலிட விழைகிறார் அவர்; காலங் கடந்துவிடு முன் காணிக்கை யாக்கிவிடக் கருதுகிறார். பூப்போல வாடிக் காய்ந்து புழுதியில் வீழு முன் அதனை ஏற்றுக் கொள்ளுமாறு இரக்கிறார்.

செறிவும் கவர்ச்சியும் கொண்ட நிறமோ, நறிய மணமோ இல்லாத மலரை மாலையில் வைத்துத் தொடுப்பது உண்டா? இல்லையே! அவ்வாறே தகுதி போதாத வாழ்வும் தகைசான்ற தலைவனின் படையலுக்கு உகந்த தாக இருக்க முடியுமா? இராதே!

அது தலைமாலைக்குப் பயன்படாது ஒழியினும் காலடியிற் கிடக்கும் பணிக்காவது பயன்பட வேண்டும். இது கவிஞரது வேட்பு. காலங் கடந்து போய்விடுமோ என்ற நெருக்குதல் வேறு. ஆகலின் இறைவன் தன் கையால் பறித்தலாகிய சிறு இடர் இருப்பினும் அதனைச் செய்ய வேண்டும் என்று ஏக்கறவோடு அவனைக் கேட்கிறார் கவிஞர்.

6. இந்தச் சிறு மலரைப் பறித்து எடுத்துக் கொள்க, சுணக்கம் வேண்டா. அது சோர்ந்து புழுதியில் வீழ்ந்துவிடும் என்று அஞ்சுகிறேன்.

   நினது மாலையில் அஃது இடம் பெறாது போகலாம். ஆயினும் நின் கையால் தொடும் நோவினால் சிறப்புத் தருக. பறித்து விடுக. நான் உணரும் முன்பே நாள் முடிந்து விடுமோ, படையலுக்கான நேரம் போய் விடுமோ என்று அஞ்சுகிறேன்.

   நிறம் ஆழமிலாதும் மணம் குறைவாகவும் இருக்க லாம். இம் மலரை நின் பணிக்குப் பயன் படுத்திக் கொள்க, தருணத்தே பறித்துக் கொள்க.

☐ மலர் என்ற உருக்காட்சி மானிட வாழ்நாளின் சுருக்கத்தையும் உண்மை அடியார் ஒருவரின் அன்புக் காணிக்கையையும் உணர்த்தும் குறியீடாக உள்ளது.

திறந்த வெளிச் சூழ்புறத்தைப் புலனாக்கும் இது போன்ற படிமங்கள் இந் நூற்கண் பல வருகின்றன.

☐ 'அன்பாவது முழுமையாகத் தன்னை ஒப்படைத்தல்' என்பது இப்பாடலில் துலக்கமாக விளங்கும் உட்பொரு ளாகும்.

☐ 'இந்த வாழ்வை எடுத்துக் கொள், தலைவா, அது நினக்குப் படைக்கப் படுவதாக.

என் நெஞ்சத்தை எடுத்துக் கொள்.
அது நினக்கான அன்பில் நிரம்பி வழியுமாக,
என் கண்களை எடுத்துக் கொள், இறைவா,
அவை உன்னால் மயங்கி இருக்குமாக'

என்று பாடும் கவிஞானி இராம தீர்த்தரும் இத்தகு உணர்ச்சிகளை வெளியிடுவது உளங்கொளத் தக்கது.

O

## ஏழு
## ஐக்கியத்திற்குத் தடை

□ "என் கவி (மாது) தனது அணிமணிப் பூண்களை அப்புறப் படுத்தி விட்டாள். அவளுக்கு ஆடை அலங்காரங்களின் செருக்கு இல்லை. நாம் ஒன்றாதலை அணிகலன்கள் சிதைத்து விடும். உனக்கும் எனக்கும் இடையே குறுக்கிடுவன அவை. அவற்றின் கலகலச் சத்தம் உன் மெல்லிய உரைகளைக் கேட்க முடியாமல் ஆழ்த்தி விடுகின்றது" என்று தொடங்குகிறார் கவிஞர்.

□ தெய்விக ஐக்கியத்திற்குத் தடையாயிருப்பவற்றை அப்புறப் படுத்தி விடுவதில் வலிய ஆர்வம் கொள்கிறார் கவிஞர். தன் கவிதையை ஒரு மாதாக, மணாளனைச் சந்திக்கச் செல்லும் மணவரசியாக வைத்துப் பேசுகிறார். ஆடை அணிமணிகள் போல்வன பகட்டின்—செருக்கின்-சின்னங்கள். அன்பின் ஐக்கியத்துக்கு அவை இடையூறுகள். ஆகவே அன்புக்கு உரியவள் அவற்றைக் களைந்து விடுகிறாள்.

தன்னைப் படைத்த தலைவனொடு அவ்வாறே பூரண ஐக்கியத்தை வேட்கும் கவிஞர் தன் கவிதையில், கனத்த இனமணிப் பூண்கள், சலசலப்போசை, மினுக்கங்கள் என்பவற்றை விட்டொழிக்க நினைக்கிறார். அவற்றின் இரைச்சலுக்கு இடையில், மென்மை நுண்மையாகத் தலைவன் அந்தரங்கமாக இயம்பும் மொழிகள் மூழ்கி விடும் என்பதனால் அவர் வருந்துகிறார்.

தான் ஒரு கவிஞர் என்ற அவரது இறுமாப்பு இறைவனுக்கு முன் வெட்கி மடிந்து போகிறது, மிக மேலான இசைப்

புலவன் ஆக இருப்பவன் இறைவன். அது மட்டுமன்றி அவன் அளித்த அருள் தூண்டல்–உள்ளுணர்வு-தான் கவிஞரைப் பா இசைக்க வைத்தது; அதற்கு வல்லமை தந்தது. அவரது கவிதைக்கு ஊற்றாதாரம் இறைவனே. ஆகவே அவனது முன்னிலையில் கவிஞரின் செருக்கு இருந்த இடம் தெரியாமல் அழிகிறது.

எனவே அவனது அடிக் கண் அமர்தலே கவிஞர்க்கு ஆவது, தக்கது. அந்த இறைமையில் கலந்து மருவ அவர் தன் வாழ்வை எளிமையும் நேர்மையும் உடைய தாக்க வேண்டும். எளிய நேரிய சூழலில், வல்லுநனான இறைவன் இனியபாக்களை-உள்ளம் அள்ளும் பாக்களைப் பொழிகிறான். அவ்வாறே கவிஞர் தன்வாழ்வை எளிய நேரிய புல்லாங்குழலாக வைத்திருப்பார். அதனைத் தீவிய இசையால் நிரப்புவான் இறைவன்.

7. என் பாடல் (மங்கை) தன் புனைவு ஒப்பனையை அகற்றிவிட்டாள். அவளுக்கு உடை ஒப்பனைச் செருக்கு இல்லை. அணிகலன்கள் நம் ஐக்கியத்தைச் சிதைத்துவிடும். அவை நினக்கும் எனக்கும் இடையே குறுக்கிடும். அவற்றின் கலகலப்பு உன் குசுகுசுப்பு களை மூழ்கடித்து விடும்.

   என் கவிப்பகட்டு நின் காட்சியின் எதிரில் நாணி மடிகிறது. தலைமைக் கவியே, நின் காலடிக் கீழ் அமர்ந்துவிட்டேன். என் வாழ்வை எளியதாக, நேரி தாக, இன்னிசை நிறைக்கும் நினக்கான ஒரு வேய்ங் குழலாக மட்டும் செய்து கொள்ள அருளுக.

☐ எளிமையும் நேர்மையும் இறைமை யுணர்வுக்கு உகந்த பண்புகள் என்பது தெளிவு.

உண்மையன்பும் ஐக்கியமும், எளிமை நேர்மையில் தான் இயலும் என்று அரவிந்தர் பாடியுள்ளமையும் அறியத் தக்கது.

☐ முதலில் வரும் மணமகள் படிமம், உடற்சார்பை உருவகமாகக் கொண்டுள்ளது.

o

# எட்டு

# பொது மானுடச் சந்தை

□ இளவரசுக்கு உரிய ஆடை புனைந்து கழுத்தைச் சுற்றி நவமணி மாலை பூண்ட குழந்தை, தனது ஆடல் இன்பத்தை இழந்து விடுகிறது. பைதல் பருவத்தின் மகிழ்ச்சியும் வளர்ச்சியும் விளையாட்டை மையமாகக் கொண்டவை. குழந்தையை அவனது விலைமதி மிக்க ஆடை ஒவ்வொரு நிலையிலும் தடுக்கிறது. ஓடியாடி விளையாட-தன் பருவத்துத் தோழமையோடு உறவாடி இன்புற-அவனால் முடியாது. உயரிய உடையும் கனமணி அணிகளும் மண்ணாகுமோ கறைப்பட்டு விடுமோ, இற்றோ தேய்ந்தோ விழுந்து விடுமோ என்ற அச்சம் காரணமாக அவன் நகரவும் தயங்குகிறான்; பொது உலகை விட்டு ஒதுங்கியே இருக்கிறான்.

இவ்வாறான வாழ்வினால் என்ன ஆதாயம் வந்துவிடப் போகிறது?

அழகுநேர்த்தி என்ற கட்டுக்குள் சிறுபருவத்தைச் சிறைப் படுத்தி வைக்கிறாள் தாய், மண்ணின் நலம் தரும் புழுதிக்கு அப்பால் அந்த ஆடம்பரம், அடைத்து வைத்திருக்குமானால் - பொது மானுட வாழ்வு என்ற பெரிய சந்தை விழாவுக்குப் புகும் உரிமையை அந்தக் கட்டு பறிக்குமானால் - அதனால் ஒரு நலனும் இல்லையே என்கிறார் கவிஞர்.

□ பொது மானுடம் மண் தோய்ந்து இருந்தாலும் அஃது ஆரோக்கியம் தருவது, ஆகவே அதனொடு பழக விடாமல் ஆடம்பரத்தில் குழந்தையைத் தளைப்படுத்த வேண்டாம், தாயே, என்று ஆலோசனை கூறுகிறார் கவிஞர்.

□ உடனாய மானிடரோடு ஊடாடுவதும் உறவாடு வதும் ஒருவனுக்கு வாழ்வும் வீறும் கிடைக்க வகை செய்கின்றன. அவற்றை விட்டுத் தனித்திருத்தல் என்பது ஆன்மிகச் சேதமும் அழிவும் தருவதாகும். பொது எளிய

மானுடம் ஒரு சந்தைத் திருவிழாப் போல்வது. அதில் புழுதி குப்பை உண்டு. ஆனால் அந்தச் சந்தை வாழ்வில் கலந்து கொள்வது ஆன்மிக நலனுக்கும் ஆற்றற் பெருக்கிற்கும் உகப்பானது. விளங்கக் கூறின், பொதுவாம் எளிய மானுட வாழ்க்கை நடவடிக்கைகளில் பங்கு கொள்ளுதல் ஆன்மிக வளர்ச்சிக்கு உதவியாகும். ஒத்த மானுடத்தை விட்டு ஒதுங்குதல் என்பது செல்வச் செருக்காலும் மேட்டிமையாலும் உண்டாகிக் கேடு விளைப்பதாகும்.

8. அரச உடைகளால் அலங்கரிக்கப் பெற்றும் கழுத்தைச் சுற்றிச் சங்கிலிகள் அணியப் பெற்றும் இருக்கும் குழந்தை தன் விளையாட்டின் இன்பங்களை எல்லாம் இழந்து விடுகிறான். அவனது உடை அவனது ஒவ்வோர் அடிக்கண்ணும் தடுக்கிறது.

   அஃது ஓரம் கசங்கிவிடும் அல்லது புழுதியின் கறைப் படும் என்ற அச்சத்தால் அவன் உலகை விட்டுத் விட்டுத் தன்னை ஒதுக்கிக் கொள்கிறான், நகரவும் அஞ்சுகிறான்.

   தாயே, பகட்டு அணிமணியாகிய கட்டு – அஃது ஒருவனை மண்ணின் ஆரோக்கியமான புழுதியை விட்டுப் புறத்தே அடைத்து வைக்குமானால்–பொது மானுடச் சந்தைக்குள் போதற்கான ஒருவரின் உரிமையைப் பறிக்குமானால் ஆதாயம் இல்லையே!

☐ அனுபூதி நெறி நின்று கவிபாடும் தாகுர், தனித்து, ஒதுங்கி உயர் பீடத்தில் உட்கார்ந்திருப்பதை ஆதரிக்கவில்லை. அன்றாட மானிட வாழ்வின் செயற்பாடுகளில், அதன் நயமான இன்பத்தில், முழுமையாகப் பங்கு கொள்வதை ஆதரிக்கிறார். கேடும் கீழ்மையும் வாழ்க்கையிற் காணக் கிடப்பினும் வாழ்க்கை வாழத் தகுவதேயாகும்.

☐ பிளேக், வேட்ஸ்வர்த் போன்ற கற்பனையியல் (ரொமான்டிக்) அணியைச் சேர்ந்தவர் கவிஞர் தாகுர். குழந்தைமையைப் புகழ்தல்; பொது எளிய மானுட வாழ்வினை நேசித்தல் என்பது மானுட ஆளுமையின்

வளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் இன்றியமையாதது என்று வலியுறுத்தல் ஆகியன கற்பனையியல் நெறியில் இங்குக் கமழ்கின்றன.

குழந்தை என்ற படிமம் கீதாஞ்சலியில் அடிக்கடி வருகின்றது. அவ்வகையில் இப் பாடற்கண் முதலாவதாக வந்துளது.

O

# ஒன்பது
## மகிழ்ச்சிக்கு வழி

☐ பாடல் கேலிக் குறிப்போடு தொடங்குகிறது.

''பேதையே, உன்னை நீயே உன் தோளில் தூக்கிச் சுமக்க முயல்வதா? இரவலா, நீ உன் வாசலில் இரக்க வருவதா?'' என்று வினவுகிறார் கவிஞர்.

☐ இறைமையின் மெய்யுணர்வு அன்பு கொடை என்பவற்றில் முழு நம்பிக்கை கொள்ளுமாறு அவர் வலியுறுத்துகிறார். நமது சுமை அனைத்தையும் இறைவன் தாங்கிக் கொள்கிறான்; நம் அனைவர்க்கும் உதவி செய்கிறான். ஆகவே வாழ்க்கையைப் பொறுத்த கவலைகள் என்னவோ எதுவோ யாதோ என்ற அச்சம் அக்கறைகள் என்பவற்றால் நம்மை நாம் வருத்திக் கொள்வது மடமையாகிறது. நம் வீட்டு வாசலில் நாம் வந்து பிச்சை கேட்டு நிற்பதில் என்ன பொருள் இருக்கிறது?

☐ நம்மை நாம் முழுக்க முழுக்க இறைவனிடம் ஒப்படைத்துவிட வேண்டும். அவனே சார்பு எனக் கொள்ள வேண்டும்; நம்ப வேண்டும்.

அவனிடம் மேலாம் பற்றுறுதி கொண்டால் எதற்கும் கவலைப்பட வேண்டுவதில்லை. அண்டம் அனைத்தையும் தாங்கும் அவனுக்கு நமது சுமை என்ன பெரிதா?

ஆகவே கவிஞர் ஆணித்தரமாக,

''சுமக்க வல்லானிடம் உள்ள உன் சுமைகளைக் கொடுத்து விடு; சென்றதற்கு வருந்த வேண்டா'' என்கிறார்.

எனவே துணிவும் நம்பிக்கையும் துணை தர முன்னோக்க வேண்டும். தன்னம்பிக்கை இறைநம்பிக்கையுடன் முற் செல வேண்டும். மகிழ்ச்சிக்கு இது தான் வழி.

☐ ஆசைகள் பொல்லாதவை. அறியாமையில் பிறக்கின்ற அவை ஒருவனது விவேக விளக்கைத் தம் மூச்சால் (காற்றால்) அவித்து விடுகின்றன. அவற்றால் மானிடக் கைகள் அழுக்காகின்றன. அழுக்கான கைகள் இறைமை யின் கொடைகளைப் பெறத் தகுதி இழந்து விடுகின்றன. துப்புரவு இல்லா ஆசைகளை விட்டொழித்தால் ஆன்மா தூய்மையுறுகின்றது; கைகள் தூயவாகின்றன, அருட் கொடைகளைப் பெறத் தகுதியடைகின்றன.

☐ அன்பின் வெளிப்பாடாக இறைமை நல்கும் கொடை களில் நம் உள்ளம் நிறைவு கொளல் வேண்டும். சுருங்க உரைப்பின் இறைவனிடம் தன்னைத் தந்து, அவன் தருவதில் அகமகிழ வேண்டும். உயரிய அமைதிக்கு உரிய வழி அது.

9. அறிவற்றவனே, உன்னை உன் தோள்களிலே நீ தூக்க முயல்வதா? இரவலனே, உன் வீட்டு வாசலில் நீ இரக்க வருவதா?

சுமை அனைத்தையும் தூக்கக் கூடியவனிடம் உன் சுமை எல்லாம் விட்டுவிடு. துயரத்தோடு திரும்பிப் பாராதே.

உனது ஆசை, விளக்கின் ஒளியைத் தன் மூச்சுக் காற்றுப் படவும் உடனே அணைத்து விடுகிறது. அது துப்புரவற்றது. உனக்காம் கொடைகளை உன் தூய்மையிலாக் கைகளால் எடுக்க வேண்டா. புனித அன்பால் வழங்கப் படுவதை மட்டும் ஏற்றுக் கொள்.

☐ விளக்கு என்ற படிமம் கீதையில் துலக்கமாக வருகிறது. ''விளக்கு, புகையினால் மூடப் படுகிறது, கண்ணாடி தூசியால் மூடப் படுகிறது. கரு சவ்வால் மூடப்படுகிறது. அவ்வாறே இவ்வுலகு ஆசையால் மூடப் படுகிறது...ஆசை என்பது நிறைவே தராத தீக்

கொழுந்து. அறிவின் நிரந்தரமான பகை அது. அறிவு அதனால் எப்போதும் மூடப்படுகிறது... புலன் மனம் பகுத்தறிவு என்பன அதன் இருக்கைகள். அவற்றை அது (ஆசை) போர்த்துக் கொண்டு, உடம்பினுள் இருப்போனைத் திணற வைக்கின்றது. ஆகவே, பாரதருள் சிறந்தோனே, முதலில் புலன்களை வெல்லுக; மெய்யறிவையும் மற்ற அறிவையும் அழிக்கும் இந்தப் பாவப் பொருளைக் கொல்லுக...'' என்பன கீதை மொழிகள். O



## பத்து
## மணைப் பலகை

☐ இறைவன் எழுந்தருளித் தன் திருப்பாதங்களை வைத்தற்கு மணைப் பலகை போட்டு வைத்தார் கவிஞர். ஆனால் அவனது கால்களோ மிக மிக வறியோர் தாழ்ந்தோர் திக்கற்றோர் வைகும் இடத்தே இருக்கின்றன.

இறைவனைத் தொழ விரும்புகிறார் கவிஞர். ஆனால் அவனது தாள்களோ மிக மிக வறியோர் தாழ்ந்தோர் திக்கற்றோர் இருக்கும் படுபள்ளத்தில் இருக்கின்றன. கவிஞரின் தலைவணக்கம் அவ்வளவு ஆழத்துக்குத் தாழ முடியவில்லை.

மிக மிக வறியோர் தாழ்ந்தோர் இழந்தோரின் எளிய உடையில் இயங்கும் இறைவனைச் செருக்குடன் நெருங்க ஒண்ணாது. உற்றாரில்லாத மிக மிக வறியோர் தாழ்ந்தோர் இழந்தோரிடம் அவன் உறவு பூண்டிருக்கிறான். அவன் இருக்குமிடத்துக்கு வழி தெரியாமல் கவிஞரின் நெஞ்சம் நோகிறது.

10. இங்கே இருக்கிறது நின் காற்பலகை. நின் காலடிகளோ ஆங்கே மிகமிக வறியர் தணிந்தோர் இழந்தோர் வாழும் இடத்தே தங்குகின்றன.

குனிந்து நின்னை வணங்கும் போது என் வணக்கம் மிக மிக வறியர் தணிந்தோர் இழந்தோரிடை வதியும்

*நின் பாதங்களின் ஆழத்தை அடைய முடியவில்லை.*

*எளியவரது உடையில் நீ மிக மிக வறியர் தணிந் தோர் இழந்தோரிடை நடக்கும் இடத்தைச் செருக்கு ஒருகாலும் நெருங்க முடியாது.*

*மிக மிக வறியர் தாழ்ந்தோர் இழந்தோரிடம் தோழமை பூண்டிருக்கும் உன் இருப்பிடத்துக்கு என் நெஞ்சம் ஒருபோதும் வழி காண இயலாது.*

☐ இறைவன், மிகமிக எளியோர் வீழ்ந்தோரிடை வதி கிறான். அவனை நாம் அங்கே தேட வேண்டும். ஏழை எளியோரைக் காண விரும்பாதார் அவனை என்றும் கண்டு கொள்ளார். உண்மையான இறைவணக்கம், உடன் பிறப்பு உணர்வுடன் எளிய மானுடத்தோடு ஊடாடி உதவுவதில் இருக்கிறது.

பணமும் அதன் பகட்டும் செருக்கும் இறையுணர்வுக்குத் தடைகளாகும். புறவாழ்வின் பளபளப்பு, செல்வச் செருக் கின் கண்களை மறைக்கிறது. வறியோரின் துன்ப துயரங்கள் அவர்களது பார்வையில் படுதல் இல்லை. உடனாய மானுடரின் கைகோத்து நின்று அவர் காரியம் யாவினும் கைகொடுத்து நேயம் கொள்வது வழிபாட்டு நெறியின் மெய்ப் படிகளாகும்.

☐ இந்தப் பாடல் கவிஞரின் மானுட நேயத்தை நன்கு காட்டுகிறது "மானிட உறவு, ஆன்மிக வாழ்வுக்கு ஊற்றாதாரம் கடவுள் அந்தரத்தில் தனியே வீற்றிருக்க வில்லை. எங்கும் எல்லாவற்றின் உள்ளும் மேலும் அவர் வீற்றிருக்கிறார். வழிபடற்குரிய எல்லா உண்மைப் பொரு ளிலும் அவரை நாம் வழிபடுகிறோம்; எங்கெங்கே நமக்கு உண்மை அன்பு இருக்கிறதோ அங்கே அவரை நாம் நேசிக்கிறோம்" என்கிறார் ச. இராதாகிருஷ்ணன்,

O

# பதினொன்று
# அன்றாட வாழ்வில் தெய்விகம்

ப மக்கள் மன்றத்தை விட்டுத் தப்பி ஓடி, கதவு அடைத்த கோயிலின் தனி மூலையில் செபமாலை — தோத்திரம் — எனக் கண் மூடிக் கொண்டு கடவுட் காட்சி பெறலாம் என்று இருப்போரை இடித்துரைக்கிறார் கவிஞர். கடவுளுணர்வுக்குத் தடையான அறியாமையின் பகுதிகளான அவற்றை விட்டு நீங்கி, மக்களோடு மக்களாகச் சமுதாய நலம் தரும் உழைப்பில் பங்கு கொள்ளுமாறு அறிவுரைக்கிறார் அவர்.

கடுநிலத்தை உழுவோர், சாலை அமைக்கக் கல் உடைப்போர் போன்றாரொடு கடவுள் வெயிலிலும் பனியிலும் உடனிருக்கிறார். அதிலே அவருக்கு மகிழ்ச்சி. ஏழை எளியோரின் உழைப்பிடம், இறைவனின் இருப்பிடம். மடாதிபர், மணிமாலை உருட்டுவோர் போன்றோர் உண்மையில் கடவுண்மை போற்றுவரேல் அவர்கள் தங்களைத் தனித்து இனம் காட்டும் புனித உடைகளை விட்டுவிட்டு, உழைப்பாளரொடு புழுதி படிந்த மண்ணிற்கு இறங்கி வரவேண்டும். ஏனெனில் இறைவனின் ஆடையே புழுதி படிந்திருக்கிறது

தப்பி ஓடுவதன் வாயிலாகப் பிறப்பிறப்புப் பிணிப்பிலிருந்து விடுபட நினைத்து ஒதுங்கிச் செயலற்றுப் போன அடியார்களுக்கு ஒன்றை வெட்ட வெளிச்சம் ஆக்குகிறார் கவிஞர். அவர்கள் எண்ணும் வீடுபேறு ஒரு மாயத் தோற்றம்; பற்றற்றவன் எனப்படும் இறைவனே, படைப்புச் செயலால் தன்னை வலியத் தளைப்படுத்திக் கொண்டுள்ளான்; உலகியல் தளையை மாட்டிக் கொண்டிருக்கிறான்; நம்மிடம் அன்பு நேயம் பூண்டிருக்கிறான்; எப்போதும் நம்மோடேயே இருக்கிறான்.

ஆகவே பூவும் புகையும் பூசனையும் விடுத்து வெளியே வாருங்கள் என்கிறார் கவிஞர். ஏனெனில் அவை இறைவற்கு மகிழ்ச்சி தாரா.

நெற்றி வேர்வை நிலத்தில் சிந்த உழைக்கும் எளியாரொடு இறைவன் இருக்கிறான். கந்தல் அழுக்கு உடை

களை அவன் வெறுப்பதில்லை. "ஆகவே இறை நாட்டம் உடைய அடியார்களாகிய உங்களின் உடைகள் கிழிந்தும் அழுக்கேறியும் போனால் என்ன கேடு வந்துவிடப் போகிறது? மாறாக, மேன்மை தான் வரப் போகிறது" என்கிறார் கவிஞர்.

11. தோத்திரம் கூறலும் பாடலும் மாலை உருட்டலும் விட்டு விடு, இந்தத் தனி இருண் மூலையில் கதவு களைச் சாத்திக் கொண்டு யாரை வழிபடுகிறாய் நீ? கண் திற. உன் கடவுள் உன்முன் இல்லை என்பது காண்.

    உழவர் எங்கே கடுநிலத்தை உழுதுகொண்டிருக்கி றாரோ, சாலையமைப்போர் எங்கே கல்லுடைத்துக் கொண்டிருக்கிறாரோ அங்கே இருக்கிறான் அவன். அவர்களோடு அவன் வெயிலிலும் மழையிலும் இருக் கிறான். அவனது மேலாடையில் மண் படிந்திருக் கிறது. உனது புனித நெடுஞ்சட்டையை அகற்றி விடு. அவனைப் போல் புழுதி நிலத்திற்கு இறங்கிவா.

    விடுதலை? இந்த விடுதலையை எங்கே காணக் கூடும்? நம் ஐயனே படைப்பாம் தளைகளைத் தன் மேல் தாங்கியுள்ளான். அவன் நிரந்தரம் நம்மோடு கட்டுண்டிருக்கிறான்.

    உனது செபம் தியானங்களை விட்டு வெளியே வா. பூவையும் புகையையும் விட்டுத் தள்ளு. உன் உடை கிழிந்து கறைப்படின் என்ன கேடு வந்துவிடப் போகிறது? உழைப்பதிலும் நெற்றி வேர்வை சிந்துவதிலும் அவனைச் சந்தி; அவன் அருகே நில்.

☐ வாழ்வின் இயக்கத்தில் பங்கு கொள்வதே கடவுணு ணர்வுக்கு முக்கியமானது என்பது கவிஞரின் கருத்து. அவர் மனித நேயர்; நடப்பியல் ஆன்மிகவாதி. துன்புறு வோர், சுரண்டப் படுவோர், அவமதிப்புக்கு உள்ளா னோர் ஆகிய நலிவுற்றோரை நேசித்து அவர்தம் வாழ் வுடன் உறவு கொண்டு உதவுவதைக் கொண்டாடு கிறார்.

☐ கவிஞரின் அருளியற் கொள்கை, தப்பி ஓடுவதில் இல்லை; அன்றாட வாழ்வின் தெய்விகத்தில் இருக்கிறது. பூ புகை வேள்வி திண்டி என்பன பழைய கரும காண்டத்தைச் சேர்ந்தவை. பொது நலம் பேணல், உழைப்பு, தியாகம் என்பன புதிய கரும யோகத்தின் பாலன. முன்னதை எதிர்த்துப் பின்னதைப் போற்றுகிறார் கவிஞர்.

O

## பன்னிரண்டு
## பயணக் கதை

☐ ''பயணம் எனக்கு நெடுங்காலம் பிடித்தது; வழியும் நெடுந்தூரம் ஆனது'' என்று பாடல் மடல் அவிழ்கிறது. அதில் பயணக் களைப்பு தெரிகிறது.

மானிட ஆன்மா, பேரான்மாவைத் தேடிப் பயணம் மேற் கொள்கிறது. ஒளியின் முதற் கதிராகிய தேரில் அது புறப் பட்டது; அதாவது படைப்பின் போதே அது தொடங் கியது. விண்ணில் கோள்கள் உடுக்கள் வழியிலும் மண்ணின் பாலைகள் காடுகள் இடையிலும் அது செல் கிறது.

பயணி, தான் தன்னருகே வருவதற்கு மிக மிகத் தொலை வான வழியிற் செல்ல வேண்டியுள்ளது; இனிய எளிய ஒரு பண் இசைக்கச் சுதி கூட்டுவதற்கு எவ்வளவு கடிய சிக்கலான பயிற்சி தேவைப்படுகிறது!

பயணி, தனது இல்லத்தைத் தான் அடைதற்கு வைய கத்தில் உள்ள எல்லாக் கதவுகளையும் தட்ட வேண்டி யுள்ளது; உள்ளே இருக்கும் இறையை அடைதற்கு வெளி உலகெல்லாம் சுற்றி அலைய வேண்டியிருக்கிறது.

அலைந்து திரிந்த பயணி இமைகளை மூடுமுன் அங்கும் இங்கும் கண்களைப் பரக்க விட்டு ''நீ இங்கேயா?'' என்று வியக்கிறான்.

"எங்கே இருக்கிறாய்?" என்ற அவனது வினாவும் கூவலும் உருகி ஓடைகளாக ஓடுகின்றன; "இருக்கிறேன் நான்" என்ற உறுதிப்பாடாகிய ஊழி வெள்ளத்துள் உலகை மூழ்க வைக்கின்றன.

12. என் பயணத்துக்கு ஆகும் நேரம் நீண்டு செல்கிறது; வழியும் நெடிதாக உள்ளது.

ஒளியின் முதற் கற்றையாம் தேரில் நான் வெளிப் போந்தேன். பல விண்மீன்கள் கோள்களிடை என் தடம் கடந்து உலக வனாந்தரங்களினூடு பயணம் தொடர்ந்தேன்.

நினக்கு மிக அருகே வருதற்கு நெறி மிக மிகத் தொலைவாக உளது. படு எளிதான ஒரு பண்ணைக் கூட்டுதற்கான பயிற்சி மிக மிகக் கடுமையாக இருக்கிறது.

பயணி தன் வீட்டுக்கு வருதற்கு ஒவ்வோர் அயற் கதவையும் தட்ட வேண்டியுளது. முதலில் தன் உள்ளார்ந்த இறையகத்தை அடைதற்குப் புறத்தே உள்ள உலகங்கள் எல்லாம் அலைய வேண்டியிருக்கிறது.

என் கண்களை மூடுதற்கும் "இங்கே இருக்கிறாய் நீ" என்று உரைப்பதற்கும் முன் அவை தொலைவு அகலம் அலைந்து திரிந்தன.

"ஆ, எங்கே?" என்ற வினாவும் கதறலும் ஓராயிரம் கண்ணீர் ஓடைகளாக உருகி "நான் இருக்கிறேன்!" என்ற உறுதி வெள்ளமாகப் பெருகி உலகைப் பிரளயம் ஆக்குகின்றன.

☐ படைப்புக் காலந் தொடங்கிப் பயணம் செய்யும் ஆன்மா, உலகத்துக் குழப்பங்கள் ஒழுங்கின்மைகளுக்கு இடையிலும் விண்ணின் நாள்கள் கோள்களுக்கு இடையிலும் பயணம் செய்து பலவகை அனுபவங்கள் பெறுகிறது.

நிறைந்த அனுபவத்தின் பின், யுகம் யுகமாகத் திரட்டிய அறிவின் பின், கடவுள் எல்லாவற்றுள்ளும் உள்ளார்;

மானிட வடிவு தாங்கிய ஆன்மாவாக உள்ளார் என்ற மாறா உண்மையை ஆன்மா தெளிகிறது.

☐ கடவுளை உணரச் சுருக்கு வழி, தன்னைத் தான் உணர்தலாகும். திறமிக்க இசைவாணன், வேறுபட்டன வும் இணக்கமில்லனவும் ஆன ஓசைகளை ஒரு பண் ணாக்கி எளிதாக இசைக்கிறான். அவ்வாறே காலங் காலமாகக் கடைப்பிடித்த ஒழுங்கும் ஆன்மிகப் பயிற்சி யும் ஒருவனுக்குத் தன் அகத்தினுள்ளே இறையை உணரும் திறம் தருகின்றன.

"இறைவா, எங்கே இருக்கிறாய்?" என்று தனது அறியா மையால் கதறியவனுக்கு அவனது மெய்யறிவு விடை தருகின்றது. அப்போது கண்களில் நீர் திரள்கிறது. கடவுளைத் தன்னில் காண்கிறான்; இறைமை போர்த்த வையப் பொருள் யாவிலும் காண்கிறான்.

☐ பயணி என்ற பொதுவான படிமம், மிகுதியான பொருள் கொண்டுள்ளது. ஆன்மாவைப் பயணியாகக் கூறுவது மரபுவழிப் பட்டதாகும். அதனை அழகாக அமைத்துக் கொண்டுள்ள இந்தப் பாடலில் உபநிடதப் பொருட்சுவை பொலிகின்றது.

'மூடுபனியும் பனித்துளியும் போன்ற பொருள்கள் மேல் வைத்த நம்பிக்கை, நிம்மதியின்மை தருகிறது; அவற்றில் நம்பிக்கை வைக்காதே; மேலாம் ஆன்மாவை - பரமான் மாவை நம்பு, நம்பு" என்ற கருத்து அமைந்த இராம தீர்த்தரின் பாடல் இங்கே நினைதற்கு உரியது.

☐ "மனத்துக்கு மேலே மிக ஏறி,
ஒன்றான அமைதி வெளியில் நீ வாழ்ந்தால்
என்றுமுள இன்பத்தில் அன்பும் என்று முளதாகும்.
மானிடப் பிணிப்பு இருந்த இடத்தில்
தெய்விக அன்பு வருகிறது"

என்ற அரவிந்தர் பாடலும் நினையத் தகுவது.

O

## பதின்மூன்று
## காலடி ஓசை

□ தெய்விகப் பாடல் ஒன்று பாட வேண்டும் என்று வந்தார் கவிஞர். ஆனால் அது அன்று வரை கைகூட வில்லை. இறைமையின் இன்ப ஐக்கியத்திற்கு ஆழ்ந்து ஆசைப்படுகிறார் அவர். ஆனால் அன்று வரை அது 'நனி சேய்த்தாக'வே இருக்கிறது.

இசைவாணன் ஒருவன் தன் வாணாள் முழுதும் இசைக் கருவியின் நரம்பை நெகிழ்த்தும் முறுக்கியும் ஆயத்தம் செய்கிறான். ஆனால் சுதி சேரவில்லை; இசையும் இசையவில்லை. கவிஞர் தம் வாணாள் முழுதும் இறைமைப் பேற்றுக்காக முயற்சி செய்கிறார்; ஆனால் அது கைகூடப் பெறவில்லை.

காலம் ஒத்துவர வில்லை. சொற்கள் யாப்பாகப் பொருந்த வில்லை; கவிஞரின் நெஞ்சில் தெய்விக ஏக்கம் பெருகிக் கிடக்கிறது;ஆனால் அதனை நிறைவேற்ற முடியவில்லை; ஆகவே வேதனை நீங்காது நிற்கிறது.

அரும்பு வாய் திறக்கவில்லை. அதனை மலர்த்த வல்ல காற்று வீசுகிறது; ஆனால் அதுவோ அரும்பைத் தொடாமலே செல்கிறது. கவிஞரின் நெஞ்சில் தெய்விக அன்பு இருக்கிறது. ஆயின் அஃது அரும்பளவு தான் இருக்கிறது. அவரது பயிற்சி, ஒப்படைப்பு, என்பவற்றால் வந்த ஆன்மிகத் திறம் கடவுட் காட்சியை முற்றாகத் எய்துவ தற்குப் போதுமானதாக இல்லை.

கடவுளின் முகத்தைக் கவிஞர் இன்னமும் காணவில்லை. குரலை இன்னமும் கேட்கவில்லை. ஆனால் தன் வீட்டின் முன்னுள்ள சாலையில் கடவுளின் மெல்லிய அடியோசை அவரது செவிகளில் விழுந்திருக்கிறது.

வழிபாட்டுக்கு முன் பூசகன், கோயிலைத் துப்புரவு செய்து விளக்கேற்றி, விரிப்புகள் பரப்புகிறான், அவ்வாறே நெஞ்சக் கோயிலைத் துப்புரவு செய்து அன்பின் ஒளியை ஏற்றி வைக்க வேண்டும். ஆனால் தரையில் விரிப்பைப்

பரப்புவதில் கவிஞரின் நாள் முழுவதும் கழிந்து விட்டது. இருள் பரவியும் விளக்குப் பொருத்தவில்லை. இறைவனை வரவேற்க ஆயத்தங்கள் செய்துள்ளார்; ஆனால் அவை நெஞ்சக் கோயிலில் அவனை அமர்விக்கப் போதுமானவை இல்லை; ஆன்மிகத் தூய்மையும் ஞானமும் போதிய அளவில் இல்லை.

இறைவனைச் சந்தித்து விடலாம் என்ற நம்பிக்கையில் இருக்கிறார் கவிஞர்; ஆனால் அஃது இன்னமும் நடந்த பாடில்லை.

13. நான் பாட வந்த பாட்டு இன்றுகாறும் பாடப் பெறாமலே இருக்கிறது.

என் நாள்களை எல்லாம் யாழ் நரம்பினை இறுக்குவதிலும் நெகிழ்ப்பதிலும் கழித்து விட்டேன்.

நேரம் வரவில்லை; சொற்கள் சீராக அமைவு பெறவில்லை. விருப்பின் வேதனை மட்டும் என் நெஞ்சில் இருக்கிறது.

மொக்கு வாய் திறக்கவில்லை. காற்று மட்டும் அதனருகே மூச்செறிந்து கொண்டிருக்கிறது.

நான் அவன் முகம் காணப் பெற்றதில்லை; குரல் கேட்டதில்லை. அவனது மென்மையான காலடி ஓசையை மட்டும் என் வீட்டு முன் சாலையில் கேட்டிருக்கிறேன்.

நாள் முழுக்கத் தரையில் இருக்கை விரிப்பதில் கழிந்துவிட்டது. ஆனால் விளக்கு ஏற்றப்படவில்லை. அவனை நான் வீட்டுக்குள் அழைக்க முடியவில்லை.

அவனைச் சந்திக்க முடியும் என்ற நம்பிக்கையில் வாழ்கிறேன். ஆனால் அந்தச் சந்திப்பு இன்னமும் கைகூட வில்லை.

☐ அரும்பு என்ற குறியீடு காதலை உணர்த்துகிறது; அதன் மலர்ச்சி, காதல் நிறைவேற்றத்தை உணர்த்துகிறது. காலடி ஓசை கேட்கிறது என்பது ஆன்மிக உணர்வில் வாய்த்த ஒரு படிநிலையை உணர்த்துகிறது.

கடவுளின் முகத்தைக் காணல், குரலைக் கேட்டல் என்பன அணுக்கத்தையும் ஆழ்ந்த ஆன்மிக அனுபவத்தையும் உணர்த்துகின்றன.

O

# பதினான்கு
# உறுதியான கருணை

□ நமக்கு ஆசைகள் ஏராளம்; நாம் அவற்றுக்காக எழுப்பும் கூக்குரல் இரக்கம் தருவது. இருப்பினும் இறைவன் இரங்க - அவற்றுக்கு அளிசெய்ய - மறுக்கிறான்; அதனால் நம்மைக் காக்கிறான். இந்த உறுதியான கருணை, கவிஞர் வாழ்வில், நம் வாழ்வில், எல்லா வகையிலும் வினைபுரிந்து வந்திருக்கிறது

மட்டு மீறிய ஆசையால் வரும் அழிவுகளிலிருந்து இறைவன் நம்மை நாளும் நாளும் காக்கிறான்; தன் எளிய உயரிய கொடைகளை - இந்த வானம், வெளிச்சம்—இந்த யாக்கை வாழ்வு மனம் என்று நாம் கேளாமலே வழங்குகிறான்.

இலக்கை நோக்கிச் செல்கையில் சோம்பிக் காலங் கடந்தும் நேரங்கள் உண்டு; விழித்து விரைந்தடித்து ஓடும் நேரங்களும் உண்டு. ஆனால் இறைவனோ, கொடுமையாகத் தன்னை மறைத்துக் கொண்டு விடுகிறான்.

நாளும் நாளும் கேட்டனவெல்லாம் மறுத்து, உறுதியும் நிலையும் இல்லா ஆசைகளால் வரும் இடர்களினின்றும் காத்து, இறைவன், மானிடனைத் தான் ஏற்றுக் கொள்ளுதற்குத் தகுதியுடையன் ஆக்குகிறான்.

14. என் ஆசைகள் பல. என் கூப்பாடு இரங்கற்குரியது. ஆனால் கடும் மறுப்புகளால் என்னை எப்போதும் காக்கின்றனை. இந்த வலிமையான இரக்கம் என் வாழ்க்கையின் எல்லா வகையாலும் வினை செய்திருக்கிறது.

நாளும் நாளும் நின் எளிய பெரிய கொடைகளுக்கு, நான் கேளாதே நீ தரும் அவற்றுக்கு, இந்த வானம் ஒளி இவ் வுடம்பு இவ் வாழ்வு இம் மனம் என்பவற்றுக்கு, என்னை நீ தகுதியாக்குகின்றனை; அதனால் மித மிஞ்சிய ஆசையால் வரும் பேரிடர்களிலிருந்து என்னைக் காக்கின்றனை.

மந்தமாக நான் தயங்கும் நேரங்களும் விழித்து விழுந்தடித்துக் கொண்டு என் இலக்கு நோக்கி விரையும் நேரங்களும் உண்டு; ஆனால் நீயோ என்னிடமிருந்து உன்னைக் கொடுமையாக மறைத்துக் கொள்கின்றனை.

நாளும் வலுவற்ற, உறுதியற்ற, ஆசையின் பேரிடர்களிலிருந்து என்னைக் காக்கின்றனை. அவ்வப் பொழுது மறுத்தல்கள் மூலம் என்னை நீ ஏற்றுக் கோடற்குத் தகுதிப் படுத்துகின்றனை.

☐ கொள்ளை கொள்ளையாக ஆசைகளைச் சுமந்து கொண்டு கதறித் தொழும் மானிடனின் வேண்டல்களை மறுப்பதன் வாயிலாக இறைவன் அருள் புரிகிறான். உலகியல் ஆசைகளை அவன் மறுப்பதனால் மனந் தூய்மை பெற உதவுகிறான். மனத் தூய்மை இறையுணர்வுக்கு இன்றியமையாதது. ஆகவே ஆன்மிகத் தேட்டத்திற்குக் குறுக்கீடாக உள்ளவற்றை அகற்றுவதன் மூலம் இறைவன் கருணை காட்டுகிறான்.

☐ இறைவன் தானே முன்வந்து தந்துள்ள உயர் கொடைகளின் தூய மகிழ்ச்சிக்கு உதவும் பொருள்கள் நிறைய உள்ளன. அவற்றை மானிடன் நுகரலாம்; உலகியல் ஆசைகளோ இடர் தருபவை; தீமை பயப்பவை. இறைவன் அவற்றை வழங்கத் தன் மறக் கருணையால் மறுத்து விடுகிறான்.

அவன் தன்னை மறைத்துக் கொள்வதாகவும் அதனால் கொடியவன் எனவும் மானுடன் நினைக்கிறான். உண்மையில் இறைவன் அன்புடையவன்; முழுமையான ஆன்மிக உணர்வுக்கு மேலும் மேலும் பக்குவம் அளிக்கிறான். மானுடன் தூய்மையும் மேன்மையும் எய்த எய்த அவன் இறைவனின் அன்புக்கு அணுக்கன் ஆகிறான்.

# பதினைந்து
# சிறப்பு வரும்

☐ தான் இவ் வுலகிற்கு இறைவனைப் பாடுதற்கு வந்ததாகவும், இறைவனுடைய இந்தப் பெரிய உலகில் தனக்குச் சிறப்பற்ற சிறியதோர் இடம் கிடைத்திருப்பதில் நிறைவுடன் இருப்பதாகவும் கவிஞர் தெரிவிக்கிறார்.

இந்த உலகில் அவர்க்கு வேலை எதுவும் அவர்க்குத் தெரியாது. பாட்டு இசைப்பார்; அந்தப் பாட்டும் பொருளோ பொருத்தமோ உடையது என்று கூற முடியாது.

இவ்வாறான பாடலைத் தான் தன்னைப் படைத்தோனுக்கு அவரால் தரமுடிகிறது.

இறைவனின் ஆணை வரும் நேரத்துக்காக அவர் பொறுமையுடன் காத்திருக்கிறார். அவன் தன் அன்பாலும் அருளாலும் கவிஞரது புல்லிய பாடலை ஏற்றுக் கொள்வான் என்று நம்புகிறார். நள்ளிரவு வழிபாட்டு நேரத்தில், தன்னை வந்து பாடச் சொல்வதான கட்டளையையோ அல்லது புலரிக் காலைக் காற்றில் பொன்யாழ் இசை எழும்போது தன் முன் வந்து வந்து நிற்கச்சொல்வதான கட்டளையையோ தந்து அதனால் வரும் சிறப்பையும் இறைவன் அளிப்பான் என்று ஆர்வத்தோடு எதிர் நோக்குகிறார், கவிஞர்.

15. நான் இங்கு நினக்குப் பாடல்கள் பாட இருக்கிறேன். நினது இந்தக் கூடத்தில் எனக்கு ஒரு மூலையில் இடம் இருக்கிறது.

    நினது உலகில் யான் செய்தற்கு வேலை கிடையாது. பயனில் வாழ்வு, ஒரு செயல் நோக்குமிலாது, சுருதிகளாகத் தோன்றுதல் மட்டும் இயலும்.

    மௌனத்தில் நின்னை வழிபடற்கான இருட் கோவில் நள்ளிரவு மணி அடிக்குங்கால், என் ஐயனே, நின் முன் நின்று பாட எனக்குக் கட்டளை யிடுக.

    காலைக் காற்றில் பொன் யாழ் சுதி கூட்டப்படும் பொழுது, என்னை முன் வருமாறு கட்டளையிட்டுச் சிறப்புத் தருக.

☐ இறைவனின் பேரருள் - பெருமை என்பவற்றோடு, தனது தகுதிக் குறைவைப் புலப்படுத்தித் தாழ்ந்து புகலும் மெய்யடியாரின் குரல் இதில் ஒலிக்கிறது. தெய்விக அன்பு, அருள் ஆகியவற்றின்பால் முழுமையான பற்றுறுதி யிருப்பதையும் இப்பாடல் காட்டுகிறது.

☐ இந்தியாவின் கவிஞானிகள், பக்திப் பாக்கள் தந்த பழ அடியார்கள், பாடும் அன்பு மரபின் சுவடு இந்தப் பாடலில் துலங்கி நிற்கின்றது.

O

# பதினாறு
# உலகத் திருவிழா

☐ இந்த உலகத் திருவிழாவுக்கான அழைப்பு கவிஞர்க்குக் கிடைத்தது. அதனால் அவரது வாழ்க்கை பேறு பெற்றது; கண்கள் பார்த்தன; செவிகள் பருகின.

விழாக் கால விருந்தில் அவர்க்குத் தரப்பட்ட வேலை, இசைக் கருவி வாசித்தல்; இயன்ற அளவு அவர் அதனை இனிது செய்தார்.

இப்பொழுது ஒரு வினா. இறைவனிடம் அதனை வினவுகிறார் கவிஞர். “இப்போது, முடிவாக, நான் உள்ளே வரலாமா, நின் முகத்தை நேரே காணலாமா? என் மௌன ஆராதனையைச் செலுத்தலாமா?” என்கிறார்.

இந்த உலகம் இறைவனின் திருவிழாக் களம் ஆகும். அவன் வகைவகையான - தொகை தொகையான - கொடைப் பொருள்கள் விரித்து வைக்கிறான். அழகிய காட்சிகள், இனிய செய்திகள் கொழிக்க வைத்திருக்கிறான். இந்த விழாவுக்கு-உலக வாழ்க்கைக்கு-தன்னை அழைத்தமைக்கு இறைவற்கு நன்றி கூறுகிறார் கவிஞர். இறைமையின் அழகு மிளிரும் காட்சிகளைக் கண்டதும் சுவைமலிந்த பொருள்களை நுகர்ந்ததும் அவை அவரை இறைவற்கு நன்றி பகர வைக்கின்றன.

இங்கு அவருக்குத் தரப்பட்டது ஒரு சிறுபணி; தலைவன் பணி. அதில் அவர் திருப்தி கொண்டார்; தன்னால் ஆன அளவு அதனை நன்கு ஆற்றியிருக்கிறார்.

ஆனாலும் ஓர் ஏக்கம்—தன் தலைவனைத் தலைப் பெய்ய-நேர்காண-தன் வழிபாட்டை நேரே நவில ஆசை கொண்டிருக்கிறார்.

16. இவ் வுலகத் திருவிழாவுக்கான அழைப்பு வரப் பெற்றேன். அதனால் என் வாழ்வு அருட்பேறு அடைந்தது. என் கண்கள் பார்த்துக் கொண்டன; செவிகள் கேட்டுக் கொண்டன.

இந்த விருந்தில் எனது பங்கு, எனது இசைக் கருவி யினை வாசித்தலே, அதனை என்னால் இயன்ற அளவு ஆற்றி விட்டேன்.

இப்போது நான் கேட்கிறேன், முடிவில் நான் உள்ளேவரவும், நின் முகம் காணப்பெறவும், வாய் மூடி வணக்கம் செய்யவும் உரித்தான நேரம் வந்துவிட்டதா?

☐ உலகத் திருவிழா என்பது, இந்த உலகில் நமக்குக் கிடைத்த பிறவி, வளர்ச்சி, மற்றும் பல பேறுகள். இந்த உலகிற் பிறந்து வளர்ந்து கண்டு கேட்டு மகிழ்ந்த வாழ்வுக்கு நன்றியறிகிறார் கவிஞர். இசைக் கருவி வாசித்தற்குத் தேவைப்படும் கடும் பயிற்சியும் சிரும் போல அவர்தன் ஆன்மிக வாழ்க்கைக்கான பயிற்சியிலும் ஆன்மிக சுத்தியிலும் காலம் செலுத்தி யிருக்கிறார். உலகில் அவர் விழையும் ஒரே பொருள், ஈறிலாப் பொருளுடன் இரண்டற நிலைத்தலாகும். அதற்கு ஏங்குகிறார் கவிஞர்.

O

## பதினேழு
## மக்களின் குற்றச்சாட்டு

☐ "காதலால் என்னை நான் அவனது கைகளில் இறுதி யாகக் கொடுத்து விடவே காத்திருக்கிறேன். அதனாலே நேரமாகி விட்டது; அதனால் தான் கடமைகள் செய்

யாமல் தவிர்ந்த குற்றத்தைச் சுமக்க நேர்ந்தது'' என்று அன்பு கனிந்த மொழியில் கவிதை பிறக்கிறது.

மக்கள், தங்களது உலகியல் விதிகளாலும் முறைகளாலும் முன் வந்து அவரைப் பிணிக்க முயல்கிறார்கள். ஆனால் அவரோ அவர்களை எல்லாம் தவிர்க்கிறார்; ஏனென்றால் தன்னை இறுதியாகக் கொடுத்துவிடவே அவர் காத்திருக்கிறார்.

உலகியற் கருத்தின்றி அவர் இருப்பதை மக்கள் பழித்துரைக்கிறார்கள். அவர்களின் குற்றச்சாட்டு சரியானது தான் என்பதில் கவிஞர்க்கு ஐயமில்லை.

சந்தை நேரம் முடிந்தது; சுறுசுறுப்பானவர்களுக்கு 'வாங்குவதும் செலவிடுவதுமான' வேலைகள் யாவும் முடிந்தன. கவிஞரைக் கூப்பிட வந்தவர்கள், தாங்கள், வந்தது பயனிலாது போனதால் கோபத்துடன் திரும்பினார்கள். அவரோ, முடிவாகத் தன்னை அவனது கைகளில் கொடுத்து விடவே காத்திருக்கிறார்.

17. என்னை, முடிவாக அவன் கைகளில் கொடுத்து விடக் காதலுக்காகவே நான் காத்திருக்கிறேன்.

 அவர்கள் தங்கள் விதிகள் சட்ட முறைகளோடு வந்து என்னை இறுக்கமாகக் கட்டிப் போட விரும்புகிறார்கள். ஆனால் நான் அவற்றை எப்போதும் தவிர்த்து விடுகிறேன். ஏனெனில் நான் என்னை, முடிவாக அவன் கைகளில் கொடுத்து விடக் காதலுக்காகவே காத்திருக்கிறேன்.

 மக்கள் என்னைப் பழிக்கின்றனர். கருத்தில்லாதவன் என்கின்றனர். அவர்களது குற்றச்சாட்டு சரியானது என்பதில் எனக்கு ஐயமில்லை.

 சந்தைப் பகல் முடிந்துவிட்டது. சுறுசுறுப்பானவர்களுக்குத் தத்தம் வேலைகள் நடந்தேறி முடிந்தன. என்னை அழைத்துப் போக வந்தோர் வறிதே திரும்பினர். அவர்களுக்கு அதில் கோபம். நான் என்னை, முடிவாக, அவன் கைகளில் ஒப்படைத்து விடக் காதலுக்காகவே காத்திருக்கிறேன்.

☐ மெய்க்காதல் வயப்பட்ட ஒரு மாது தன் காதலனை நேசிப்பது போலக் கவிஞர் தெய்வத் தலைவனை உளமார உணர்ச்சி மிக நேசிக்கிறார். உலகிற் செய்ய வேண்டிய நடைமுறைக் கடமைகள் பொறுப்புகள் என்பவற்றை மக்கள் அவர்க்கு நினைவுபடுத்துகிறார்கள். புறச் சூழல் பற்றிய நினைப்பு எதுவும் இல்லாத கவிஞர்க்கு உலகம் ஒரு சந்தைக் கடையாக இருக்கிறது. நிற்கவோ இறைவனை நினைக்கவோ சந்தைக் கடையில் ஏது நேரம்? ஆனால் கவிஞரோ தன் தலைவனின் வருகைக் காகப் பொறுமையுடன் நெடிது காத்திருப்பார்; அவன் வந்ததும் தன்னை முற்ற முழுக்க அவன் கைகளில் தந்து விடுவார். மெய்யான காதல் முழுமையான ஒப்படைப்பில் தான் இருக்கிறதே தவிர, விதிகள் முறைமைகளைக் கடைப் பிடிப்பதில் இல்லை. வாழ்வில் தன் பங்கை ஆற்றவும் கடமைகளைப் போற்றவும் மக்கள் அழைப்பு விடுக்க, அவர் அதற்குச் செவி சாய்க்கவில்லை. அதனால் பிறரது கோபத்துக்கு ஆளாகிறார். யார் என்ன சொன்னாலும் அவர் தன் தெய்வத் தலைவற்காகக் காத்திருப்பார். அவன் வந்ததும் ஒப்படைத்துவிடுவார். அவ்வாறு செய்வதே உண்மைக் காதலின் வழி;உண்மைக் கடவுளடியாரின் வழி.

☐ உலகியற் காதலும் ஆன்மிகக் காதலும் உருகி ஒன்றாகி இலங்குகிறது இந்தப் பாடலில். காதல் படிமமும் அதற்கான சொன் மரபும் கையாளப்படுகின்றன. 26ஆம் பாடல் வரை இந் நெறி தொடர்கின்றது.

O

## பதினெட்டு
## இருண்ட தனிமையில்

☐ மேகக் கூட்டங்கள் திரள்கின்றன. இருள் செறிகின்றது. காதலி (மானிட ஆன்மா) தன்னந் தனியாகத் தன் காதல் தலைவனுக்காக (கடவுளுக்காக)ப் புறத்தே காத்திருக்கிறாள். ஆனால் அவன் அவளை உள்ளே வருமாறு அழைக்கவில்லை.

சுறுசுறுப்பான, வெளிச்சமுள்ள, பதற் பொழுதில் காதலி மற்ற மக்களோடு பணி செய்யவும் அவர்களின் இன்ப துன்பங்களில் உடனிருக்கவும் செய்கிறாள். ஆனால் இப்போது இருள் கவிந்த தனித்த வேளையில் அவள் தன் (தெய்வக்) காதலன் வரவுக்காகக் காத்திருக்கிறாள்.

அவன் அவளிடம் வராமல், காட்சி தராமல் தவிர்வானேல், புறத்தே மழை கொட்டும் இருண்ட தனித்த இராப் பொழுதை எப்படிப்போக்குவது என்றுஅவளுக்குப் புரியவில்லை.

தொலைவிலுள்ள வானத்தின் இருண்ட மேகத்தைப் பார்த்தவாறு இருக்கிறாள் தலைவி. அவளது அழுகுரல் காற்றின் அழுகுரலோடு ஒன்று கலக்கிறது.

18. மேகத்தின் மேல் மேகம் குவிகிறது. வானம் இருள் கிறது. காதலோய், கதவுக்கு வெளியே தன்னந் தனிமையில் என்னை ஏன் காத்திருக்கச் செய்கிறாய்?

உச்சிப் பொழுதில் சுறுசுறுப்பான நிமிடங்களில் நான் கூட்டத்திடை இருக்கிறேன். ஆனால் இப்போது இருண்ட தனித்தவேளையில் நான் நின்னையே நம்பி யிருக்கிறேன்.

நின் முகத்தை எனக்குக் காட்டாவிடின், என்னை முழுக்க நீ ஒதுக்கி வைப்பின் நெடிய மழைப் பொழுதை எங்ஙனம் கழிப்பேன் என்று அறிகிலேன்.

மிகத் தொலைவிலுள்ள வானத்து இருளை நான் உற்றுப் பார்க்கிறேன். அமைதியற்ற காற்றோடு என் நெஞ்சம் புலம்பியவாறு அலைகிறது.

☐ உலகியற் சார்பில், காதலனுக்காக ஏங்கும் காதலியின் ஏக்கம் ஆன்மிக நிலையில், ஆன்மா மறுபடி இறைமையுடன் கலந்துவிட விழையும் விருப்பாக இப் பாடலில் உயர்வுற இயைபு பெறுகிறது. முன்னது மேலெழுந்தவாறு அமைந்த பொருளாகவும் பின்னது ஆழ்ந்த குறியீட்டுப் பொருளாகவும் உள்ளன.

O

## பத்தொன்பது
## பொறுமைக்குப் பரிசு உண்டு

☐ கவிஞர் தன் தெய்வத் தலைவனை வேண்டி இடையறாது தொழுதார்; பொறுமையுடன் காத்திருந்தார். ஆனால் அவரது தொழுகைக்குத் தலைவன் விடை எதுவும் தந்தானில்லை. தலைவன் வாய் திறவாதிருப்பதைப் பொறுத்துக் கொண்டு அவன் தன் மனம் இரங்கி வாய் மலருங்காறும் காத்திருப்பார். இரவு, தன் நட்சத்திர விழிகளால் விழிப்போடு தலைகுனிந்தவாறு பொறுமையுடன் விடியலை எதிர் நோக்கியிருக்கிறது. அவ்வாறே அவரும் இறைவனுக்காகக் காத்திருப்பார். காத்திருந்த இரவுக்கு விடியல் பரிசாகக் கிடைக்கிறது. அவ்வாறே கவிஞரது விழிப்பான பொறுமையும் பரிசு பெறத்தான் செய்யும்.

பரிவாகிய இரவு இறுதியாக ஒரு முடிவுக்கு வரும் என்பதில் கவிஞர்க்கு உறுதி உண்டு. அவர்தம் கேள்வனை அழகு ஒளிரும் காலைப் பொழுதில் சந்திப்பார். அவன் தன் குரலமுதினை அவர்மேல் பொழிய, அது பொன்னோடைகளாக வான்வழிப் பாயும்.

இறைவனின் தெய்விகச் செய்தி இனிய இசைப் பறவைகளின் மூலம் வரும்; வனங்களில் நிறைவாகப் பூத்த மலர்கள் இணக்கமாக இறைவன் பெருமையைச் சாற்றும். வேறு வகையாகக் கூறின் இயற்கையின் ஒவ்வொரு பொருளும் இறைவனின் இசைப் பெருஞ் சீர்த்தியைக் கூறும் நேரம் வரும்.

19. நீ பேசாவிடில் நான் என் நெஞ்சத்தை நின் வாய் வாளாமையால் (பேசாமையால்) நிரப்பி அதைப் பொறுத்துக் கொள்வேன்.

அசைவிலனாக நான், விண் மீன் விழிப்போடு பொறுமையுடன் தலை தாழ்ந்திருக்கும் இரவெனக் காத்திருப்பேன்.

வைகறை உறுதியாய்ப் புலரும். இருள் கழியும், நின் குரல் வானத்தை ஊடறுத்துப் பொன்னோடைகளாகப் பெருகும்.

அதன் பின் நின் சொற்கள் என் பறவைக் கூடு ஒவ்வொன்றிலிருந்தும் பாடல்களாகச் சிறகு பெறும். நின் இன்னிசை என் காட்டுத் தோப்புகள் எல்லா வற்றிலும் மலர்கள் யாவிலும் பீறிட்டு வரும்.

❑ இத்தகைய மனப் பாங்கிற்கு, பொறுமையான சுய ஒழுங்கும் சுய துப்புரவும் அடிப்படைகளாகும். கவிஞர் அவ்வாறான வழி நடப்பதில் திடமாக இருக்கிறார்.

கவிஞரின் நம்பிக்கைக் குறிப்பு தெளிவாக ஒலிக்கிறது. "காதலைப் பரிசாகத் தருதற் பொருட்டே கடவுள் காதலைக் கொடுக்கிறான்" என்பது தெளிவு.

பறவைகளின் பாட்டுக்களும் மலர்களின் மலர்ச்சியும் இறைமைத் தோற்றத்தின் குறியீடுகளாக உள்ளன.

O

# இருபது
# ஆன்மிக நறுமணம்

❑ கவிஞர் ஒருநாள் இறை வழிபாட்டுக்கான மலர் களைத் தேடிப் பூக் குடலையோடு செல்கிறார். தாமரை ஒன்று நன்கு மலர்ந்துள்ளது. ஆனால் கவிஞர் ஏதோ நினைத்தவாறு அங்கும் இங்கும் நடக்கிறார். தனது தேட்டப் பொருளை மறந்து திரிகிறார். அவரது அருகே இருக்கும் தாமரையை அவர் கண்ணெடுத்துப் பார்க்க வில்லை. ஆகவே அதனைப் பறிக்கவில்லை. அதனால் பூக் குடலை வெறுங் குடலையாகவே இருக்கிறது.

கவிஞரை ஏதோ ஒரு விதக் கவலையும் விருப்பமும் ஆட் கொண்டிருந்தன. தென்றலில் இனியதொரு நறு மணம் மிதந்து வந்தது. அது அவரை மெய்சிலிர்ப்பு அடையவைத்தது. அது அவர்க்குத் தெய்விகச் செய்தி கொண்டு வந்தது. கஸ்தூரி மான், காற்றிலே மணம் வருவதாக எண்ணி அதனைத் தேடிச் செல்கிறது. அது போன்று தானும் இருப்பது கவிஞர்க்குப் புலனா கிறது,

இறைவன் நமக்கு மிக நெருக்கத்தில் இருக்கிறான், நமக்குள்ளே இருக்கிறான். மானிட நெஞ்சில் தெய்விக அன்புத் தாமரை மலர்கிறது. ஆனால் நாம் புறம் புறம் ஆற்றலைத் தேடுகிறோம். நமது ஆற்றலைப் பன்முகமாகச் விடுகிறோம். அதனால் இறைவனை—அவனது அன்பை—சிதறதவற விடுகிறோம்,

இறைமைக்கான பெரு விருப்பமும், அது நிறைவேறாத தால் துயரமும் கவிஞர் நெஞ்சில் மேவியிருக்கின்றன. இறைமையுடன் முழு ஒன்றிப்பு அடைவது எப்படி என்று திகைப்படைகிறார் அவர்.

மயக்கும் நறுமணம் தன்னிடம் இருக்கிறது என்று அறிய மாட்டாமல் அதனைத் தேடி ஓடும் கஸ்தூரி மான்; அவ்வாறே மானிட நெஞ்சில் தெய்விக மணம் கமழ்ந்திருக்க, மானிடன் அறியானாகிப் புறம் புறம் தேடுகிறான்.

20 தாமரை மலர்ந்த நாளில், அந்தோ என் மனம் அலைந்து கொண்டிருந்தது. ஆனால் அது எனக்குத் தெரியவில்லை, என் பூக் கூடை வெறிதாக இருந்தது. பூ நாடுவராற்று இருந்தது.

இடையிடை ஒரு துயரம் என்னைச் சூழ்ந்தது. நான் கனவிலிருந்து விழித்துக் கொண்டேன், தென்றலில் புது நன்மணத்தின் இனிய தடயம் ஒன்றை உணர்ந்தேன்.

தெளிவிலா இனிமை என் நெஞ்சை ஏக்கத்தால் வேதனையுறச் செய்தது. வேனிலின் ஆர்வமான மூச்சு தன் பூரணத் துவத்தைத் தேடுவதாக எனக் குத் தென்பட்டது அது.

அது அவ்வளவு அருகில் இருந்தது; அது என்னுடை யது தான், அந்த முழுமையான இனிமை என் நெஞ்சத்தின் ஆழத்தில் தான் மலர்ந்துள்ளது என்பது எனக்குத் தெரியவில்லை.

☐ தாமரை, இந்திய ஆன்மிக மரபில் இறைவனது இருக்கைக்குக் குறியீடாகும்.

☐ பாடலில் தாமரை மலர், இனிய மணம், தென்றல் என்ற இயற்கைப் பொருட் படிமங்கள் தெளிவாகப் பதிவு பெற்றுள்ளன. கஸ்தூரி மான் பற்றிய படிமத்தை ஆசிரியர் மிகப் பொருத்தமாக வரைந்துள்ளார். அது கபீரின் தாக்கத்தைக் காட்டுகிறது. சுவாமி இராம தீர்த்தர் ஒரு சமயம் கூறுகையில், "உலகின் எல்லாக் காந்த சக்தியும், எல்லா ஆற்றலும் உன்னிலிருந்தே வருகின்றன. உலகின் எல்லா அதிசயங்களும் உனக்குத் தாழ்ந்த அடிமைகள்; வேறொன்றுமில்லை" என்று குறிப்பிட்டார்
O

# இருபத்தொன்று
# காற்றில் வரும் ஒரு சிலிர்ப்பு

☐ கவிஞராகிய அன்பிற்குரியார், கடவுளாகிய அன்புடையாரை - தலைவரை - கண்டுணர்தற்காகப் பலப்பல காலம் காத்திருந்தார். மந்தமான மடிமைப் பொழுதுகள் கழிந்தவாறிருந்தன. இப்பொழுது அவர் தன் படகைச் செலுத்த, அக்கரையை - இறைமைக் கரையை – சேர ஆசை மீக் கூர்ந்தார்.

இளவேனில் வந்தது, போனது. மலர்கள் வாடிப் போயின. வெளுத்து உதிர்ந்த மலர்களிடை நோக்கம் எதுவுமின்றி அவர் நிற்கிறார், காத்திருக்கிறார்.

தெய்விகக் கலப்புக்காகத் தயங்கி நிற்கிறார். தன் வாழ்வின் இளவேனில் காலத்தைப் புல்லிய சுகபோக நுகர்ச்சிகளில் போக்கி விட்டார். இறைத் தலைவனைச் சந்திக்கத் தன்னைச் சுய துப்புரவு, சுய ஒழுங்குமுறைகளால் தக்கவாறு ஆயத்தப் படுத்திக் கொள்ளவில்லை.

அலைகள் இரைச்சலிடுகின்றன. பழுப்பாக மாறிய இலைகள் கரைமேல் விழுந்து அலைபடுகின்றன. கவிஞரோ வெறுமையின்பால் வறிதே பார்வையைச் செலுத்துகிறார். காற்றினூடே ஒரு சிலிர்ப்பு வருவதை உணர்கிறார். அக்கரையிலிருந்து இனிய இசைப் பண்கள் காற்றிலே

அவர் பால் வருவதைச் செவிமடுக்கிறார். அஃது அவரை அழைக்கும் தெய்விகப் பாட்டு. அந்த அழைப்புக்கு அவர் பதில் குறிப்புத் தர வேண்டும். இறைவனைச் சந்திப்பதற்கு, நெடுங் கடலைக் கடத்தற்குத் தன் படகைச் செலுத்த வேண்டும்.

21. என் படகினை நான் செலுத்த வேண்டும். என் மந்தமான மணிக் கூறுகள் கடற்கரையிலே கழிகின்றன. அந்தோ!

இளவேனில் மலர்வதை முடித்துக் கொண்டு விடை பெற்று விட்டது. வாடிய, பயனற்ற, காய்ந்த, மலர்ச் சுமையுடன் இப்போது நான் காத்துக்கொண்டிருக்கிறேன்; காலங் கடத்துகிறேன்.

அலைகள் கூச்சலிடுகின்றன. கரைமேல் நிழல்படிந்த இடைவழியில்,மஞ்சள் இலைகள் ஆடி உதிர்கின்றன.

என்ன வெறுமையை நீ உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? மற்றொரு கரையிலிருந்து மிதந்துவரும் தொலைத் தூரப் பாட்டின் பண்களில் ஒரு சிலிர்ப்பினை நீ உணரவில்லையா?

☐ தன்னைப் படைத்தோனுடன் தனி ஆன்மா மீண்டும் ஐக்கியமாகு முன் கடக்க வேண்டிய நிலைநெடும் கடலுக்குக் குறியீடாக ஆறு இங்கு அமைந்துளது. மன்னு பரம்பொருளை அடைதற்கு மானிட ஆன்மா நீடிய அவாக் கொண்டிருத்தலை இப் பாடல் புலப்படுத்துகின்றது. காற்றில் வரும் சிலிர்ப்பு, தொலைத் தூரப் பாடலின் இசை — என்பன தனி ஆன்மாவுக்கு இறைவன் விடுக்கும் அழைப்பின் குறியீடுகளாம். தொலைத் தூரப் பாடகன், வைணவக் காதல் பாக்களில் வரும் இராதைக்கு - அவளால் தடுக்க வொண்ணா அழைப்பு விடுக்கும் கண்ணனாக இருக்கலாம் அல்லது கவிஞர் கருதும் ஆருயிர்த் தேவனாக இருக்கலாம். அவன் யாவனாயினும் காதல், உயரிய ஆன்மிகக் காதலே.

O

# இருபத்திரண்டு
# திறந்து வைத்த கதவுகள்

□ ஆடித் திங்கள். கருமுகில்கள் வானைச் சூழ்ந்துள்ளன. அன்பிற்குரிய கவிஞரின் தெய்விகத் தலைவன், நிலவுலகக் காதலன் தன் காதலியைச் சந்திக்க செல்லுமாப் போல் காவலரை எல்லாம் ஏமாற்றிவிட்டு ஓசைப்படாது இரகசியமாகத் தெருவோடு செல்கிறான்.

கீழ்காற்று உரத்த ஓசையுடன் வீசுகிறது. சுடர்மிக் பகல்ஒளி மறையுமாறு விசும்பின் குறுக்கே அடர்த்தி யான திரைஇட்டாற்போல் இருந்தது. மக்கள் தங்கள் வீட்டுக் கதவுகளை அடைத்து விட்டார்கள்.

காடுகளிற் பறவைகளின் பாட்டுக்கள் அடங்கின. அந் நிலையில் தெய்விகத் தலைவன் தெருவிடை நடந்து செல்வான் என்று எவரும் கருதார். மற்றைய இல்லங் களிற் கதவுகள் சாத்தப்பட்டிருக்க, அன்பிற்குரியராகிய கவிஞர் மட்டும் தம் இல்லத்தின் கதவுகளைத் திறந்து வைத்திருக்கிறார்.

தன் தலைவன் ஒரு கனவுபோல் தனது வீட்டைக் கடந்து போய்விட வேண்டாம் என்று அவர் வேண்டிக் கொள்கிறார். தலைவன் வந்து தன் அன்பிற்குரியாரின் அன்பை ஏற்று நிறைவேற்றம் தர வேண்டும்.

28. மழை மிக்க ஆடித் திங்களில் அடர்ந்த நிழல்களி டையே மறைவாக, இரவெனக் காவலாளரைக் கடந்து ஓசைப்படாமல் நடந்து செல்கிறாய்.

    இன்று காலை நேரம், பலத்த கீழ் காற்றின் இடைய றாக் கூவிளிகளைப் பொருட்படுத்தாமல் தன் கண் களை மூடிக் கொண்டது. எக்காலும் விழித்திருக்கும் வானத்தின் மேல் கனத்த திரை இழுத்துப் போடப் பட்டிருக்கிறது.

    கானகம் தன் பாட்டுக்களை நிறுத்தி விட்டது. வீடுகள் யாவற்றிலும் கதவுகள் அடைக்கப்பட்டு விட்டன. ஆள்அரவமற்ற தெருவில் நீ ஒருவன்

தான் வழிப் போக்கன் ஆ, என் ஒரே நண்பனே, எனக்கு மிக்க நேயனே, என் வீட்டின் கதவுகள் திறந்தே உள்ளன. கனவெனக் கடந்து போய் விடாதே.

☐ துன்பங்கள் தீப்பேறுகள் தத்தளிப்பு ஆகிய புயல்கள் அடியார்களைச் சூழ்ந்து கொள்ளுங்கால் இறைவன் அவ் விடத்து வருகிறான், ஆறுதல் தருகிறான் என்பது மெய் யுணர்வாளரின் அனுபவ உறுதி.

☐ கீதாஞ்சலியில் மற்றும் சில பாக்களில் காணுமாப் போன்று இதிலும் பாலியலான காதல் மொழியில் வரை யப்பட்டுள்ள படிமம், கவிஞரின் அனுபூதிக் கருத்தைத் விளக்கப் பயன்படுகின்றது. உடற்சார்பான புலனுகர்ச்சி வழியில் பேசப்படும் படிமம், ஆன்மிக ஐக்கியத்தை ஓரளவு வரைந்து காட்டக் கையாளப்படுகின்றது. இறைவன் நம் அகத்தும் புறத்தும் இருக்கிறான் என்பது கவிஞரின் கோட்பாடு.

☐ ''அவன் எனக்கு வெளியில் இல்லை என்று நான் சொன்னால் வையகத்தை அவமானப் படுத்துவதாம்; அவன் என் உள்ளே இல்லை என்று நான் சொன்னால் அது பொய்ம்மையாகும். உள்ளுலகையும் வெளி உலகை யும் பகுக்க முடியாத ஒன்றாக அவன் ஆக்குகிறான். உணர்வு நிலையும் உணர்விலா நிலையும் அவன் திருவடி வைக்கும் பலகைகள்; அவன் வெளிப்பட்டும் இல்லை, மறைந்தும் இல்லை; திரை விலக்கி அவன் காட்டப் படுவதும் இல்லை, காட்டப் படாமலும் இல்லை' என்ற கபீர் மொழிகள் இங்குக் கருதற்குரியன.

O

# இருபத்து மூன்று
# நேர்மையான நேயமுள்ளவன்

☐ தன் தெய்வத் தலைவன் ஊறு இன்றித் தன்பால் வரவேண்டும் என்று காதற் கவிஞர் தவிப்புடன் இருக் கிறார். இரவு, புயலும் இருளும் கூர்ந்து இருக்கிறது.

வானம் உறுமுகிறது. தாங்க வொண்ணா நோவுடையார் போன்று இடி இடிக்கிறது. அத்தகைய இரவில் தலைவன் 'நெடும்பேர் அத்தம்' நீந்தி வர வேண்டும்.

தலைவனின் வரவுக்காகக் காத்திருக்கும் கவிஞரின் கண்கள் மூட மறுக்கின்றன. இரவெலாம் விழித்திருக் கிறார். கதவைத் திறப்பதும் இருளினூடு எட்டிப் பார்ப்பது மாக இருக்கிறார். ஆனால் தலைவன் வரக்காணோம். அவனது வழி யாண்டுளது என்று வியக்கிறார்.

கொந்தளிக்கும் ஆற்றினது இருண்ட கரைமேல் அவன் வந்து கொண்டிருப்பான்; இருண்ட காடுகளின் ஓரத்தில், முன் அறிந்திரா இருள் செறிந்த சேண் தடங்களில் அவன் வந்து கொண்டிருப்பான்.

23. காதற் பயணத்தில், என் நேயனே. புயல் வீசும் இவ் இரவினில் தொலைப் புறத்தே இருக்கின் றனையா? வானமோ நம்பிக்கை இழந்தவர் போல் உறுமிக் கொண்டிருக்கிறது.

எனக்கு இன்று உறக்கம் வரவில்லை. அடிக்கடி வாயிற் கதவைத் திறக்கிறேன், இருளினூடு பார்க் கிறேன், என் நேயனே!

என் முன் எதுவும் தென்படவில்லை. நின் பாதை எங்கே உளது என்று வியப்படைகிறேன்.

என்பால் வருதற்காக, மைக் கறுப்பான ஆற்றின் எந்த மங்கலான கரைமீது, கனன்று கொண்டிருக்கும் வனத்தின் எந்தச் சேய்மையான ஓரத்தில், திகைப் புறச் செய்யும் எந்த இருள் ஆழத்தினூடு நின் வழியை வகுத்திருக்கிறாய், என் நேயனே!

☐ இவ்வாறாக, தனக்கு நேரும் இடையூறுகள் தொல் லைகள் என்பவற்றைக் கருதாது, மெய்யடியாரின் துன்பத் தீயூழ் வளையங்களை நீக்கும் பொருட்டுக் கடவுளாம் தலைவன் உலகம் துயிலும் போதும் வருகை தருவான். அவன் அன்பர்களின் நேர்மையான நேயன்; அச்சமற்ற ஆதரவாளன். எந்த இடரும் தடையும் அவனைத் தடுத்து நிறுத்திவிட மாட்டா. அவன் வருவது உறுதி. அவனது கருணை வரம்பறியாதது. அன்பர்க்குக்

கை கொடுக்க-தனி ஆன்மாவைச் சந்திக்க - அவன் எப்பொழுதும் ஆயத்தமாகவும் ஆர்வமாகவும் உள்ளான். O

## இருபத்து நான்கு
## புதிய மலர்ச்சி

☐ அது அந்தி நேரம். பகற்பொழுது விடைபெறுகிறது பறவைகள் பாடுவது நின்றுவிட்டது. களைப்புற்ற காற்று இயக்கமற்று இருக்கிறது. தாமரை வாட்டமுற்றது, அதன் இதழ்கள் மூடிக் கொண்டன.

இயற்கைப் பொருள்கள் சோர்ந்து தூங்கலாயின. கனத்த இருட் போர்வையால் கடவுள் அவற்றைப் பொத்து கிறார்; துயிலுமாறு தாலாட்டு இசைக்கிறார்.

அடுத்த நாட் காலையில் அவை புத்துயிரும் புதுமைப் பொலிவும் கொண்டு விழிப்படைகின்றன, இவ்வாறு நடப்பது என்றுமுள இயற்கை விதி. கவிஞராகிய அன்பர், தளரும் தன் உணர்வுகள் புத்தெழுச்சி கொள்ளக் கடவுளின் கருணை கை கொடுக்கும் என்று நம்புகிறார்.

வாழ்க்கைப் பயணத்தில் களைத்து விட்டார் கவிஞர். நீண்ட வறண்ட பயணத்தில் அவர் வைத்திருந்த உண் பொருள்கள் தீர்ந்து விட்டன. உடைகள் நைந்து கிழிந்தன. அவருக்கு உடல் வலு குறைந்து கொண்டிருந்தது; ஆகலின் இகழ்ச்சி வறுமை ஆகியவற்றிலிருந்து தன்னைக் காக்குமாறு அவர் தன் தலைவனை வேண்டிக் கொள்கிறார். புதிதாகப் பிறந்த மலராகத் தன்னைப் புதுப்பித்துத் தர வேண்டுகிறார்.

24. அந்தி மங்கலில் தலை தாழும் தாமரையின் இதழ் களை இதமாகக் குவியவும் தரையைத் துயில் விரிப்பால் மறையவும் செய்வதுபோல்,

பகல் முடிந்தது எனில், பறவைகள் இனியும் பாடுதல் இல்லை எனில், காற்று தளர்ந்து ஓய்ந்தது எனில் என்மேல் கனமான இருள் திரையை இழுத்து விடு.

எந்தப் பயணிக்குப் பயணம் முடியுமுன் உண்பொருட் பொதி தீர்ந்ததோ, உடை கிழிந்தும் மாசடைந்தும் போனதோ, வலிமை ஓய்ந்ததோ அவனது வெட்கத்தை வறுமையைக் களைந்து விடு. நின் அன்பார்ந்த இருள் மறைப்பின் கீழ் இருக்கும் ஒரு பூவினது வாழ்வு போல அவனது வாழ்வைப் புதுப்பிப்பாயாக.

☐ இந்தப் பாடலில் பூ என்பது பிறப்பு இறப்பு வளையத்தின் குறியீடாக உள்ளது. இரவு என்பது மரணத்தின் குறியீடு, வலுவைப் புதுப்பித்துத் தரும் அன்புடையதாக அஃது இருக்கிறது.

ஆன்மா அழிவற்றது; சாவு என்பது வாழ்வின் முடிவு அன்று, வாழ்வைப் புதுப்பித்தலே அது என்பது கவிஞரின் நன்னம்பிக்கை; மெய்ப் பொருட் கொள்கை. 'கந்தைகளை அகற்றி விட்டுப் புத்துடம்பைப் போர்த்துக் கொள்கிறான் உள்ளிருப்போன்' என்ற கீதையின் செல்வாக்கு இங்கு விளங்கி நிற்கிறது.

O

# இருபத்தைந்து
# துயிலுக்குப் பின் தெளிவு

☐ களைப்புக் காரணமாகக் கவிஞர்க்கு உறக்க விருப்பு மேலோங்கியுள்ளது. இறைவன் கையில் தன்னை முழுமையாக ஒப்படைக்க முடிவு செய்கிறார். எனவே முழு நம்பிக்கையுடன் இனி அவர் உறக்கம் கொள்வார்.

அவரது உணர்ச்சிகள் நலிந்து விட்டன. ஆகவே அவர் தன்னைப் படைத்தோனைச் சந்திக்க, போற்றியும் தொழுதும் தன்னை ஆயத்தப் படுத்த அது தருணமாக இருக்க வில்லை.

இருளாகிய முகத் திரையை இறைவன் பகலின் கண்கள் மேல் இழுத்து விடுகிறான். அடுத்த விடியல், அதிக ஒளியோடும் உற்சாகமுள்ள கண்களோடும் மலர்கிறது. அவ்வாறே மரணம் என்னும் உறக்கத்தினால் கவிஞரின் சக்திகளும் புதுப்பிக்கப் பெறும்.

25. களைத்த இரவில் நின்பால் நம்பிக்கை வைத்து, போராட்டம் இன்றி உறக்கத்திற்கு என்னை நான் ஒப்படைப்பேனாக.

என் தளர்ந்த உணர்வை, நின்னை வழிபடக் குறைந்த ஆயத்தம் செய்யத் தூண்டாதிருப்பேனாக.

சோர்வு எய்திய பகல் கண்கள் தெளிந்த விழிப்பாம் உவகையில் தம் பார்வையைப் புதுப்பித்துக் கொள்ள, இரவுத் திரையை நீ தான் இழுத்து விடுகிறாய்.

☐ இறைவனிடம் முழுப் பற்றுறுதி கொள்ளுவதும் அவனது ஆளுகைக்குத் தன்னை முழுக்க ஒப்படைப்பதும் இன்றியமையாதன என்பது இப்பாடலால் வலியுத்தப் பெறுகின்றன.

கடவுளிடம் பற்றுறுதி கொள்ளுதல் மானிட ஆன்மா வுக்குச் சிறப்புத் தரும் என்பதோடு இறப்பின் மூலம் வாழ்வு புதுமை பெறும் என்ற கருத்தும் இந்தப் பாடலால் வலியுறவு பெறுகின்றன.

O

# இருபத்தாறு
## உறக்கத்தில் பட்ட மூச்சு

☐ கடவுளாகிய காதலன், தன் அன்பிற்கு உரியாராகிய கவிஞரிடம் வந்தான். அருகினில் அமர்ந்தான். ஆனால் அந்தோ, கவிஞர் உறங்கிவிட்டார்; தலைவனின் இருப்பை உணர்ந்தாரில்லை.

ஓசையற்ற இரவின் அமைதியில் தெய்வக் காதலன் அவரிடம் வந்தான்; யாழ் இசைத்தான். கவிஞரின் கனாக்களில் அது எதிரொலி செய்தது.

ஆனால் கவிஞர் தனது இரவுகளை உறக்கத்தில் போக்கி னார். யாருடைய மூச்சு தன் துயிலைத் தொட்டதோ அவனை அவர் காணாதொழிந்தார்; அதற்காகத் தன்னைப் பழித்துக் கொள்கிறார்.

26. அவன் வந்தான். என் அருகில் அமர்ந்தான். ஆனால் நான் துயிலுணர வில்லை, என்ன சாபப் பயனாம் துயில் அஃது? துயர்க்கு உரியவன் யான்.

இரவின் அமைதியில் அவன் வந்தான். யாழ் ஏந்தி இருந்தான். என் கனவுகள் அவனது இசை வண்ணங்களுக்கு ஒத்து அமைந்தன.

அந்தோ, என் இரவுகள் இங்ஙனம் போய் விடு கின்றன. யாரது மூச்சு என் துயிலைத் தொடு கிறதோ அவனது காட்சியை நான் எப்போதும் தவற விடுகிறேனே, ஏன்?

☐ அடியார் சிலபோது இறைவனின் அருகண்மை வாய்க்கப் பெறுகின்றனர். ஆனால் தம் தாமத இயல்பால் வரும் அறியாமை, செயலின்மைகளால் இறைவனின் அண்மைமைய உணராதிருக்கின்றனர். விழித்துணரும் பொழுது, அந்த இறை - முன்னிலை தம்மை விட்டு அகன்று விட்டமைக்கு வருத்தம் கொள்கின்றனர்...

☐ உலகியல் தேட்டங்களில் அமிழ்ந்து விட்ட மாந்தனுக் குத் தெய்விகம் பற்றிய உணர்வு தெளிவின்றி மங்கலாக அடங்கிக் கிடக்கின்றது. பாடலில், அது கனவில் ஒலிக்கும் கடவுளிசை எனப் படுகின்றது. இரவுகள் என்பது உலகப் பொருட் சேர்க்கை அதிகாரம் என்ப வற்றை வேட்டுத் தம்மைத் தாழ்த்திக் கொள்ளும் ஆன்மிக அறியாமையைக் குறிக்கின்றது.

○

## இருபத்தேழு
## ஒளி எங்கே உள்ளது?

☐ இருளின் ஆட்சி உச்சத்தில் இருக்கிறது. அடர்ந்த முகில்கள் வானில் அடைந்துள்ளன. விடாது மழை பொழிகிறது. இத்தகைய தருணத்தில் கவிஞர் நெஞ்சில் தன் தலைவன்மாட்டு அன்புக் கிளர்வு உண்டாகிறது.

எங்கும் இருண்டிருப்பதால் அவர் விளக்கைத் தேடுகிறார். உலக ஆசைகளாகிய கும்மிருட்டில் கடவுள் பக்தியாகிய சுடர் ஒளிதான் பிழைபடும் மானிடத்துக்கு வழிகாட்ட முடியும்.

தெய்விக வெளிச்சம் அவரது நெஞ்சில் இருக்கிறது. ஆனால் அது அவருக்குத் தெரியாது. எவ்வளவு தீயூழ் நிலை அது! அவரது நெஞ்சில் வெளிச்சத்தின் சிறு மினுக்கொளியும் இருந்ததில்லை. தெய்விக ஒளி பெறு தற்கு ஒரு சிறு முயற்சியும் செய்யாது வாழ்க்கையை வறிதே கழித்துவிட்டார்; கடவுட் காதலுக்காகச் செத் தொழிந்தாலும் நல்லதே என்று தோன்றுகிறது.

துன்பம் அவரது கதவைத் தட்டுகிறது. அவருடைய தலைவன் காத்திருக்கிறான் என்ற செய்தியை அது தெரிவிக்கிறது. இரவின் இருளால் ஏற்பட்ட நெடும் பிரிவுக்குப் பின் மீண்டும் ஒன்றுசேர அவன் அழைக் கிறான்.

காதல், கவிஞரின் நெஞ்சைத் தூண்டுகிறது. ஆனால் அது என்ன என்று அவர்க்குப் புலனாகவில்லை.

ஒரு நொடிப் பொழுது ஒளிவீச்சுத் தெரிகிறது. ஆனால் அந்த ஒளி வீச்சோ பார்வையை மேலும் தடுத்து விடு கிறது. தெய்விக இசையைக் கவிஞர் கேட்கிறார். ஆனால் அது எங்கிருந்து வருகிறது என்று தெரியாமல் இருளில் தவிக்கிறார்.

வெளிச்சம் இல்லை. வெளிச்சம் உண்டாகத் தீ மூட்ட வேண்டும். உலக ஆசைகளைப் போட்டுத் தீ மூட்ட வேண்டும். கடவுட் காதலாகிய ஒளியை அதன் மூலம் ஏற்றலாம். கருங்கல் போன்று இரவு இருட்டிக் கொண் டிருக்கிறது. தனது பொழுது இருளில் கழிந்துவிடக் கூடாது, காதல் விளக்கைத் தனது உயிரால் தூண்ட வேண்டும்.

27. ஒளி! எங்கே உள்ளது ஒளி! பற்றி எரியும் ஆசைத் தீயால் அதனை ஏற்றுக.

அகல் இருக்கிறது. ஆனால் சுடரின் மினுக்கொளி அதில் இல்லை. இவ்வாறு இருக்கிறது உன் தலைவிதி, என் நெஞ்சமே! ஓ, இதற்கு மரணம் எவ்வளவோ மேல்!

துன்பப் பெண் உன் வாசற் கதவைத் தட்டுகிறாள். உன் தலைவன் விழித்திருக்கிறான் என்பதும் உன்னை இரவில் காதற் குறியிடத்திற்கு அழைக்கிறான் என்பதும் அவள் கொண்டு வந்த செய்திகள்.

வானம் மேகங்களால் மூடப் பெற்றுளது. மழை விடாது கொட்டுகிறது. என்னுள் ஏதோ கிளர்கிறது. அஃது என்ன என்று தெரியவில்லை. அதன் பொருளும் எனக்குத் தெரியவில்லை.

ஓர் இமைப்பொழுது மின்னல் ஒளி! அஃது என் பார்வைக்கு ஆழ்ந்த இருளைப் போர்த்துவிடுகிறது, இரவின் இன்னிசை என்னை எங்கே அழைக்கிறது என்று வழி தெரியாமல் என் நெஞ்சம் துழாவுகிறது.

ஒளி! எங்கே உள்ளது ஒளி! எரியும் ஆசைத் தீயால் அதனை ஏற்றுக. இடி இடிக்கிறது. காற்று வெறும் வெளியில் ஓலமிட்டுப் பாய்ந்து ஓடுகிறது. கருங்கல் போல் இரவு இருட்டி இருக்கிறது. இருளில் நேரம் கழிந்துவிட வேண்டா.

உன் உயிரால் அன்பு விளக்கை ஏற்றுக.

☐ மேகங்கள், இருள், மழை, இடி என்பன ஆன்மிக வழியில் குறுக்கிட்டுத் தடுக்கும் இடர்கள் இடும்பைகளைக் குறிக்கின்றன.

துன்பம் நேர்கையில் தான் மனிதன் இறைவனை நினைக்கிறான். இறையன்பு யாருடைய நெஞ்சில் இடையறாமல் நன்கு சுடர்விட்டு எரிகிறதோ அவர்களால் அவை கடந்தேறப் படுகின்றன.

தன்னலமற்ற கடவுளன்பு, இருண்டு வறண்ட மானிட வாழ்வில் தெளிந்த வழியைக் காட்டுகிறது என்பது கவிஞரின் கருத்து. தெய்விகச் சுடரை ஏற்ற, உலகியல் மயக்குகள் வேட்கைகளைப் போட்டு எரித்தலால் எழும் நெருப்பு உதவுகிறது.

☐ "ஆசைகளை விடுத்து, வேட்கைகளினின்று விடு பட்டு, ஆணவம் தன்னலம் துறந்து மேலே செல்வோன் அமைதியாம் நிலைபேறு அடைகிறான்" என்பது கண்ணன் காட்டும் வழி. "இம் மண்ணகத்தில் அன்பு வாழ்வது தவிர்ந்து விடலாகாது; ஏனெனில் மண்ணையும் விண்ணையும் இணைக்கும் ஒளிச் சங்கிலி அது. யாவும் கடந்த பொருளின் தேவத் தூது அது. பரம்பொருளின் இருக்கை அவ் அன்பு" என்பர் அரவிந்தர்.

O

# இருபத்தெட்டு
## கால் கட்டைகள் மேல் ஆசை

☐ இறையனுபவத்துக்கு ஏங்குகிறது மனித ஆன்மா. அதற்கு உலகியல் ஒட்டுதல் பெரிய தடையாகும். பொருட்சார்பான அத்தகைய தடைகளை - தளைகளை- பிணிப்புகளைத் தன்னால் உடைக்க முடியவில்லை என்று கவிஞர் இரங்குகிறார்.

கடவுளைக் காதலிக்கிறார், ஆனால் தன்னைப் பிணித்துத் தடுப்பவற்றை அவரால் அறுத்தெறிந்து முன்னேற முடிய வில்லை.

உடற்சார்பு உலகச் சார்பு ஆகிய தளைப்புகளிலிருந்து முழு விடுதலை பெறுவதே கவிஞரின் ஆசை. ஆனால் அதன் பொருட்டு அவர் முழு மனத்தோடு உண்மையான முயற்சி செய்யவில்லை. விட்டுக் கொடுத்து இணங்கியே செல்கிறார். அதற்கு அவர் வெட்கம் கொள்கிறார்.

விலை மதிக்க முடியாத ஆன்மிகச் செல்வத்தை அடி யார்க்குக் கடவுள் கொடுக்கிறார் என்பதில் கவிஞர்க்கு உறுதி உண்டு. கடவுள் தனக்கு உற்ற நண்பர் என்பதும் அவர்க்குத் தெரிகிறது. ஆயினும் பயனிலா உலகியல் உடைமைகளை உதறித் தள்ளத் துணிவு வரவில்லை. அவை துயரும் தொல்லையும் தருகின்றன; இருப்பினும் அவற்றை ஒட்டிக் கொண்டிருப்பதை அவரால் விட முடிய வில்லை.

உலகியல் ஒட்டுதல்கள் தூசிக்குச் சமானம். சவத்தைப் போர்வையால் மூடுவது போல் மனிதனின் ஆன்மிக மரணம் உலகியல் வேட்கை என்ற போர்வையால் போர்த்தப்படுகிறது. கவிஞர்க்கு அது வெறுப்பாக இருக்கிறது. ஆயினும் அவர் ஆசையால் அதை அணைத்துக் கொள்கிறார்.

பாவமாகிய ஒரு கனத்த சுமையைத் தன் தோள்களால் அவர் தாங்குகிறார். பலவாகிய தோல்விகள் பிழைகளால் நெஞ்சம் வெட்கத்தால் நிரம்பியுள்ளது. இறைவனைத் தொழுது ஆன்மிக உய்வு பெற விழைகிறார்; ஆனால் அச்சத்தால் அவர்க்கு நடுக்கம் உண்டாகிறது. உலகியல் ஒட்டுதலை விட்ட பிறகு தான் ஆன்மிக ஈடேற்றம் கிட்டுகிறது. அதனைச் செய்ய அவர்க்கு உள்ளம் இல்லை. அதனால் தான் அவர் இறைவனை ஏத்த அஞ்சுகிறார். அவரது வேண்டுதலுக்கு இறைவன் இசைவான். ஆனால் உலகியல் உடைமைகளை உதறித் தள்ள வேண்டியிருக்குமே, என் செய்வது?

28. விடாப் பிடியாக இருக்கின்றன கால் கட்டைகள். ஆனால் அவற்றை உடைக்க முயல்கையில் என் நெஞ்சம் நோகிறது.

விடுதலையே நான் வேட்பதெல்லாம். ஆனால் வறிதே அதனை எதிர்பார்த்தற்கு வெட்கமுறுகிறேன்.

நின்னிடம் விலை மதிக்க முடியாச் சொத்து உளது, எனக்கு மிகச் சிறந்த நண்பன் நீ, என்று உறுதியாயிருக்கிறேன். ஆனால் என் அறையில் மண்டிக் கிடக்கும் வெறும் பளபளப்பான பொருள்களைக் கூட்டித் தள்ள எனக்கு மனம் இல்லை.

என்னைப் போர்த்திருக்கும் போர்வை தூசும் மரணமுமான சவப் போர்வை; அதை நான் வெறுக்கிறேன்! ஆயினும் ஆசையோடு அதனைப் பற்றிப் போர்த்துக் கொள்கிறேன்.

என் கடன்கள் மிகுதியானவை; தோல்விகள் பெரியவை; என் வெட்கம் இரகசியமான சுமை; இருப்

பினும் நான் நன்மை கேட்டு வரும்போது எனது வேண்டுதல் அருளப் பெற்று விடுமோ என்று அச்சத்தால் நடுங்குகிறேன்.

☐ தளைகள், பளபளப்பான இப்பி, சவப் போர்வை என்பன உலகியற் பற்றின் குறியீடுகள். பற்றறுதியே இன்பத்துக்கு வழி என்ற கீதைக் கருத்து இப்பாடலில் மிளிர்கிறது. மனிதான்மாவின் உய்வினைத் தடுக்கும் அச்சங்கள் கொந்தளிப்புகளை இப்பாடல் எடுத்தியம்புகிறது.

☐ "பகட்டாகக் காட்சி தரும் பொருள்கள்—
அவற்றில் நான் ஒட்டிக் கொண்டிருக்க மாட்டேன்;
அழகாக உடுத்த இவ் வடிவுகள்—
சதுரங்கத்தில் மதிப்புக் குறைந்த காய்கள்;
அவற்றை நான் பார்ப்பேன்—
ஆனால் மனம் அசைந்திட மாட்டேன்"

என்ற இராமதீர்த்தர் பாடல் இங்கு நினையத் தகுமாறு உள்ளது.

O

## இருபத்தொன்பது
## தன்னைச் சுற்றி எழுப்பிய சுவர்

☐ ஆன்மாவுக்கு ஒவ்வொருவரும் தத்தம் பெயரிட்டுச் சுற்றுவேலி கோலுகின்றனர். ஆனால் ஆன்மா இருட்குகையிலிருந்து அழுகின்றது.

உலகியல் உடைமைகளாகிய சுவர் தன்னைச் சுற்றி எழுவதில் ஒவ்வொரு மனிதனும் ஆர்வம் காட்டுகிறான். உலகியற் சிறையைத் தூசியாலும் மண்ணாலும் சாந்து குழைத்துப் பூசுகிறான். சுவர் உயரமாக எழ எழ ஆன்மா இருண்ட நிழலில் மறைகிறது. உண்மையான தன்னை - ஆன்மாவை - பார்ப்பதற்கு மனிதன் விழிகண் குருடாக உள்ளான். அதிகாரம் பொருள் பெயர் புகழ் ஆகியவற்றைத் திரட்டுவதில் தாழ்ந்து செல்கிறான்.

பளபளப்பான புறப் பொருள்களின் மேல் செலுத்தும் ஆசைகள் மானிட ஆன்மாவின் சுதந்திரத்தைக் குறைக் கின்றன. உலகியல் உடைமைகளில் அக்கறை அதிகமாக ஆக, சுயத் தன்மை அதிகமும் மறந்து போகிறது.

ஆனால் தன் ஆன்ம நலத்துக்காக மானிடன் உலகியற் பொருள்களில் ஒட்டுறவைக் குறைத்தல் நல்லது. ஆன்மிக உய்தி பற்றறுதியால் தான் இயலும்.

29. என் பெயரால் நான் யாரை வேலியடைத்து வைத் திருக்கிறேனோ அவன் இந்த நிலவறையில் அழுது கொண்டிருகிறான். சுற்றி வளைத்துச் சுவரை எழுப்பு வதில் விடாது சுறுசுறுப்பாக இருக்கிறேன் நான். சுவர் விண்ணோக்கி நாளுக்கு நாள் உயர்ந்து செல்ல, நான் என் மெய் வடிவை அதன் இருண்ட நிழலிற் பார்க்க முடியாமற் போகிறது.

இந்தப் பெருஞ்சுவரில் நான் பெருமை கொள்கிறேன்.. பெயரில் சிறிதளவு துளை விழுந்து விடுமோ என்று அதனை மண்ணாலும் மணலாலும் சாந்து பூசு கிறேன். அதில் அக்கறை அதிகம் காட்டக் காட்ட நான் என் மெய்வடிவைக் காண முடியாது ஒழிகிறது.

☐ துறவு கடுநோன்பு என்பனவற்றில் கவிஞர்க்கு உடம்பாடு இல்லை. உலகியற் கடமைகளை ஆற்றிக் கொண்டே ஆன்மிகக் குறிக் கோளைப் படிப்படியாக அடையலாம் என்பது அவரது கொள்கை. பேராசை தன்னலம் வெறி என்பவற்றுக்கு எதிராக அவர் பேசுகி றாரே யன்றி ஆரோக்கியமான நுகர்ச்சிகளை அவர் கடிந்துரைக்கவில்லை.

இந்தப் பாடலில் படிமம் எளியதாக அதே சமயம் மிக்க பொருளியைபு உடையதாக அமைந்துள்ளது.

எனது பெயர், குகை, இருள் நிழல் என்ற குறியீடுகள் உலகியல் ஒட்டுதல்களைக் குறிப்பன.

O

# முப்பது
# வெட்கமற்ற அகந்தை

☐ தன் தலைவனாகிய பெருமானைச் சந்திக்கத் தனித்துச் செல்கிறார் கவிஞர். ஆனால் இருளில் அவரைத் தொடர்ந்து யாரோ ஓசையின்றி வருவது தெரிகிறது

அந்த ஆளைத் தவிர்க்க முயல்கிறார் அவர். ஆனால் முடியவில்லை. அப்படித் தொடர்பவன் யாவன்? அவரது 'தன் முனைப்பு' என்ற ஆள் தான் அப்படித் தொடர்கிறான். அந்த ஆள் தன் பின் வருவதற்குக் கவிஞர் வெட்கப்படுகிறார்.

அந்தத் 'தன் முனைப்பு' என்பவன், பகட்டும் செருக்கும் உடையனாகத் தூள் பறக்க ஆணவத்தோடு நடந்து வருகிறான். கவிஞர் உரைக்கும் ஒவ்வொரு சொல்லையும் அவனும் உரக்க உடன் கத்துகிறான்.

தனது, வெட்கம் கெட்ட சின்ன ஆசாமி தான் அப்படிச் செய்கிறான்; கடவுளோடு ஒன்றுவதற்கு ஒரு பெரிய தடையாக இருக்கிறான் அவன்.

30. நாம் சந்திக்கும் இடத்திற்கு என் வழியில் நான் தனித்து வெளியில் வந்தேன். ஆனால் அமைதியான இருளில் என் பின் வரும் இவன் யார்?

அவன் உடன் வருவதை விலக்கி விடுதற்காக நான் அப்பால் ஒதுங்கினேன்; ஆனால் அவனை விட்டு என்னால் தப்ப முடியவில்லை.

அவன் தன் தடபுடலில் தரையில் தூள் கிளப்புகிறான். நான் உரைக்கும் ஒவ்வொரு சொல்லுக்கும் அவனும் அவனது உரத்த குரலை உடன் எழுப்புகிறான்.

என்னுடைய சொந்தச் சின்ன அகம் தான் அவன் என் பெருமானே, அவன் வெட்கம் இல்லாதவன். நான் அவனோடு நின் கதவருகே வருதற்கு வெட்கமுறுகிறேன்.

☐ ஆன்மிகப் பயிற்சியின் போது உயர் அகத்துக்கும் சிறிய அகத்துக்கும் பூசல் நடக்கிறது. உயரிய அகம் ஆன்மிக அனுபவத்தை நாடி நடக்கிறது; இலக்கு நோக்கிய அந்தப் பயணத்துக்குச் செருக்கும் பகட்டும் உடைய சிறிய அகம் முட்டுக் கட்டை போடுகிறது. கவிஞர் தன் சின்ன அகத்தை - சுயத்தை - புரிந்து கொள்கிறார். அது அவர்க்கு நாணுத் தருகிறது.

மனிதன் மெய்யாக ஆன்ம சுதந்திரம்-ஆன்மிக அனுபவம்-பெறுவதற்கு அகந்தையும் அதன் மூலச் சரக்குகளான யான் எனது என்பவும் நெஞ்சை விட்டு அகல வேண்டும் என்பது வேதாந்தம் காட்டும் வழி. நான் யார் என்ற ஆன்மிக ஆய்வு, நான் எனது என்ற இருளைத் தொலைக்கிறது. அந்த ஆன்மிக ஆய்வுக்குத் தியானம் ஆகிய உள்ளல் உறுதுணையாக இருக்கும்.

O

## முப்பத்தொன்று
## உலக சுகமும் ஆன்மிக சுகமும்

☐ பொருளையும் சுக சாதனங்களையும் மிகுதியாக ஈட்டுவதால் விடுதலை கிடைக்கிறது-இவ்வாறு நினைக்கிறது மனித மனம்.

ஆனால் தன் சுயமுனைப்பு, செருக்கு, உலக உடைமைகள் என்பவற்றால் தான் ஒரு கைதியாகி விடுவதை மனிதன் நினைப்பதில்லை. மற்றவர்களை விடத் தனது செல்வம் அதிகாரம் ஆகியவற்றால் விஞ்சி நிற்க நினைக்கிறான். அதன் பொருட்டுத் தன் கருவூலத்தை நிரப்புவதற்கும் பெருக்குவதற்கும் காலமெல்லாம் சிந்தனையற்றுச் செலவிடுகிறான். ஆனால் எல்லாப் பொருளும் இறைவனுக்குச் சொந்தம் என்பதை அவன் மறந்து விடுகிறான். தன் சொத்து சுதந்திரங்களைத் தான் துய்ப்பதற்கன்றி மற்றவர்களின் நலன்களுக்குப் பயன் படுத்தினால் தான் ஆன்மிக விடுதலை கிடைக்கிறது. இல்லையேல் உலகியல் உடைமைகள் என்பன தன்னைச் சுற்றித் தளைக்கும் சங்கிலிகளாகி விடுகின்றன.

தானே எழுப்பிய சிறையில் ஒருவன் கைதியாகிறான். பகலும் இரவும் பாடுபட்டுத் தங்குதடையற்ற சுக சுதந்திரத்தை எதிர்பார்க்கிறான்; ஆனால் தன்னைக் கட்டிப் போடும் கட்டினை அதனால் உருவாக்குகிறான். வேலை முடிந்ததும் பார்த்தால் வளையங்கள் முழுமையாகி உடைக்க முடியாதனவாக அவனை இறுகப் பிடித்துக் கொள்கின்றன.

அதிகாரம் சொத்து அகந்தை ஆகியவை மனிதான்மாவைப் பிணித்து விடுகின்றன; ஆகவே ஆன்ம விடுதலை கிட்டாது போகிறது. விடுதலை வேண்டுமென்னில் இத்தகைய பிணிப்புகளை உடைத்தெறிய வேண்டும். முடிவுடையது எதுவும் நம்முள் இருக்கும் முடிவிலாததைத் திருப்தி செய்து விடாது.

31. ''கைதியே, உன்னைக் கட்டிப் போட்டோர் யார்? சொல்லு''

''அங்ஙனம் செய்தார் என் தலைவர்.

உலகில் செல்வத்தாலும் அதிகாரத்தாலும் எல்லாரையும் விஞ்சி விடலாம் என்று நினைத்தேன். என் அரசற்கு உரிய பொருளை என் கருவூல அறையில் குவித்தேன். உறக்கம் என்னை ஆட்கொண்டு விடவே என் பெருமாற்குரிய படுக்கையில் தலை சாய்த்தேன். விழித்த பிற்பாடு நான் என் கருவூல அறையில் கைதியாக இருத்தல் கண்டேன்'' என்றான் கைதி.

''கைதி சொல், உடைக்க முடியாச் சங்கலியைச் செய்தவன் யாவன்?''

''நான் தான் இந்தச் சங்கிலியை அக்கறையுடன் அடித்து உருவாக்கினேன். தடையிலாச் சுதந்திரத்தை எனக்கு மட்டும் தந்துவிட்டு, வெல்ல முடியா என் திறனால் உலகைக் கைதியாகப் பிடித்து விடலாம் என்று நினைத்தேன். இங்ஙனம் இரவும் பகலும் பெருநெருப்பாலும் கொடிய முரட்டு அடிக

ளாலும் சங்கிலி செய்தேன். இறுதியாக அவ் வேலை நடந்தேறியதும் வளையங்கள் முழுமையாக-உடைக்க முடியாதபடி-ஆனதும் அது என்னைத் தன் பிடிக்குள் மாட்டி வைத்திருக்கிறது என்று கண்டேன்.''

☐ முழுக் குறியீட்டுப் பாடலாக அமைந்துள்ள இதில் கைதி என்பது தன் உலகியல் உடைமைகளில் சிக்கிய மானிடனைக் குறிக்கிறது. உடைக்க வியலாச் சங்கிலி என்பது விடமுடியாப் பற்றினையும், பெருநெருப்பு-கடுமையான அடிகள் என்பன அதிகாரம் பொருள் என்பவற்றுக்காக மானிடன் இயற்றும் அமைதியற்ற இடையறாக் கடும் உழைப்பினையும் குறிக்கின்றன.

O

## முப்பத்திரண்டு

## உலகத்துக் காதலும் கடவுட் காதலும்

☐ உண்மைக் காதல் தன்முனைப்பு அற்றது, ஆட்படுத்தும் தன்மையிலாதது, தன்னையே தந்துவிடும் தன்மை உடையது.

உலகிடைக் காணப் பெறும் காதலையும் ஆன்மிகக் காதலையும் ஒப்பிட்டுக் காண்கிறார் கவிஞர். உலகத்துக் காதல் ஆட்படுத்தும் இயல்பினது, தெய்விகக் காதலோ ஒருபோதும் ஆட்படுத்துதல் - உடைமைப் படுத்துதல்-செய்யாதது.

காதலில் முழுச் சுதந்திரம் தருகிறான் இறைவன். ஏனெனில் முழுமையான சுதந்திரம் இல்லாமல் காதல் செழிப்புறாது என்பது இறைவற்குத் தெரியும்.

தன்னிடம் இறைவன் அன்பு கொண்டிருப்பதாகவும் அந்த அன்பு சுதந்திர முள்ளது எனவும் கவிஞர் கூறுகிறார். உலகிற் காணும் காதலுடையார் போன்று இறைவன் ஆட்படுத்துவோனாக இல்லை. ஒருவன் தங்களை எங்கே மறந்து விடுவானோ என்று உற்றார் உறவினர் நெருங்கியோர் விரும்பியோர் சுற்றிச் சூழ்ந்து கொண்டு

அவன் தனித்திருக்க விட்டுவிட மாட்டார்கள் உலகக் காதலர் தத்தம் காதலைத் தத்தம் அன்பிற்குரியாரிடம் நினைவு படுத்திக் கொண்டு இருப்பர். ஆனால் இறைவனோ அவ்வாறின்றித் தன்னை முற்றாக இழந்தவனாக —தன் அன்பைக் காட்டி ஆதிக்கம் செய்ய நினைக்காதவனாக—இருக்கிறான்.

32. இவ் உலகில் என்னை நேசிப்போர், பாதுகாப்பாக என்னைப் பற்றி வைத்திருக்கப் பல்லாற்றானும் முயல்கின்றனர். ஆனால் அதற்கு மாறாக நீ என்னிடம் வைத்திருக்கும் அன்பு மிகுதியாக உளது; அத்துடன் நீஎனக்குச் சுதந்திரம் அளித் திருக்கிறாய்.

தங்களை நான் மறந்து விடுதல் கூடும் என்று அவர்கள் என்னைத் தனியே விடத் துணிவதில்லை, நாள்கள் ஒன்றன் பின் ஒன்றாகச் செல்கின்றன. ஆனால் உன்னை நான் காணப்பெற வில்லை.

என் வழிபாட்டில் சில போது நான் நின்னை அழையா விடினும், என் நெஞ்சில் நின்னை வைத்திரா விடினும் நினது அன்பு என் அன்புக்காக இன்னம் காத்திருக்கிறது.

☐ எதையும் எதிர்நோக்காது எவ்வெவற்றையும் தந்து விடுவது மெய்க்காதல் இயல்பு. இறைவனாம் மெய்க் காதலன் காத்திருக்கிறான். அவனது அன்புக்கு உரியார், தன்னைத் தொழ மறந்தாலும் நினைக்க மறந்தாலும் அதற்காக அவன் மறக்கத் துணிவதில்லை. தன்னை மறந்தாரைத் தான் மறக்க மாட்டாதவன் அவன்.

தன்னை நினைத்து மானுடன் மறுபடி தன்னிடம் வரக் கூடிய நன்னாளை எதிர்நோக்கி முடிவிலா அன்புடன் பொறுமையாகக் காத்திருக்கிறான் அவன். அந்தக் கடவுளாம் காதலன் அன்புருவானவன் கொடை வடிவமானவன்.

☐ எப்பொருளையும் மானிடனிடமிருந்து எதிர்நோக்கா இறைவன், மானிடன் தன்னை நினைப்பான், தன்பால்

வான் என்று ஈறிலாக் காதலால் காத்திருப்பான் பதாகத் தன் கண் தெரியாமையில் பாடும் மில்ட் ின் கருத்து இங்கு நோக்கத் தக்கது. 'அவனது ன்மையான நுகத்தடியைத் தாங்குவோர் மிகச் சிறந்த வகம் புரிவோராவர்... நின்று கொண்டு காத்திருத்தல் டும் செய்வோரும் அவன் பணி புரிவோரே" என்பது ர் வாக்கு. O

## முப்பத்து மூன்று
## கண்ணியமான திருடர்கள்

புதியவர்களான சிலர், கண்ணியமான தோற்றத் ன் வந்து அன்றிரவு தங்குதற்கு ஒரு மூலையில் இடம் மாறு கவிஞரிடம் வேண்டினர்.

மூயாது வந்தவர்களாகிய அந் நேர்மையற்றவர்கள், ஞர்க்கு அவரது வழிபாட்டில் உதவி செய்வதாகவும் றயருளில் தங்களுக்குக் கிடைக்கும் பங்கை மட்டும் ]வோடு பெற்றுக் கொள்வதாகவும் தெரிவிக்கிறார் அவரது செயல் ஒழுங்கில் குறுக்கிட மாட்டோம் வும் ஓர் ஓரத்தில் அமர்ந்து வாளா இருந்துவிடுவோம் வும் உறுதி புகல்கிறார்கள்.

ரால் இருட்டு வேளை வந்தது. இல்லத்திலுள்ளோர் ங்கிக் கொண்டிருந்தனர். அச் சமயம் அவர்கள் சயறைக்குள் புகுந்து தங்களது தீய கரங்களால் கிருக்கும் அனைத்துப் பொருளையும் திருடிச்சென்று கிறார்கள்.

பகற்பொழுதில் என் இல்லம் போந்தார்கள் அவர் கள், தங்களுக்குச் சிறிதளவு இடமே போதும் என் றார்கள்.

"உன் இறைவற்கு நீ ஆற்றும் வழிபாட்டில் நாங்கள் உனக்கு உதவியாக இருப்போம், அவனது தண்ணரு ளில் எங்கள் பங்கை மட்டும் பணிவுடன் பெற்றுக் கொள்வோம்" என்றார்கள். பின்பு ஒரு மூலையில்

இடம் கொண்டார்கள்; அடக்க ஒடுக்கமாக அமைதி யுடன் அமர்ந்தார்கள்.

ஆனால் இரவின் இருட்செறிவில் அவர்கள் வலிமை யும் கொந்தளிப்பும் உடையராய் என் பூசையறையுள் திடுமெனப்புகுவதும், இறைவன் திருமுன் படைத் திருந்தவற்றைத் தங்களின் தீய பேராசையுடன் தட்டிக் கொண்டு போவதும் நான் கண்ணுற்றேன்.

☐ இவ்வாறு தீய எண்ணங்கள், புலனுகர்ச்சி விருப்புகள் ஆகியன மானிட ஆன்மாவை அணுகி இடம் பிடித்து விடுகின்றன. காலப் போக்கில் அவை கடவுள் நினைப்பை விட்டு ஆன்மாவைக் கவர்ந்து கொண்டு போய்விடுகின்றன. மனிதன் கவனம் கடவுளை விட்டு நீங்கியதும் உலகியல் சுகங்களின் பக்கம் திரும்பிவிடு கிறது. பொருளாசை மனிதான்மாவிலுள்ள கடவுள் உணர்வை அகற்றிவிடுகிறது. அதனால் ஆன்மா தன்னைப்பறிகொடுத்து விடுகிறது.

☐ உலகியல் ஆசைகளும், மனிதான்மாவில் அவற்றின் ஆதிக்கமும் இந்தப் பாடலில் அழகிய உருவகமாகச் சித்திரிக்கப் பெற்றுள்ளன.

## முப்பத்து நான்கு
## அந்த அகமே தேவை

☐ தன் ஆன்மிக முன்னேற்றத்துக்குத் தடை செய்யும் சக்திகளோடு போராடும் கவிஞர் இறைவனிடம் உணர்ச்சி உருவாக வேண்டுகோள் ஒன்றை முன்வைக் கிறார்.

தன் அகந்தை பெருமை ஆரவாரப் பகட்டு என்பவற் றைத் துடைத்தெறிய இறைவனை வேண்டுகிறார் அவர். அவற்றை நீக்கி விட்டால் இறைமைக் காதலுக்கான இடையூறு நீங்கிவிடும். 'உலகியல் அகம்' என்ற பகுதி ஒடுங்கிவிட்டால் உடல்சார்ந்த உணர்வு இறையுணர்வில் மூழ்கிவிடும். அப்போது 'காதல் அகம்-பக்தி அகம்' என்ற பகுதி மட்டும் மிஞ்சி நிற்கும்.

தன் ஆன்மாவுக்கும், இறைவனாகிய பேரான்மாவுக்கும் இடையே வலுவான –உடைபடாத-அன்பு இணைப்புக்கு வகை செய்ய இறைவனை வேண்டுகிறார் கவிஞர், அது வாய்க்குமானால் எப்பாலும் எக்காலும் இறைமையை உணர்ந்து அன்பு செய்ய முடியும்.

அவ்வாறு செய்தற்கான அகம் 'ஆன்மிக அகம்' ஆகும், அது மட்டும் எஞ்சி இருக்குமாறு செய்ய வேண்டும். அது இறைவனது முன்னிலையை மறைக்காது; இருட்டடிப்புச் செய்யாது. அதற்கு மாறாக, தன்னைப் படைத்தோனிடம் அடியாரை அன்பாற் பிணைக்கிறது. அவனது விருப்பைத் தன் வாழ்வில் செயற்படுத்த வல்லமை தருகிறது. ஆகவே அவ் ஆன்மிக ஆகமே சிறப்பான பகுதி, மதிப்பான பகுதி. அந்தப் பகுதி மட்டும் நிற்குமாறு விடப்பட வேண்டும்.

34. நீயே எனக்கு எல்லாம் என்று எதனால் நான் சொல்லிக் கொள்கிறேனோ அச் சிறுபகுதி மட்டும் என்பால் எஞ்சி நிற்குமாக.

எதனால் நான் நின்னை ஒவ்வொரு பாங்கரும் உணருவேனோ ஒவ்வொன்றிலும் அணுகுவேனோ ஒவ்வொரு கணமும் அன்பைச் செலுத்துவேனோ, என் விருப்பில் அச் சிறுபகுதி மட்டும் எஞ்சி நிற்குமாக.

எதனால் நான் நின்னிடம் ஒளிக்க மாட்டேனோ அச் சிறுபகுதி மட்டும் என்பால் எஞ்சி நிற்குமாக. எதில் நான் நின் விருப்புக்குக் கட்டுப்பட்டிருப்பேனோ எதில் நின் நோக்கு என் வாழ்வில் கொண்டு செலுத்தப் படுமோ அதுவே நின் அன்புத்தளை; அது மட்டும் எஞ்சி நிற்குமாக.

☐ இறைவனே உண்மையான புரவலன், மானிட நெஞ்சின் வழிகாட்டி, தூய உணர்வுகளைத் தருபவன் என்பதும் அகத்தில் தீய பகுதி அழிக்கப்பட வேண்டும் ஆன்மிகப் பாகம் நிலைபெறுமாறு விடப்பட வேண்டும் என்பதும் இப் பாடலில் மிளிரும் கவிக் கருத்துக்களாக உள்ளன.

O

# முப்பத்தைந்து
# விடுதலைத் திருநாடு

❑ சுதந்திரமான ஒரு நாடு எப்படி இருக்கும்?

சுதந்திர நாட்டில் அச்சத்துக்கு இடமில்லை. அங்கே தலை எப்போதும் தன்மானத்தில் நிமிர்ந்து நிற்கும்.

அச்சமின்மை என்பது அறிவுடைமையால் வருவது; தன்மானம் என்பது அறவாழ்வு, நல்வாழ்வினால் வருவது. உண்மையான விடுதலை, முழுமையான அறிவும் அறமும் இணைந்த வாழ்வில் அமைவதாகும்.

சுதந்திர நாட்டில் வறுமை, சாதிப் பாகுபாடு, பால் வேறுபாடு என்பன அறிவுக்குத் தடையாக இரா. அங்குச் சாதி-கொள்கை-மொழி—வட்டாரம் போன்ற சிறுமைப் பகுப்புகள் மக்களைப் பிரித்து வைத்தல் இல்லை. மக்கள் யாவரும் அன்புடன் ஒன்றுபட்டிருப்பார்கள். வாய்மையே அங்கு வலம் வரும். வீறும் செயலார்வமும் பொங்கிப் பொலிய, துறைதோறும் முழுமையுற மக்கள் பாடுபடுவார்கள். கண்மூடி வழக்கங்கள், ஒவ்வா நம்பிக்கைகள் ஆங்கு இடம் பெற மாட்டா. பகுத்தறிவு என்ற ஆறு தங்குதடையின்றி யாங்கணும் பாய்ந்து நலம் சேர்க்கும். நினைப்பும் செயல்களும் இறையருள் வழிகாட்ட மேன் மேல் விரிவடைந்து செல்லும்.

இத் தகைய விடுதலைப் பேரின்பத்தில்-சுதந்திர சுவர்க்கத்தில்- தனது நாடு விழித் தெழ வேண்டும் என்று கவிஞர் இறையருளை வேண்டுகிறார்.

35. எங்கே மனம் அச்சமற்று இருக்கிறதோ,
தலை நிமிர்ந்துநிற்கிறதோ,
எங்கே அறிவு கட்டுதிட்டற்று
இருக்கிறதோ;
எங்கே உலகு குறுகிய குடிச்சுவர்களால்
துண்டு துண்டாக
உடைந்திருக்கவில்லையோ,
எங்கே சொற்கள் வாய்மையின்
ஆழத்திலிருந்து வருகின்றனவோ,

எங்கே அயரா உழைப்பு தன் கைகளை
நிறைசெம்மை நோக்கி
நீட்டுகின்றதோ

எங்கே அறிவெனும் தெண்ணீரோடை
செத்த பழக்கமெனும் வறண்ட
பாலை மணலில்
தன் ஓட்டத்தை இழந்து விடவில்லையோ

எங்கே மனம் எக்காலும் விரிந்து செலும்
எண்ணம் செயலில் நின்னால்
முன்னோக்கி நடாத்தப் படுகிறதோ

அந்த விடுதலை விண்ணகத்தில்
எந்தையே என் நாடு
வழித்தெழ அருளுக.

☐ தனது நாட்டின் இலட்சிய எதிர்காலத்தை நினைந்து உள்ளுணர்வோடு இறைவனை வேண்டுகிறார் கவிஞர். அஃது அனைவரின் உள்ளுணர்வையும் எழுப்ப வல்லதாக இருக்கிறது.

உண்மை, பகுத்தறிவு, மானிட நேயம், கடவுட் பற்று, கடின உழைப்பு என்ற அடிப்படைகளின் மேல் எழும் சுதந்திரத்தில் தனது நாடு பூத்து இன்பத் தேன் பெருக்கக் கவிஞர் அவாவுகிறார்.

☐ அரசியல் பொருளியல் சுதந்திரங்களுடன் அவற்றினும் மேலாம் ஆன்மிக சுதந்திரத்தை வலியுறுத்துகிறது, புகழ் பெற்ற இந்தப் பாட்டு. அச்சமும் குறுமனமும் தீய வேட்கைகளும் இல்லாத விடுதலையை ஆன்மிக சுதந்திரம் தான் தர முடியும்.

☐ தாகுரின் ஆன்மிக மனித நேயத்திற்கு இந்தப் பாட்டு சிறந்த சான்றாக உள்ளது.

O

# முப்பத்தாறு
# இறைவா, வலிமை தருவாய்!

☐ ஆன்மிக சாதனையில் மேன்மேலும் முன்னேறுகிற கவிஞர், இறைவனின் விருப்புக்குத் தன்னை முழுக்க ஒப்படைத்து விடுவதே மெய்யுணர்வு எய்தச் சிறந்த வழி என்று காண்கிறார். அதற்கு வலிமை வேண்டும், வலிமையே சாலச் சிறந்த கருவி என்று தெளிகிறார். அதனால் அவர் அதனைத் தனக்கு அளிக்குமாறு வேண்டுகிறார்.

துன்பங்கள் யாவற்றுக்கும் வேர்க் காரணம்-வறுமை; ஆன்மிக வறுமை. அதனைத் தன்னிடமிருந்து அடியோடு பிடுங்கி எறிய இறைவனின் துணை வேண்டுகிறார் அவர்.

வாழ்வின் இன்பதுன்பங்களை எளிதில் தாங்கிக் கொள்ளவும், பிறர்க்கு அன்புடன் பணி செய்யவும் வலிமை தேவை.

ஒருவரிடம் ஆன்மிக வலிமை இருக்குமாகில் அவர், ஆணவம் அடங்காமை செருக்கு என்பவற்றால் வன்மை பெற்றிருப்பாரைப் புகழ்ந்தேத்தத் தேவையில்லை. எளியோரிடம் எப்போதும் அன்பு ஆதரவோடு இருத்தல் இயலும். ஆகவே அவ் வலிமை-ஆன்மிக வலிமை-இன்றியமையாதது.

தன் மனத்தை உயர்வடையச் செய்யவும் தூயதாக்கவும் இறைவன் வலிமை தரவேண்டும் எனவும் அதனால் உலகின் புல்லிய உவகை-கவலை, வெற்றி-தோல்வி ஆகியவற்றால் ஊறுபடாமல் இருக்க முடியும் எனவும் இயம்புகிறார்.

அனைத்துக்கும் மேலாகத் தான் தனது வலிமை அனைத்தையும் இறைவனது திருவுளக் குறிப்பிற்கேற்ப அவனது திருமுன் படைத்து விடுதற்கான வலிமையைத் தனக்கு வழங்குமாறு இறைவனை அவர் வேண்டுகிறார். அது சிறப்பாகவும் பொருத்தமாகவும் உள்ளது.

36. இதுவே நின்பால் என் வேண்டுதல், பெரும!
எறிக, என் நெஞ்சின் வறுமையை அடியோடு தகர்த்தெறிக.

எனது இன்ப துன்பங்களை எளிதாகத் தாங்கிக் கொள்ளும் வலிமையை எனக்குத் தருக.

எனது அன்பு, பணியிற் பயனுறச் செய்யும் வலிமையை எனக்குத் தருக.

எளியோரை எம்மவர் அல்லர் என்று உதறவோ திமிரான வல்லாண்மைக்கு முன் மண்டியிடவோ ஒரு காலும் செய்யா வலிமையை எனக்குத் தருக.

என் மனத்தை அன்றாடப் புன் பொருள்கட்கு மேலே உயர்த்துதற்காம் வலிமை எனக்குத் தருக.

என் வலிமையை நின் விழைவுக்கேற்ப அன்புடன் ஒப்படைத்தற்காம் வலிமையை எனக்குத் தருக.

☐ இறைவனிடம் கவிஞர் வைத்துள்ள அசைக்க முடியாப் பற்றுறுதியை இப் பாட்டு தெரிவிக்கிறது.

O

## முப்பத்தேழு
## களைப்பும் வழியடைப்பும்

☐ நெடுவழி நடந்து போந்த களைப்பு அதிகமாகி விட்டது; உடல் தளர்ந்து விட்டது; உண்பொருள் முதலியன தீர்ந்து விட்டன; ஏதாவது ஒரு மூலையில் தனித்து முடங்கிவிட விரும்புகிறார் கவிஞர்.

ஆனால் இறைவனின் விருப்பம் வேறுவிதமாக உள்ளது. சுறுசுறுப்பாக, செயலுள்ளவராகக் கவிஞர் இயங்க வேண்டும் என்பது இறைவன் விருப்பம். புதிய வழிகளை அவர்க்கு அவன் திறந்து விடுகிறான். அவனது திருவுளக் கனிவுக்கு எல்லையே இல்லை.

கவிதைக்கான அகக் காட்சிகள் தன்னை விட்டு ஒழிந்து விட்டன, இசையும் பாட்டும் இனித் தன்னிடம் தோன்ற மாட்டா என்று கவிஞர் முடிவுக்கு வருகிறார். ஆனால் இறைவனோ அவர்க்குப் புதுக்காட்சிகள் புதிய அருளூக்கம் தந்து குறைநிரப்புகிறான். புதிய பணிகள் புதிய பாக்கள் அவரது உதடுகளினின்றும் ஓடிவருகின்றன.

புது வழிகள், புது நிலப்பரப்புகளைக் கண்ட ஒரு பயணி போலக் கவிஞர் புதுத் தெம்பு புது ஊக்கம் புது வீறு கொண்டவராகப் பயணத்தைத் தொடருகிறார்.

படைப்புச் செயலில் புதிய காட்சி வரிசைகள் அவர் முன்னே திறந்து வைக்கப்படுகின்றன. புதுப் பாட்டுக்கள், கவிதைகள் படைக்கத் தொடங்குகிறார்.

37. என் பயணம், என் ஆற்றலின் இறுதி வரம்பான அதன் அறுதிக்கு வந்துவிட்டது; என் முன்னுள்ள வழி அடைபட்டு விட்டது; உண்பொருள் யாவும் தீர்ந்தன; ஓசையற்ற இருளிடைப் புகல் அடைதற்காம் நேரம் வந்து விட்டது என்று எண்ணினேன்.

ஆனால் என்பால் நின் விருப்புறுதிக்கு முடிவில்லை எனக் காண்கின்றேன். பழஞ்சொற்கள் நாவினின்றும் மாண்டுவிடுங்கால் புதுச் சொற்கள் நெஞ்சினின்றும் பீறிட்டு வருகின்றன; பழந் தடங்கள் மறைந்துபோங் கால் புது நாடு அதன் விந்தைகளோடு காட்சி தரப் பெறுகின்றது.

☐ கவிஞர் தன்னை ஒரு பயணிக்கு ஒப்பாக வைத்து இடையில் ஏற்படும் வரட்சி, தடை, களைப்பு ஆகியவற்றால் மலைத்துச் சோர்ந்து போவதையும் இறைவன் கருணையில் அவை யாவும் பஞ்சாகப் பறப்பதையும் ஓவியமாக்கியுள்ளார்.

☐ பயணி என்ற படிமப் பாங்கு இதற்கு முன்னரும் வந்துள்ளது.

☐ வாழ்க்கைப் பயணத்தில் – உலகியல் வாழ்விலும் - அருளியல் வாழ்விலும் – எத்தகையோர்க்கும் இத்தகைய சலிப்பு, களைப்பு, மலைப்பு ஏற்படுவதுண்டு; அவை விலகுவதுண்டு. அங்ஙனமாகத் துன்பம் நேர்கையில் இந்தப் பாடலை வாசிக்க, ஒரு புதுத் தெம்பும் தெளிவும் திண்ணம்.

O

# முப்பத்தெட்டு
# நிலையான முழு இன்பம்

☐ பகலும் இரவுமாகத் தன்னை வதைத்துத் திகைக்க வைக்கும் சுயநல ஆசைகள் முழுக்கப் பொய்ம்மை யானவை, பயனற்றவை என்று கண்டுபிடிக்கிறார் கவிஞர்.

உண்மையில், உலகாயதக் கடும் ஆசைகள் அவரது உள் நெஞ்சின் ஆசையைப் பிரதிபலிக்கவில்லை. இந்தப் போலி ஆசைகளுக்குப் பின்புலத்தில் மேலாய ஆசை இருக்கிறது. தெய்வத் தலைவனாம் பெருமானுடன் ஒன்றாகி விடும் ஆசை அது.

இரவின் ஆழத்தில் வெளிச்சத்துக்கான விண்ணப்பம் இருப்பது போல, நெஞ்சின் ஆழத்தில் "நான் உன்னை விரும்புகிறேன். உன்னையே விரும்புகிறேன்" என்ற கூவுதல் ஒலிக்கிறது.

அவரது உள்ளம் கொண்ட கடவுளாகிய அன்புடை யார்க்கு எதிராக அவரது நெஞ்சம் கிளர்ச்சி செய்யினும் அது தற்காலிகச் சல சலப்பாகவே இருக்கும். புயலானது அமைதிக்கு மாறாகக் கிளர்ச்சி செய்வது போலக் காணப் படினும் அது கடிதில் அமைதி, சமாதானம் என்று அடங்கி முடிவது இயற்கையில் காணப்படுகிறது. அவ் வாறே கவிஞரின் இமைப் பொழுதுச் சந்தேகங்களும் அவநம்பிக்கைகளும் எதிர்ப்பு உணர்ச்சியும் கடிதில் போய்விடும், அவரது நெஞ்சார்ந்த கடவுளன்பு - கடவு ளிடத்து மட்டுமேயான அன்பு - கடவுளிடத்து அவரது முழு நம்பிக்கை - நின்று நிலவும்.

38 எனக்கு நீ வேண்டும், நீ தான் வேண்டும் - என் நெஞ்சம் இதனை முடிவிலாது நவிலுமாக. இரவு பகல் என்னைப் புறத்தே இழுக்கும் ஆசைகள் எல்லாம் பொய்யானவை, அடியோடு வெறுமை யானவை.

ஒளிக்கான வேண்டுதலைத் தன் கருமையுள் மறைத்து வைத்துள இரவு என, என் நனவின்மை யின் ஆழத்திலும் ஒலிக்கும் கதறல் "எனக்கு நீ வேண்டும், நீ தான் வேண்டும்" என்பதே.

அமைதியை எதிர்த்துத் தன் வலியெலாம் கொண்டு புயல் அடிக்கையிலும் அது தன் முடிவை அமைதியுள் நாடுமாப் போல் என் கிளர்ச்சி நின் நேயத்தை எதிர்த்து மோதும் போதும் அதன் கதறல்-''எனக்கு நீ வேண்டும் நீ தான் வேண்டும்'' என்பதுவே.

☐ மகிழ்ச்சி, நிறைவு என்பவற்றுக்கு மானிடன் ஆசைப் படுகிறான். இறைவன் தான் முடிவான நிறைவு, மிக உயர்ந்த இன்ப நிலை. ஆகவே எவ்வெப்போது மனிதன் மகிழ்ச்சியும் நிறைவும் தேடுகிறானோ அதற்காக அங்கு மிங்கும் அலைகையில் மெய்யாகக் கடவுளை நாடுகிறான். அவனது உள்ளார்ந்த தேட்டம் தெய்விக நாட்டமாக இருக்கிறது. நமது ஆன்மாவின் உள்ளார்ந்த தேவை, ஓடும் இயல்பினவாய சுகங்கள் அல்ல; என்றுமுள, நிறைவான மகிழ்ச்சியேயாகும். அதனை இறைவனிடம் மட்டுமே எய்த முடியும். ஆகவே கவிஞரின் இதயம் ''நான் நின்னை விரும்புகிறேன், நின்னை மட்டுமே விரும்புகிறேன்'' என்று கதறுகிறது.

☐ தெள்ளத் தெளிந்த திட்பமான உவமைகளால் கருத்தைக் கவர்கிறது இப் பாடல்.

O

## முப்பத்தொன்பது
## ஒரு பாட்டாக வருக

☐ நெஞ்சம் துன்பங்களாலும் தீப்பேறுகளாலும் வறண்டு கல்லாகி, பிறர்க்குக் காட்டும் அன்பும் பரிவும் அதனால் இல்லாதொழிந்த போது, கடவுள் தன் கருணையாம் மாரி பொழிய வேண்டும் அதனால் கவிஞரின்-மனிதரின் மனம் மறுபடி அன்புப் பரிவினால் செழிப்புறும்.

அழகும் பெருங்குணமும் கவிஞரை - ஒருவரை - விட்டு அகன்ற போது இறைவன் ஆங்கு அழகும் இனிமையும் இழைந்த தெய்விகப் பாடலுடன் வர வேண்டும். அதனால் அவரது நெஞ்சு மேன்மையுறும், மறுபடி புனிதம் பெறும்.

வாழ்வின் பரபரப்பு கொந்தளிப்பு ஆரவாரம் அக்கறை என்பன ஆன்மாவைத் திக்கு முக்காடச் செய்யுங்கால் இறைவன் தனது நீங்கா மௌனத்துடன் வர வேண்டும். ஆன்மாவுக்கு அமைதியும் ஆறுதலும் தர வேண்டும்.

அச்சம் கொண்ட விலங்கு சுருண்டு கிடப்பது போல் கவிஞரது நெஞ்சம் ஆன்ம வலுவிழந்து ஒடுங்கும் பொழுது இறைவன் அவரிடம் பெருமிதமும் காட்சி நலமும் உடையனாக வரவேண்டும்; ஊக்கமும் உள்ளுயர்வும் தர வேண்டும்; எப்போதும் துணிவுடன் இருக்கக் கற்பிக்க வேண்டும்.

அனைத்துக்கும் மேலாகத் தன்னல ஆசைகளால் கண்கள் குருடாகி ஏமாந்து பிழைவழிச் செல்லுங்கால், தன் அன்பர்களை விழிப்புடன் காக்கும் தெய்விகப் புரவலனான பெருமைசால் இறைவன் கவிஞரிடம் இடிமின்னலுடன் வரவேண்டும். அவரது ஆன்மாவை அறிவும் தெளிவும் துலங்கி மிளிரச் செய்ய வேண்டும்; நெஞ்சின் கேடுகள் பொய்ம்மை என்பன யாவற்றையும் போக்க வேண்டும். இவ்வாறு அறவழியில், அவரை மீட்டுக் கொணர வேண்டும்.

39. நெஞ்சம் கடுமையாகக் காய்ந்து விட்டபோது என் மேல் கருணை மழைத் தூறலோடு வருக.

வாழ்வில் அருள்நயம் இல்லா தொழிந்த போது ஒரு பாடலின் வெடிப்போடு வருக.

கொந்தளிக்கும் வேலை தன் இரைச்சலால் அப்பாற் செல்லாவாறு என்னைப் புறம் சூழ அடைத்துக் கொண்ட போது, அமைதிப் பெரும, நின் அமைதியோடும் இளைப்பாறலோடும் என்பால் வருக.

என் இரக்கும் நெஞ்சம் கூனி ஒரு மூலையில் அடைபட்டுக் குந்தியிருக்கையில், என் அரசே, கதவை அடித்துத் திறந்து, ஓர் அரசற்கான முறைமைகளோடு வருக.

ஏமாற்றத்தாலும் தூசியாலும் ஆசையானது என் மனத்தைக் குருடாக்கும் போது, தூயனே, விழித்

திருப்போனே, நின் மின்னலோடும் இடியோடும் வருக..

□ தெய்விக வழிகாட்டுதலையும் பரிவையும் வேண்டு கிறது இந்தப் பாடல்.

O

## நாற்பது
## வெப்பம் தாங்க முடியவில்லை

□ இறைவன் தனக்கு அருள் தருவதை நிறுத்தி நெடுங் காலம் ஆகி விட்டது எனவும் அதனால் அன்பின் வரட்சி யும் ஆன்மிக மரணமும் தன்னைத் துன்புறுத்துவதாகவும் கவிஞர் கவல்கிறார். இறைநேயமும் பற்றுமாகிய ஊற்று தன் நெஞ்சில் அடியோடு வற்றிவிட்டது என்று அவர் வருந்துகிறார்.

இறைவன் அவரைப் புறக்கணிப்பதாகத் தெரிகிறது. தன்னைத் தண்டிக்க வானில் ஒரு கோடியிலிருந்து இன் னொரு கோடி வரை மின்னல் அடிக்கவும் கடும்புயல் வீசவும் இறைவன் ஏவலாம். ஆனால் அவனது புறக் கணிப்பு கூர்மையாகக் குத்துவதாகவும் கொடுமையான தாகவும் இருப்பதோடு தன் நெஞ்சில் அளவிறந்த நம் பிக்கையிழப்பால் நெருப்பாகச் சுடவும் செய்கிறது என் கிறார் கவிஞர்.

தெய்விகத் தண்டனைக்குக் கவிஞர் அஞ்சவில்லை. கோபங் கொண்ட தந்தை போல் இறைவன் தண்டனை அளிக்கலாம். ஆனால் தந்தையால் தண்டிக்கப்படும் குழந்தையின்பால் தன் கண்களில் நீர் துளிக்கப் பரிவுடன் தலை குனியும் தாய் போல அவன் அருள் பொழிவான் என்பதில் அவர்க்கு உறுதி உண்டு.

40. இறைவா, என் உணந்த நெஞ்சில் மழையிலாது பலப்பல நாள்கள் ஒழிந்தன. வெண்மஞ்சின் மிக மென் படலமும் இன்றி, தொலைவாக ஒரு நாளில் குளிர்சாரல் விழும் என்பதன் அருகலான அடை

யாளமும் இன்றி அடிவானம் அப்படியே அம்மணம் போல் இருக்கிறது.

நினக்கு விருப்பு இது என்றால், சாவின் இருளோடு சீறும் புயலையும் அனுப்பு; வெட்டும் மின்னல்களால் வானத்தின் ஓர் புறத்திருந்து இன்னோர் புறம் வரை திகைப்படையச் செய்.

ஆனால் எம்பெருமானே, நிலவும் இந்த மௌன அமைதியும் கூர்மையும் கொண்ட வெம்மை கொடியது; மோசமான தளர்ச்சியால் எரிப்பது; அதனை மீளப் பெற்றுக் கொள்வாயாக.

தந்தை வெகுண்டிருக்கும் நாளில் தாயின் கண்ணீர்ப் பார்வை போலக் கருணை முகிலானது கீழ்நோக்கிக் கவியுமாக.

□ இறைவனிடம் இரண்டு பகுதியான இயல்புகள் உண்டு. ஒன்று தந்தையைப் போல் கோபம் கொள்வது. இன்னொன்று தாய் போல் இரக்கம் கொள்வது. இந்த இரு கூறுகளும் இணைந்த தத்துவமே இறைமை. இறைவன் நியாயமானவன்; அன்பும் உடையவன்.

□ கருத்து வளம் கொண்ட குறிப்பு உவமை வகையால் இப்பாடலின் முடிவு அழகுற அமைந்துளது.

□ வானில் மேகமின்மை, இனி வருநாளில் மழை பொழியும் என்பதற்கான அறிகுறி இன்மை என்பன குறியீட்டுப் பொருண்மை கொண்டுள்ளன.

O

## நாற்பத்தொன்று
## இளம் பூக்காரி

□ அந்தப் பெண் தன் காதலனுக்காகக் கணிசமான நெடுங்காலம் காத்துக் கொண்டிருக்கிறாள். வழிச் செல்வோர் சென்று கொண்டிருக்க அவன் மட்டும் இருளில் மறைந்தவாறு அவள்முன் வாராதிருக்கிறான். மிகவும் களைப்பு உண்டாக நாழிகையெல்லாம் அவள்

தன் தலைவன் வரும் வரும் என்று எதிர்பார்த்துக் கழித்து விட்டாள். தன் தலைவன் பொருட்டு அவள் கொண்டு வந்த படையற் பூக்களை வழிப்போக்கர் ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டனர். அவளது கூடை பெரும்பாலும் வறிதாகி விட்டது.

காலம் செல்கிறது. அவளது கண்கள் களைத்து மாலைப் பொழுதின் உறக்கக் கலக்கம் கொண்டன. தத்தம் இல்லம் திரும்புவோர் அவளை இழச்சியுடன் பார்க்கின்றனர். சிரிக்கின்றனர். அவள் நாணம் மீக் கூர்கிறாள். ஏழைப் பிச்சைக் காரிபோல் அவள் உட்கார்ந் திருக்கிறாள். எதற்காக அவள் அப்படி இருக்கிறாள் என்று கேட்கிறார்கள். அவள் வாய்திறக்க வில்லை; பதில் எதுவும் சொல்ல வில்லை.

தனது இரகசியத்தைக் கருத்தோடும் கருவத்தோடும் தன்னிடமே வைத்திருக்கிறாள். தன் தெய்விகத் தலைவற் காகக் காத்திருப்பதையோ அவன் வரும் என்ற உறுதி மொழி பெற்றிருப்பதையோ அவளால் விளம்ப முடியாது. அவளை வெட்கம் பிடுங்கித் தின்கிறது; தன்னிடம் உள்ள வறுமையை அன்றி வேறு வரதட்சிணை தர முடியாது என்றிருப்பதே அதன் காரணம்.

ஏழைப் பூக்கார இளம்பெண் பேசாமல் புல்லில் உட் கார்ந்து வானைப் பார்த்தவாறு இருக்கிறாள். தலைவன் வருகைதரும் இன்ப நேரத்தைக் கற்பனை செய்கிறாள். வீறுடைய தேரில் பொற்கொடிகள் படபடக்க சூழ் ஒளி வானம் எங்கும் போர்க்க, அவன் வருகிறான். கீழே இறங்குகிறான். முன்பு அவளைக் கேலி செய்தோர் வியப் படைய, அவன் அவளைத் தன் தேரில் தனக்கு அருகில் அமர வைத்துக் கொள்கிறான். அதனால் அப் பூக்காரப் பேதை மரத்தை ஒட்டியிருக்கும் பூங்கொடி காற்றில் நடுங்குவது போல நாணத்தாலும் பெருமையாலும் நடுங்குகிறாள்.

காலம் நகர்கிறது. தெய்வக் காதலன் வரவில்லை. ஆழித் தேரின் வருகை ஒலி தானும் காதில் விழவில்லை. உவகை மிக்க-வண்ண வண்ண ஊர்வலங்கள் ஆரவாரத்தோடு பளபளப்பாகச் செல்கின்றன. ஆனால் அவன் அவர்

களுக்குப் பின் இருளில் மறைந்து கொண்டிருக்கிறான். பாவம், அந்தக் காதற் பேதை, தெய்வத் தலைவனுக்காக நெஞ்சம் நிரம்பிய ஏக்கத்துடன் காத்துக் கொண்டு அழுதவாறு இருக்கிறாள்.

41. அவர்கள் எல்லாருக்கும் பின்னால் நிழல்களில் உன்னை மறைத்துக் கொண்டு, என் அன்பனே, எங்கே நீ நிற்கிறாய்? அவர்கள் உன்னை ஒரு பொருட்டாகக் கொள்ளவில்லை; உன்னைத் தள்ளி விட்டுப் புழுதி மயமான சாலையில் கடந்து போகின்றனர். சோர்ந்த மணிக்கூறுகளில் இங்கே என் படையல்களை நினக்காகப் பரப்பி வைத்துக் காத்திருக்கிறேன். வருகின்ற வழிச் செல்வோர் என் மலர்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கொள்கின்றனர். என் கூடை பெரிதும் வறிதாகி விட்டது.

காலை கழிந்து நண்பகல் வந்தது. மாலை மயக்கில் என் கண்கள் துயிற் கலக்கத்தில் இருக்கின்றன. வீடுகட்கு ஏகுவோர் என்னைப் பார்க்கின்றனர். நகைக்கின்றனர், நாணம் அடைகிறேன். பிச்சைக் காரி போல் நான் ஆடையை இழுத்து முகத்தைப் பொத்தி உட்கார்ந்துள்ளேன். எனக்கு என்ன வேண்டும் என அவர்கள் கேட்கையில் என் விழிகளைத் தாழ்த்துகிறேன், விடைதரவில்லை.

உனக்காகக் காத்திருக்கிறேன், நீ வருவதாக வாக்குத் தந்திருக்கிறாய் என்று நான், உண்மையில், எப்படிக் கூற முடியும்? இவ் வறுமையை நான் வரதட்சிணைப் பொருளாக வைத்திருக்கிறேன் என்ற வெட்கக் கேட்டை எப்படிக் கூற முடியும்? ஆ! இந்தப் பெருமையை என் நெஞ்சில் இரகசியமாக அணைத்து வைத்துள்ளேன்.

புல்மேல் அமர்ந்து வானைப் பார்க்கிறேன். நின் வருகையைக் கனவு காண்கிறேன். திடீர்ப் பேரொளி- விளக்குகள் வெளிச்சம் பொங்க - நினது தேரில் பொற்கொடிகள் மின்னிப் பொலிய நின் இருக்கையினின்றும் இறங்கி வந்து புழுதியை விட்டு என்னை

மேலே உயர்த்தி-வெட்கத்தாலும் பெருமிதத்தாலும் வேனிற் காற்றிடைக் கொடிபோல் நடுங்கும் இந்தப் பிச்சைக்காரப் பெண்ணை நின் அருகே அமர்த்தி வைத்த போது சாலையோரம் இருப்போர் அங் காந்த வாயோடு நின்று கொண்டிருக்கின்றனர்.

ஆனால் காலம் நழுவிக் கொண்டு செல்கிறது. நின் தேர்க் கால்களின் ஓசை இன்னும் கேட்கவில்லை. கூச்சல் ஆரவாரம் புகழின் பளபளப்புகளோடு ஊர்வலங்கள் பல செல்கின்றன. நீ மட்டும் எல்லா ருக்கும் பின்னால் நிழலில் ஓசைப்படாமல் நிற்கிறாய், நான் மட்டும் காத்திருந்து அழுவதும் வீண் ஆசை யால் நெஞ்சம் தேய்வதுமாக இருக்கிறேன்.

☐ கடவுள் காதலனாக இருக்க கவிஞர் காதல் மிக்க ஒரு பூக்காரப் பெண்ணாக இப் பாடலில் அமைந்துள்ளனர்.

வாழ்வின் புழுதி வீதியில் மாந்தர் போக்கு வரவு செய் கின்றனர். உலகியல் வினைகளிலும் உலக உறவுகளிலும் மானிடர் ஈடுபட்டு உழலுங்காலத்தில் தெய்விகக் காட்சி கிடைக்காது.

தெய்விகத்தை நாடுவோரை மக்கள் நகைப்பது காணக் கூடியதே. ஆனால் தெய்வக் காதலுடையார்தம் பற்றுறுதி எதனாலும் குறைவதில்லை; அழிவதில்லை.

☐ அழகிய இந்தத் தன்னுணர்ச்சிப் பாடல், இறைமை யொடு ஐக்கியம் ஆகத் தவிக்கும் கவிஞரின் ஆழ்ந்த ஏக்கத்தைச் சொல்லோவியமாகக் காட்டுகிறது. உலகி யற் காட்சிப் பேரணிகள், அழகிய ஊர்கோல வைபவங் களில் அவர் கடவுளைக் காணவில்லை, அசைக்க முடியாப் பற்றுறுதியோடு இறைவனை எதிர்நோக்கிப் போற்றி செய்கிறார்.

☐ பாடல் முழுதும் குறியீட்டு ஆட்சி, காணுமாறு உள்ளது. பிச்சைக்காரி என்பது கவிஞரின் பக்திப் பணிவு, வறுமை என்பவற்றைக் குறியீடாகக் காட்டு கிறது. பூ என்பது கீதாஞ்சலியில் காதலின் சின்ன மாகப் பயின்றுவரும் ஒன்றாகும்.

0

# நாற்பத்திரண்டு
# ஓய்வும் அமைதியும்

ப் தான் தன் தலைவனுடன் அதற்கு முன் அறிந்திரா இடம் ஒன்றற்கு விரைவில் படகில் பயணம் போகலாம் என்ற தெய்விக மென்மொழி ஒன்று, அவரது வாழ்க்கையின் முற்கூறில், காதில் விழுந்தது. அங்ஙனம் அவர்கள் இருவரும் செல்லும் இரகசியம் உலகில் வேறெந்த உயிர்க்கும் தெரிந்திருக்க முடியாது,

நிலைபேறாகிய எல்லையிலாக் கடலில் அவர் இறைவனுடன் பயணம் செல்கையில் அவர் வழிபாட்டுப் பாடல்களை அவனது திருவடிகளில் மகிழ்வுடன் படையல் செய்வார்; இறைவன் அதனைப் புன்முறுவலுடன் இரசித்தவாறு இருப்பான். அவனது அருள் தூண்டலால் கவிஞர்க்குப் பாக்கள், சொற்களாகிய தளைகளை உடைத்துக் கொண்டு செல்லும்; இனிய இசையின் உயர்ந்த சிகரங்களுக்குத் தாவும்.

அவ்வாறு உடன்போக அவனது வருகையை எதிர் பார்த்துக் கவிஞர் பொறுமையிழந்தவராகக் காத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் அவனோ வரவில்லை. எவ்வளவு காலம் அவர் இவ்வுலகில் நொந்து கிடப்பார்? இறைமைக் கலப்புக்கு அவரது ஆன்மா தவிக்கிறது.

கடற்கரையில் அந்திப் பொழுது வந்து விட்டது. மங்கலான ஒளியில் கடற்பறவைகள் தங்கள் கூடுகளுக்குப் பறந்து செல்கின்றன. கவிஞர்க்கும் அது வாழ்க்கையில் மாலை நேரம். தன்னைப் படைத்தோனைத் தலைப் பெய்யவும் ஓய்வு கொள்ளவும் தன் ஓயாச் செயல்பாடுகளிலிருந்து முடிவு பெறவும் அவர் விரும்புகிறார்.

இந்த உலகின் கட்டிலிருந்து விடுபட விரும்புகிறார் அவர். ஆனால் அந்த விடுதலையை அளிக்கவல்ல அவருடைய தெய்விகக் கேள்வன் வரவில்லை; இன்னும் வரவில்லை; அவன் வரவேண்டும்.

42. நாம் ஒரு படகில் செல்வோம்; நீயும் நானும் மட்டும் தான்; எந்த நாட்டுக்கும் எந்த அறுதிக்கும்

என்றில்லாத யாத்திரையில் நாம் செல்வோம் என்று காதோடு காதாக அதிகாலையில் என்னிடம் கூறக் கேட்டேன்.

கரையற்ற அந்தப் பெருங்கடலில் வாய் பேசாது நீ புன்னகை மலர்ந்திருக்க, அலைபோற் சுதந்திரமாக என் பாட்டுக்கள் சொற்களின் கட்டுக்களினின்றும் விடுபட்டு இசைப் பண்களாக விம்மிப் பூரிக்கும்.

அதற்கு நேரம் இன்னும் வரவில்லையா? செயற்பால வேலைகள் இன்னும் இருக்கின்றவா? பார்! மாலைப் பொழுது கடற்கரைக்கு வந்து விட்டது. மங்கும் ஒளியில் கடற்பறவைகள் தத்தம் கூடுகளுக்குப் பறந்து செல்கின்றன.

சங்கிலி எப்போது விலக்கப்படும், மறை கதிரின் கடைசி மினுங்கொளி போல் படகு இருளில் எப்போது மறையும் என்பது யாருக்குத் தெரியும்?

☐ என்றுமுள இறைமை தரும் அமைதிக்கும் இளைப் பாறலுக்கும் மானிட ஆன்மா ஏக்கமுறுவதை இந்த இசைப்பா வெளியிடுகிறது.

O

## நாற்பத்து மூன்று
## ஆன்மிக உதயம்

☐ இறைவன் எங்கும் இருக்கிறான். இதனை மெய்யடியார்களும் உணர்ந்து கொள்ளுதல் அரிது. இருப்பினும் அவன் எங்கும் எக்காலத்தும் திகழ்கிறான்.

அவன் வருவதனை நாம் அறியாதிருக்கையில் நம் நெஞ்சினுட் புகுகிறான். எல்லாவற்றுக்கும் தலைவன்—பெருமான்-அரசன் அவன். மானிடர் வாழ்விலும் நெஞ்சிலும் அவன் வருதற்கு எந்த அழைப்பும் அவனுக்குத் தேவையில்லை. வேறு வகையாகச் சொன்னால், ஆன்மிக உண்மை ஒருவர்க்கு எதிர்பாராது உதிக்கும். ஆகலின் விழிப்புடன் இருத்தல் நன்மை பயக்கும்.

கழியும் பலவாய தம் கணப் பொழுதுகளில் வாழ்வின் அன்றாடச் செய்கைகளில் கவிஞர் ஈடுபட்டிருக்கையில் இறைவன் அவற்றில் தண்ணருள் செலுத்தியிருக்கிறான். தான் வருகை தந்ததற்கும் உதவியதற்கும் தடயம் எதையும் அவன் விட்டுச் செல்லவில்லை. அவனது அருள் நேயக் குறிப்பு கவிஞருடன் எப்போதும் இருக்கிறது, அது அவர் அறியாமலே அவரது இன்ப துன்பங்களில் கலந்து இருக்கிறது.

மண்ணில் விளையாடும் குழந்தை ஆடும் இடத்திலும் அவன் இருக்கிறான். சிறிய விளையாட்டை வெறுத்து ஒதுக்கி அவன் விலகுவது கிடையாது. வாழ்வுப் புழுதியில் கவிஞர் விளையாடிய காலத்தும் இறைவன் அவரை விட்டு அகன்றது கிடையாது.

இறைவன் அருளாளன்; யாவும் வல்லவன், கவிஞரின் உலகியல் செய்கைகளுக்காக அவன் அவரைப் புறக்கணித்துப் போனது கிடையாது. ஆடிடங்களில் கேட்கவாகும் அவனது காலடி ஓசை, வானகங்களின் விண்மீனிலிருந்து விண்மீனுக்கு எதிரொலி செய்வது கேட்கிறது.

ஆன்மிக உதயம் எப்போதும் ஏற்படலாம்; ஆயத்தமாக இருக்க வேண்டும். எங்கும் இருக்கிறான் இறைவன்; உணர்வது ஆக்கம் தரும்.

43. நின் வருகைக்காக என்னை நான் ஆயத்தப் படுத்திக் கொள்ளாத நாள். எனக்குத் தெரியாமல் என் அரசே, பொதுக் கும்பலில் ஒருவன் போன்று என் நெஞ்சினுட் புகுந்தாய். நிலைபேறாகிய முத்திரையை அதில் பதித்தாய். என் வாழ்வின் ஓடும் இமைப் பொழுதுகள் பலவற்றில் இவ்வாறு செய்தாய்.

    இன்று தற்செயலாக அவற்றின் மேல் வெளிச்சம் காட்ட, நின் கையொப்பம் இருத்தல் கண்டேன். மறந்துபோன அந்த நாள்களின் இன்ப துன்ப நினைப்புகளோடு புழுதியில் அவை சிதறிக் கிடப்பது கண்டேன்.

    சிறுபிள்ளையாக நான் புழுதியில் விளையாடியதை நீ வெறுத்துச் சென்றதில்லை. என் விளையாட்டு

அறையில் கேட்ட அதே காலடி ஓசையே விண் மீன்கள் ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு எதிரொலி செய்கிறது.

☐ எத் தருணத்தும் இறைவனின் ஆன்மிகத் திருக் காட்சி கிடைக்கக் கூடும் என எப்போதும் நாம் ஆயத் தமாக இருக்க வேண்டும். "என் வளர்ச்சிப் போக்கில் நான் பூரண உண்மையின்-கடவுளின்-இலேசான தோற் றங்களைக் கண்டுள்ளேன். நாள்தொறும் அவன் ஒருவனே உண்மை, மற்றைய எல்லாம் உண்மையல்லாதன என்ற முடிவு என்னுள் வளர்ந்து வருகிறது" என்றனர் காந்தி யண்ணல்.

O

## நாற்பத்துநான்கு
## வாசனை வருகிறது

☐ கவிஞராகிய அன்பு நெஞ்சினர், தன் அன்புத் தலை வனின் வருகைக்காக வழி மேல் விழி வைத்து உவகை கூரக் காத்திருக்கிறார். பகலைத் தொடர்கிறது இரவு; வெயிலைத் தொடர்கிறது மழை; ஆனால் அன்புக் குரியவர் ஆர்வ மிகக் காத்திருக்கிறார். ஏனெனில் தலைவன் எந்த நேரத்திலும் வந்துவிடக் கூடும்.

மழை, ஒளி, தென்றல் என்ற வேறுபட்ட தூதர்கள் எல்லாரும் தெய்வத் தலைவனிடமிருந்து வருகிறார்கள். அவனது வாழ்த்துக்களையும் அவனது வருகை பற்றிய உறுதியையும் உரைக்கிறார்கள். அன்புத் தலைவியின் நெஞ்சம் பேருவகையால் நிறைகிறது.

விடியல் முதல் இருண்மாலை வரை வாயிற்படிகளைப் பார்த்தவாறு இருக்கிறார் அவர். தெய்வத் தலைவனின் சந்திப்பு, மகிழ்ச்சியான எந்த நொடிப்பொழுதிலும் திடீரென நடத்தல் கூடும். அந்த நேரத்தை எதிர்பார்க் கிறார், பாடுகிறார். உவகையில் புன்னகை செய்கிறார். அப்போது காற்றில் நறுமணம் வருகிறது. தெய்வக்

காதலன் வருவதன் முன்னறிவிப்பாக அந்த நறுமணம் வந்து நிரம்புகிறது.

நம்பிக்கை மிக்கு இருக்கிறார் கவிஞர். இறைமையை துய்க்கப் போகிறோம் என்பதில் அவர்க்கு ஐயம் இல்லை.

ஆன்மிக விழிப்பு உண்டாகும் தருணத்தில், எல்லாப் பொருளும் - சின்னஞ் சிறு கூறும் - இன்பம் நிரம்பப் பெறுகின்றன.

44. இவ்வாறு காத்திருப்பது, ஒளியை நிழல் தொடர்வதும் கோடையை மழை தொடர்வதும் நிகழும் வழிப் புறத்தைப் பார்த்திருப்பது - இவை எனக்கு இன்பம்.

அறிந்திரா விண்புலத்திலிருந்து செய்திகளோடு தூதுவர் வந்தனர்; வாழ்த்தினர் என்னை; சாலையில் விரைந்து ஏகினர்.

புலரி முதல் அந்தி வரை இங்கே வாயிலில் அமர்ந்திருக்கிறேன். அவனைக் காணும் மகிழ்ச்சிப் பொழுது திடீர் என வரும் என நான் அறிவேன்.

இதற்கிடையில் நான் தனியே புன்னகைக்கிறேன், பாடுகிறேன், இஃது இவ்வாறாக நம்பிக்கையின் நறுமணம் காற்றிடை நிரம்புகிறது.

O

# நாற்பத்தைந்து
# அவன் வருகிறான்

இறைவன் நம்மிடம் பலவகைகளில் பல வடிவுகளில் வருகிறான். நாம் விழிப்புடன் இருப்பது நலம் தரும். ஆனால் அவன் அரவமின்றி அடியிட்டு வருவதை நாம் கேட்கத் தவறிவிடுகிறோம்.

கணந்தோறும் யுகந்தோறும் பகலும் இரவும் அவன் வருகிறான். கவிஞர் எந்த மனநிலையில் எந்தச் சமயம் பாடினாலும் அவற்றுக்கு இறைவனே அருட்சக்தி ஊட்டி

னான். அவரது பாடல்கள் யாவும் இறைமைச் சார்பை, அருள்வலிமையைச் சாற்றுகின்றன. சித்திரைத் திங்களின் இளவேனில் வாசனை வடிவிலும் இருண்ட ஆடித் திங்களின் இடிமேகங்கள் வடிவிலும் அவன் வருகிறான்.

கவிஞரிடம் துயர் மேவுகையில் அவன் வருகிறான். அவனது வருகை அவரது துயர்ச் சுமையைக் குறைக் கிறது. அவர்க்கு மகிழ்ச்சியை உண்டாக்குகிறது.

45. அரவமிலாது வரும் அவன் காலடிகளை நீங்கள் கேட்டதில்லையா? அவன் வருகிறான் வருகிறான் எக்காலத்தும் வருகிறான்.

ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு காலமும் ஒவ்வொரு பகலும் ஒவ்வோர் இரவும் அவன் வருகிறான் வருகிறான் எக்காலத்தும் வருகிறான்.

பலப்பல மனநிலையில் பலப்பல பாடல்கள் நான் பாடியுள்ளேன். ஆயின் அவற்றின் பண்கள் யாவும் சாற்றுவது: அவன் வருகிறான் வருகிறான் எக் காலத்தும் வருகிறான்.

வெயில் திகழ் சித்திரையின் மணம் கமழ் நாள்களில் காட்டு வழியில் அவன் வருகிறான் வருகிறான் எக்காலத்தும் வருகிறான்.

மழை சூழ் ஆடியின் மந்தமான இரவுகளில் இடி முழங்கு மேகத் தேரில் அவன் வருகிறான் வருகிறான் எக்காலத்தும் வருகிறான்.

துயரைத் தொடர்ந்த துயரக் காலை என் நெஞ்சில் படிவன அவனது காலடிகள்; என் மகிழ்ச்சியை ஒளிரச் செய்வது அவற்றின் பொன்போற் பரிசம்.

☐ இயற்கை யாவற்றிலும், மானிட வாழ்விலும் இறைவன் நிலவுகிறான் என்ற கருத்து இதில் அமைத் துள்ளது.

"அவன் வருகிறான் வருகிறான்" என்ற அடுக்கு இனிமை யோடு கருத்து வலிமையும் உண்டாக்குகிறது.

- "கடவுள் கடவுள் மட்டுமே
எங்கெங்கும்
உள்ளும் புறமும்
சேய்மையிலும் அண்மையிலும்!
ஆகா, உவகை!
மெய் சிலிர்க்கும் அமைதி!
அலைபாயும் ஆனந்தம்!
எத்தகைய ஒரு சுவர்க்கம்!"

என்று தம் சுயானுபவத்திற் பாடும் இராம தீர்த்தர் வாக்கு இங்கு வைத்து உணரத் தக்கது.

O

## நாற்பத்தாறு
## உணர்ச்சிப் பொழுதுகள்

- அன்புத் தலைவி, கடவுளின் வருகைக்காகப் பல காலங்கள் விழிப்போடும் ஆர்வத்தோடும் காத்திருந்தாள். தற்போது இறைவன் தன்னைச் சந்திக்க வந்து கொண்டிருப்பதாக உணர்கிறாள். கதிரவன், விண் மீன்கள், மற்றும் இயற்கைப் பொருள்கள் யாவினும் இறைவன் உறைகிறான். கவிஞராம் தலைவியின் இதயத் திலும் வீற்றிருக்கிறான்.

பற்பல காலை மாலைப் பொழுதுகளில் அவன் வரும் காலடி ஓசைகளை அவள் கேட்டிருக்கிறாள். அவன் வருகிறான் என்ற மறைவுண்மைச் செய்தியோடு தெய் விகத் தூதர்கள் வருகிறார்கள்.

இறைவன் வருவது மிக உடனடியாக இருக்கிறது என்பதால் உண்டாகும் உவகையைக் காட்டும் ஒரு தனியான சிலிர்ப்பு அவளுக்கு உண்டாகிறது. இத்தகைய அனுபூதி உணர்ச்சிப் பொழுதுகளில் உலகியல் நடவடிக்கைகளை எல்லாம் முடித்துக் கொண்டுவிட வேண்டும்; தேவனை வரவேற்க ஆயத்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்று அவள் மனம் கொள்கிறாள்.

பலனில்லை, முழுமையாக எல்லாவற்றையும் விட்டால்தான் விரும்பிய மோக்ஷம் கிடைக்கும், என்பதை தெரிவிக்கவே இச்சுலோகத்தில் 'ப்ரஜஹாதி' 'ஸர்வான்' என்ற இரண்டு சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்'

ஆசைகள் மனத்தின் எங்கோ ஒரு மூலையில் மறைந்திருக்கும். வாசனைகளின் உருவில் அவை சேர்ந்திருக்கும். எனவேதான் 'மனோகதான்' என்கிறார். குற்றமோ, பந்தமோ வெளியில் இல்லை. மனதில்தான் இருக்கிறது. எனவே மனமெனும் இருட்குகையில் விவேகமெனும் விளக்கின் உதவியால் மறைந்துள்ள ஆசைகளைத் தேடிக் கொணர்ந்து வெளியே எறிதல் வேண்டும். அன்னத்தில் உள்ள கல்லை, பயிரின் நடுவில் உள்ள களையை, தோட்டத்தில் உள்ள முட்கள், காய்கறிச் செடிகளில் உள்ள இலைப்புழுவை எவ்வாறு பார்த்து பார்த்து நீக்குகிறோமோ, அவ்வாறே மனதில் உள்ள ஆசைகளை முழுவதுமாக விலக்குதல் என்று பகவான் இங்கு கூறுகிறார். இவ்வாசைகள் பல பிறவிகளாகத் தொடர்ந்து ஜீவனைத்துரத்தி வந்து, வாசனைகளின் ரூபமாக உருவெடுத்து காரணதேகத்தில் நன்றாகப் பதிந்து காலூன்றிக் கொண்டு பிறப்பு இறப்புகளை அடையச் செய்கிறது. எனவே வாசனைகளற்று, அதன் மூலத்தைக் கண்டறிந்து அதனையும் களைந்து எறிதல் வேண்டும். ஒன்றே ஒன்று மிகுந்திருந்தால் கூட ஆபத்தே, ஏனெனில் சிலர் எல்லா ஆசைகளையும் விட்டு ஏதோ ஒன்றின்மேல் 'மமத்துவம்' (எனது) வைத்து மறுபடியும் பந்தத்தில் விழுந்து விடுகின்றனர். அக்னியில் அனைத்தும் எரிந்து பின்பு ஒரு நெருப்புத்துகள் இருப்பினும் அது கனிந்து மறுபடியும் பெரு நெருப்பாகி விடுகின்றதல்லவா? எனவேதான் பகவான் 'எல்லா ஆசைகளை முழுமையாக விட்டொழித்தல் வேண்டுமென வலியுறுத்திக் கூறுகின்றார். இங்கு தியாகம், ஆன்ம விசாரணை, வைராக்கியம் இவை ஆசைகளை ஒழிப்பதற்குத் துணைபுரியக்கூடும்.

(2) இரண்டாம் சாதனை - "ஆத்மன்யேவாத்மனா துஷ்டஹ" - தன் ஆன்மாவிலேயே ஆத்ம திருப்தியடைதல்.

கலாம். அவ்வாறு அவள் விழிப்புறாவிட்டால் அவளை யாரும் எழுப்ப முயல்தல் கூடாது. பகல்ஒளி உலகை எல்லாம் தழுவிக் கொள்ளும் சமயம்; இனிய பறவைகளின் இசையாலோ காற்றின் கடும் சுழற்சிகளாலோ தன் துயில் கலைந்து விடுதலை அவள் விரும்பவில்லை. இறைவன் வந்து தன் அருகில் நிற்குங்காறும் அவள் துயிலவே விரும்புவாள்.

கவிஞராம் தலைவி, இறைவனின் மெல்லிய தொடுதலால் கண்மலர விரும்புகிறாள். அவள் தன் இமைகளைத் திறக்கும்போது அவனது சுடரொளிப் புன்னகை தனது ஆன்மாவைச் சிலிர்க்க வைக்கும் என்று அவாக் கொள் கிறாள்.

அவனது ஆதிஒளி, வெள்ளமாகத் தன் கண்களில் பெரு கிப் பாய்தர, அவன் வரவேண்டும் என்று விரும்புகிறாள்.

அவள் தன் சுயவுணர்வுக்கு - மெய்உணர்வுக்கு - துயிலி லிருந்து விழிப்புக்கு-மீண்டும் இறைமையிடம் சேர்தற்கு- விரும்புகிறாள்.

47. அவனுக்காக வீணே காத்திருந்து இரவு பெரும்பாலும் கழிந்தது. நான் களைத்து உறக்கத்தில் ஆழ்ந்த போது, காலையில் திடீரென்று அவன் என்கதவருகே வந்து நிற்பானோ என்று அஞ்சுகிறேன். தோழியரே, அவனுக்கு வழி திறந்தே இருக்குமாக, தடை செய்ய வேண்டா.

அவனது காலடி ஓசை என்னை எழுப்பாவிடில் என்னை எழுப்புதல் வேண்டா. இஃது என் வேண்டு தல். பறவைகளின் தொகுப்பான கலகலப்பு ஒலியோ காலை உதய விழாவினில் காற்றின் குதியாட்டமோ என்னைத் துயிலினின்று எழுப்பிவிடலாகாது. இஃது என் விருப்பம். என் தலைவனே, என் கதவருகில் திடுதிப்பென்று தோன்றினும் என் துயில் கலைக்கப் படல் ஆகாது.

ஆ, எனது உறக்கம், மதிப்பரிய உறக்கம், அவன் தொடுதலால் அது மறைய வேண்டும் என்றே காத் திருக்கிறது. ஆ, என் மூடிய இமைகள், உறக்க

இருளில் எழும் ஒரு கனவென—அவன் என் முன் நின்று புரியும் புன்னகை ஒளியால் தான் திறக்கும்.

ஒளிகள் உருவங்கள் யாவற்றுக்கும் முதலான அவனது தோற்றத்துடன் என் காட்சியில் அவன் தோன்றுவானாக. விழிக்கும் என் ஆன்மாவின் முதலாவது உவகைச் சிலிர்ப்பு, அவனது பார்வை படுதலால் வருவதாக. என்னிடம் நான் மீள்வது உடனடியாக அவனிடம் நான் மீள்தலுக்கும் இயல்வதாக.

☐ இத் தன்னுணர்ச்சிப் பாடல் தெய்விகத்தை உணரும் ஆன்மாவினுள் பாய்ந்து பரவும் பேரின்பத்தைச் சொற்படம் ஆக்குகிறது.

O

## நாற்பத்தெட்டு
## இயற்கைக் காட்சியில் அனுபூதிச் சுகம்

☐ கவிஞரும் அவருடைய சுறுசுறுப்பான கூட்டாளிகளும் அதிகாலையில் தங்கள் பயணத்தைத் தொடங்கினார்கள். அவருடைய கூட்டாளிகள் உலகாயதர்கள். பறவைகளின் பாட்டோ சாலை மருங்கில் உள்ள முழு மலர்ச்சியான பூக்களின் அழகோ மேகங்களின் இடைவெளிகளிலிருந்து பாய்ந்து வரும் பொன்னொளியோ அவர்களது அக்கறைக்கு உரியனவாக இல்லை.நிற்காமல் போய்க் கொண்டிருந்தார்கள், அவர்கள் ஆடவுமில்லை, பாடவுமில்லை, தங்கள் வழியில் எந்த ஒரு சிறு ஊருக்குச் செல்லவும் இல்லை.

பகல் ஏறுகிறது. அவர்கள் வேகமாக நடந்தார்கள். வெயில் அதிகமானது. இலைகள் காய்ந்தன. புறாக்கள் தம் கூடுகளாகிய இருப்புகளைத் தேடின. ஆயர் சிறுவனுக்கு உறக்க மயக்கம். ஆலமர நிழலில் உறங்கினான். கவிஞரின் கூட்டாளிகள் போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் களைப்பினால் கவிஞர் பின் தங்கிவிட்டார் கூட்டாளிகள். அவரை இகழ்ச்சியாகப் பார்த்தார்கள்; ஏளனமாகச் சிரித்தார்கள். அவற்றை அவர்

பொருட்படுத்தவில்லை. அவர்கள் போய் விட்டார்கள். அறிந்திரா வழிகள், தேசங்களில் நெடுகிலும் இடையிலுமாகப் பயணங்கள் செய்தார்கள். அவர்களது துணிவும் அஞ்சாமையும் கவிஞர்க்கு வியப்பாக இருந்தன. ஆனால் அவர்களின் பின் செல்ல அவர் விரும்பவில்லை. காட்டில் வெட்கத்தோடும் அவமானத்தோடும் கிடந்தார்.

அவரை அப்பொழுது உறக்கம் ஆட் கொண்டது. பயணம் மேற் கொண்ட நோக்கம், சேர வேண்டிய இடம் என்பன அவர்க்கு மறந்து போயின. விழித்துப் பார்க்கும் போது தன் அருகே இறைவன் நிற்பதைக் கண்டார். இறைவனின் புன்னகை ஒளி கவிஞரின் ஆன்மாவை வெள்ளமாகச் சூழ்ந்தது. ஆன்மிகத் தேடற் பயணம் நெடியது கடியது என்று அவர் எப்போதும் எண்ணியிருந்தார். ஆனால் எவ்வகைப் போராடுதலோ முயற்சியோ வேண்டாது இறைவன் இங்குக் கவிஞரிடம் வந்திருக்கிறான்.

இறைவனிடம் பூரணமான நம்பிக்கை வைத்தலும் அவனது விருப்புக்குத் தன்னை அப்படியே ஒப்படைத்தலும் அடியவர்க்குத் தெய்விக உணர்தலை எளிதாக்குகின்றன.

48. காலைப் பொழுதாம் அமைதிக் கடல், பறவைப் பாடல்களாம் சிற்றலைகளாக வெடித்தெழுந்தது. சாலை ஓரத்தில் மலர்கள் கொண்டாட்டமாக இருந்தன. பொன்னாகிய பெருஞ்செல்வம் மேக இடைவெளிகளில் சிதறிக் கிடந்தது, எங்கள் வழியில் விறுவிறு எனச் சென்ற நாங்கள் அவற்றில் கருத்துச் செலுத்தவில்லை.

நாங்கள் மகிழ்ச்சியால் பாடவில்லை; ஆடவில்லை. ஊர்களுக்கு வாணிபஞ் செய்யச் செல்லவில்லை. ஒரு வார்த்தை பேசவில்லை. சிரிக்கவில்லை. வழியில் சுணங்கவில்லை. நேரம் விரைந்து போதற்கு ஏற்ப விரைந்து நடையைக் கட்டினோம்.

உச்சிக்கு வந்தான் பகலவன். புறாக்கள் நிழலில் 'களகள' என்றன. நண்பகலில் காய்ந்த இலைகள் வெயிற் காற்றில் ஆடிக் கறங்கின. ஆடு மேய்க்கும்

சிறுவனுக்கு அரைத் தூக்கம்; ஆலமர நிழலில் கனவு கண்டான். நீர்நிலை அருகே நான் படுத்தேன். களைத்த என் கால்களைப் புல்மேல் நீட்டிப் பரத்தினேன்.

என் கூட்டாளிகள் என்னை ஏளனமாகச் சிரித்தார்கள். தலை நிமிர்ந்து விரைந்து சென்றார்கள். திரும்பிப் பார்க்கவோ ஓய்வோ இல்லை அவர்கள். தூரத்தே நீலமான மங்கலில் அவர்கள் மறைந்தார்கள். பல புல்வெளிகள், குன்றுகளை அவர்கள் கடந்து சென்றார்கள். புதிய தூர தேசங்களையும் தாண்டிச் சென்றார்கள். முடிவற்ற பாதையின் துணிவான ஆதரவாளனே; எல்லாப் பெருமையும் உனக்கே உரியது!

கேலியும் குற்றங்கூறலும் நான் எழுமாறு குத்திவிட்டன. ஆனால் உன்னிடமிருந்து பதில் எதுவும் காணவில்லை. மகிழ்ச்சியான ஓர் அடக்கத்தின் ஆழ்த்தில் மங்கலான ஓர் உவகையின் நிழலில் என்னை நான் இழந்துவிட அனுமதித்தேன்.

கதிரொளிப் பின்னல் கொண்ட நெடும் பசுமையின் மயக்க அமைதி மெல்ல என் நெஞ்சிற் பரவியது, எதற்குப் பயணம் செய்தேன் என்பதை மறந்தேன்; எதிர்க்காமல் என் நெஞ்சை நிழல்களும் பாக்களுமாகிய மாயத்தில் ஒப்புக் கொடுத்தேன்.

முடிவினில் மென் துயில் கலைந்து நான் கண் விழித்தபோது, என் துயிலில் நின் புன்னகை வெள்ளம் பெருக்கி, அருகினில் நிற்றல் கண்டேன். வழியோ நெடியது சலிப்புத் தருவது எனவும் நின்னை அடைதற்காம் போராட்டம் கடினம் எனவும் நான் எவ்வாறெல்லாம் பயந்து கொண்டிருந்தேன்.

☐ ச. இராதாகிருஷ்ணன் இதுபற்றி எழுதுகையில், “இயற்கைக் காட்சியில் உற்சாகத்துடன் தானாகத் தன்னை ஒப்படைப்புச் செய்வது ஒருவனைத் தனக்கான இலக்கு நோக்கி இட்டுச் செல்கிறது என்பதைக் கவிஞர் அழகாகத் தீட்டுகிறார்” என்கிறார். “வானகத்துக்

காற்று நம் மேல் வீசுவதை நாம் உணர்கிறோம். எல்லா அன்பும் அமைதியும் நம்முன் இருப்பதை உணர்கிறோம். கனத்த சுமை நம் நெஞ்சை விட்டு இறங்குகிறது. வாழ்வின் புல்லிய அச்சங்கள், அச்சுறுத்தப்படல் என்ப வற்றுக்கு மேலே ஆன்மா உயர்த்தப் படுகிறது. பூரண மான இசைவினில் அது நழுவி உட்செல்கிறது. தெய்விக ஒளி ஆன்மாவில் வெள்ளமாகப் பாய்கிறது. தெய்விக இசை ஆன்மாவைப் பரவசப் படுத்துகிறது, பிரபஞ்சத் தின் தேவகானத்தை ஆன்மா வாய்திறவாது ஓசை எழுப்பித் தன் மகிழ்ச்சியைக் காட்டுகிறது'' என்கிறார்.

□ இந்தப் பாட்டு அதிகம் குறியீட்டுத் தன்மையும் குறிப்புப் பொருண்மையும் கொண்டுளது. பறவைப் பாடல்களாம் சிற்றலைகள், மலர்கள் என்பன இயற்கை யின் அளவிலா உவகை வெளிப்பாட்டையும் இயற்கை யில் தெய்விக இருப்பையும் உணர்த்துகின்றன.

இயற்கையும் அதில் உள்ள மலர்களும் தெய்விகத்தின் காட்சிப் பொருளாக இலங்குகின்றன. மானுடர் கண் களுக்கு அவை கவர்ச்சி தரவில்லை!

இதில் கவிஞரும் கூட்டாளிகளும் மேற்கொண்ட பயணம் பொருளியல் தேட்டத்திற்குக் குறியீடாகும். கடவுளை உணரத் தடையாக இருப்பது அப் பயணம். அதனைக் கவிஞர் விட்டுவிடுவது உலகாயதத்தில் அவருக்கு இருந்த மயக்கம் விலகியதைக் குறிக்கிறது. ஆகவே அவர் இறை யொன்றிப்பை எளிதில் பெறமுடிகிறது.

இதில் 'உறக்கம்' என்பது சமாதி நிலைக்கு இட்டுச் செல்லும் அனுபவக் குறிப்பாகும்.

''காலை என்னும் மௌனக் கடல், பறவைப் பாடல் களாம் சிற்றலைகளாக வெடித்தது'' ''காய்ந்த இலைகள் கூத்தாடின'', ''சூரியப் பின்னலிட்ட பச்சைக் கறுமையில் இளைப்பாறுதல்'' என்ற சித்திரப் படிமங்கள் மிகச் செப்பமாக அமைந்துள்ளன.

□ மேத்யூ ஆர்னல்டின் ''ரக்பி சேப்பல்'' அடிகள் இங்குக் கவனிக்கத் தக்கன,

அழியும் மானுடனின் மண்ணுலகத்து
வாழ்க்கைப் போக்கு எத்தகையது?
பெரும்பாலோர் சுழற்காற்றில் அலைகின்றனர்
இங்கும் அங்கும் — தின்கவும் பருகவும்
அரட்டை அடிக்கவும் காதலிக்கவும் வெறுக்கவும்
ஈட்டவும் செலவழிக்கவும் செய்கின்றனர்;
தூக்கி அவர்கள்
அலக்காகச் சுழற்றிப் புழுதியில் எறியப்படுகின்றனர்;
முயல்கின்றனர் கண்மூடித்தனமாக,
அடைகின்றது முடிவினில் ஒன்றுமில்லை.

O

## நாற்பத்தொன்பது
## சோகமான ஒரு மெல்லிசை

☐ கடவுள், அரசர்கட்கு எல்லாம் மேலான அரசர். அவரது அவையில் இசை வல்லுநர் நிரம்ப உள்ளனர். தங்களது தீவிய இசையால் இறைவனின் நெஞ்சை மகிழ்விக்கும் திறம் உடையவர்கள் அவர்கள். அவ்வாறு இருந்த போதிலும், ஒரு குடிசையின் மூலையில் உட்கார்ந்து பாடிக் கொண்டிருக்கும் கவிஞரின் சோகம் கலந்த மெலிதான பண்ணினைக் கேட்டதும் மன்னாதி மன்னராகிய அவர் தன் அரியணையை விட்டு இறங்கி, கவிஞரின் குடிசையின் முன் வந்து நின்றார். கவிஞர் ஒரு புதுப் பயிற்சியாளர். அவர் ஒன்றும் பெரிய வித்தகர் அல்லர். அவரது எளிய இசையில் கடவுள் மகிழ்ச்சியுற்றார். அவருக்குத் தர ஒரு பூவினைப் பரிசாகக் கொண்டு வந்திருந்தார்.

சிறப்புப் போதாத, சிறியதான கவிஞர்தம் இசைக்குத் தம் நெஞ்சைப் பறிகொடுத்தார் கடவுள். அந்த இசை இந்த உலகின் மொத்த இசையோடு கலந்தது.

49. நின் அரியணையிலிருந்து கீழே இறங்கி வந்தாய்.
    என் குடிசை வாசலில் நின்றாய்.

    ஒரு மூலையில் நான் தன்னந் தனியாகப் பாடிக் கொண்டிருந்தேன். அந்த இன்னிசை நின் செவியை

அகப்படுத்திவிட்டது. நீ இறங்கி வந்தாய், என் குடிசை வாசலில் நின்றாய்.

உன் அவைக் கூடத்தில் வல்லுநர் பலர் உள்ளனர். அங்கு எப்பொழுதும் பாடல்கள் இசைக்கப்படுகின்றன. ஆனால் இந்தப் புதுப் பயிற்சியாளனின் எளிய புகழ்ப் பாட்டு நின் அன்பைத் தொட்டிருக்கிறது. சோகமான ஒரு சிறு சுருதி உலகப் பேரிசையினுடன் கலந்தது. பரிசளிக்க ஒரு மலருடன் நீ வந்தாய், என் குடிசை வாசலில் நின்று விட்டாய்.

□ அன்பினாலும் பணிவினாலும் இறைவனது நெஞ்சை வெல்லலாம்.புலமையாலும் திறமையாலும் அது நடவாது. எளிமை யுடையரான எவரது நெஞ்சில் அன்பு நிரம்பி வழிகிறதோ அவர் கடவுளின் அன்பைக் கவர்கின்றார். இம் முறையில் தான் தனி ஆன்மா தெய்விக ஆன்மாவுடன் ஒன்றாகிறது. செருக்கைத் துறத்தல், முழுப் பணிவு என்பன முதன்மையான தேவைகளாகும். எளியோர் வறியோரிடம் இறைவன் வருகிறான்; செல்வர் செருக்கரிடம் அல்லன்.

□ பூ என்பது காதல், கடவுளின் தண்ணளி என்பபவற்றின் அடையாளப் பொருள். உலகின் பேரிசை என்பது தெய்விகத்தை, எல்லா அமைதிக்கும் வளங்களுக்கும் ஆதாரமாக வையகமெல்லாம் கலந்திருக்கும் இறைமையைக் குறிக்கும்.

O

## ஐம்பது
## இரப்போனின் திகைப்பு

□ வீடு வீடாகச் சென்று இரப்பவராகக் கவிஞர் இப் பாடலில் தம்மைக் காண்பிக்கிறார். அவ்வாறு இரந்து வரும் ஒரு சமயம் திடீரென்று சற்றுத் தொலைவில் பொன்மயமான தேர் ஒன்று தோன்றுவது அவருக்குத் தெரிந்தது. தேர் அவர் அருகே நின்றுவிட்டது. அப்போது அவரது நம்பிக்கைகள் மேலே உயர்கின்றன.

ஆனால் அவர் திகைப்புற, அரசன் தேரினின்றும் இறங்கி வந்து, தன் வலக்கையைக் கவிஞரின் முன் விரித்து ''என்ன வைத்திருக்கிறாய் எனக்குத் தருவதற்கு?'' என்கிறான்.

'ஈது என்ன அரச வேடிக்கை!' என்று கவிஞர் குழப்பம் அடைகிறார். தன் பையிலிருக்கும் தானியத்தில் ஒன்றை எடுத்து அரசற்கு ஈகிறார், பின்பு வீடு திரும்பியதும் தரையில் தன் பையைக் கொட்டுகிறார்.

கொட்டிய போது தானியக் குவியலில் ஒரு தங்கத் தானிய மணி இருப்பது காண்கிறார்; அழுகிறார் அவர். தன்னிடம் இருந்த எல்லாவற்றையும் அரசற்குக் கொடுக்க மனமில்லாமல் போய்விட்டதே என்று இரக்கம் கொள்கிறார்.

50. ஊர்த் தெருவில் வீடு வீடாக நான் பிச்சை எடுக்கச் சென்றிருந்தேன். நின் தங்கத் தேர் எழில் பொங்கு கனவு போல் தோன்றியது. மன்னர்கட்கு மேலான இம் மன்னன் யார் என்று வியந்தேன்.

என் நம்பிக்கைகள் உயர்ந்தன. எனது தீய நாள்கள் முடிவுக்கு வந்து விட்டன என்று நினைத்தேன். எனக்கு இனிக் கேளாமலே பிச்சை கிடைக்கும், எப்பாலும் புவியில் சிதறிக் கிடக்கும் செல்வம் கிடைக்கும் எனக் காத்திருந்தேன்.

நான் நின்றிருந்த இடத்தில் தேர் வந்து நின்றது. நினது பார்வை என்மேல் விழுந்தது. புன்னகையுடன் இறங்கி வந்தாய். முடிவாக எனக்கு நற்பேறு வந்து விட்டது என்று உணர்ந்தேன். ஆனால் திடீரென்று நீ நின் வலக் கையை நீட்டி, ''எனக்குத் தர என்ன வைத்திருக்கிறாய்'' என்றாய்,

ஆ! ஓர் இரவலனிடம் இரத்தற்கு நின் உள்ளங்கையைத் திறப்பது எத்தகைய அரச வேடிக்கை! குழம்பினேன். திகைத்து நின்றேன். பின்பு என் பையிலிருந்த தானியத்தில் மிகச் சிறு மணியை எடுத்தேன், நினக்குக் கொடுத்தேன்.

பகல் முடிவில் எத்துணைப் பெரிய வியப்பு எனக்கு! என் பையைத் தரையில் கொட்டினேன். வறிய

குவியலில் ஒரு சிறிய தங்கத் துணுக்கு! அழுதேன் கடுமையாக; நின்னிடம் எல்லாவற்றையும் கொடுத்து விடும் உள்ளம் எனக்கு இருந்திருக்கலாமே என்று ஏங்கினேன்.

☐ இறைவன்பால் இவறுதல் - கருமித்தனம் காட்டுதல்- ஆகாது. கடவுளின் அன்பை உணர ஆசைப்பட்டால் தன் உடைமைகள் யாவற்றையும் கொடுத்து விட ஆயத்த மாக இருக்க வேண்டும். முழுமையாகத் தன்னைத் தந்து விடல் - ஒப்படை செய்தல் - தெய்வம் தெளிதற்கு அடிப் படையாகும். ஆனால் தெய்வத்தின் தொடுதலால் (ஸ்பரிசத்தால்) அற்பப் பொருளும் விலை மதிக்க முடியாப் பொருளாகி விடும் என்பது தெரியாமல் நாம் நம் உடைமைகளை விட்டுப் பிரிய மனம் வராது பற்றிக் கொண்டிருக்கிறோம். அதனால் கவிஞரைப் போலவே நாமும் காலங் கடந்த பிறகு அதனை அறிகிறோம்.

☐ ஈகையையும் அறத்தையும் உலகப் பொருள்களைத் துறத்தலையும் கவிஞர் பெருமைப் படுத்துகிறார். 'ஒளி படைத்தோர், உன் தியாகத்தால் உள்ளம் மகிழ்ந்து நீ விரும்புபவற்றை உனக்குக் கொடுக்கிறார்கள்'' எனவும், ''என்மேல் மனத்தைப் பதிய வை. பத்தி கொள். எனக்காகத் தியாகம் செய். என் முன் வீழ்ந்து வணங்கு. இவ்வாறு நீ உன்னில் இசைந்து என்னையே மிக மேலாம் இலக்கு எனக் கொண்டு என்னிடம் வா'' எனவும் கூறும் கீதைக் கருத்துகள் இங்கு வைத்து எண்ணத் தக்கன.

O

## ஐம்பத்தொன்று
## வறிய வரவேற்பு

☐ அந்த ஊர் மக்கள் தங்களது அன்றைய வேலையை முடித்துவிட்டார்கள். இரவில் இருள் மிகுந்தது. இராப் பொழுதில் வந்து தங்கக் கூடிய விருந்துகள் எல்லாம் வந்து விட்டன என்று நினைத்தார்கள். எல்லாக் கதவுகளும் சாத்தப்பட்டன. ஆனால் ''இன்று அரசன்

வருவான்'' என்று யாரோ சொன்னார்கள். அதைக் கேட்டு எல்லாரும் சிரித்தார்கள்.

கதவு தட்டும் ஓசை கேட்டனர் சிலர். அது கேட்டவருள் சிலர் அரசனின் தூதர் என்றனர். அது காற்றடிக்கும் சத்தம் என்றனர் சிலர். அதனைப் புறக்கணித்தனர். விளக்கை அணைத்து விட்டுப் படுத்தனர்.

இரவு அதிக நேரமாகிவிட்டது. தொலைவில் இடிபோன்ற ஓசை கேட்டது. நிலம் குலுங்கியது. சுவர்கள் நடுங்கின. ''அது அரசன் ஏறிவரும் தேர்'' என்று ஒருவர் சொன்னார். அது இடியோசை என்று கூறி ஒதுக்கப்பட்டது.

இரவு மேலும் கறுமையாகியது. அரசன் வருகிறான் என்பதற்கான முரசொலி உரத்துக் கேட்டது. அவனை வரவேற்கத் தகுந்த ஆயத்தம் செய்ய வில்லையே என்று மருண்டு நடுங்கினார்கள். அரசனின் கொடியை யாரோ ஒருவர் கண்டார். ஆகவே அரசனின் வருகையில் ஐயத்திற்கு இடமில்லை. தக்க வரவேற்புக் கொடுக்க முடியாமற் போகிறதே என்று ஒரே குழப்பமும் கலக்கமும் ஆகக் கிடந்தன.

என்ன செய்வது? அலங்காரமற்ற தங்கள் கூடத்தில் வெறுங்கைகளால் வரவேற்பது எனவும் தங்களது கிழிந்த பாயை விரித்து வைப்பது எனவும் முடிவு செய்தார்கள்.

51. இரவு இருள் மேவுகிறது. எங்களது பகல் வேலைகள் முடிவுற்றன. இராப் பொழுதின் கடைசி விருந்தாளி யும் வந்துவிட்டார் என்று நினைத்தோம். ஊரில் கதவுகள் யாவும் சாத்தப்பட்டன. ''வேந்தன் வர விருக்கிறான்'' என்று சிலர் மட்டும் கூறினர். நாங்கள் நகைத்தோம். ''அஃது அவ்வாறு இராது'' என்றோம்.

கதவை யாரோ தட்டுவதாகத் தோன்றியது. ''காற்றுத் தான் வேறொன்றில்லை'' என்று நாங்கள் சொன்னோம். விளக்குகளை அவித்து விட்டுப் படுத்து விட்டோம். சிலர் மட்டும், ''அது, தூதன்'' என்றனர். நாங்கள் நகைத்தோம். ''காற்றாகத் தான் இருக்கும்'' என்றோம்.

நள்ளிரவில் ஒரு சத்தம் வந்தது. "தொலைவில் இடி இடிக்கிறது" என்று உறக்கத்தில் நாங்கள் நினைத்தோம். நிலம் நடுங்கியது. சுவர்கள் ஆடின. எங்கள் உறக்கத்திற்கு அவை இடையூறாக இருந்தன. சிலர் மட்டும், "அது தேராழியின் ஓசை" என்றனர். அரை உறக்கத்தில் நாங்கள் "அது மேகங்களின் உறுமலாக இருக்கும்" என்றோம்.

இரவு இன்னமும் இருட்டாக இருந்தது. பேரிகை கொட்டியது. 'எழுமின் சுணங்காதீர்" என்ற குரல் கேட்டது. எங்கள் கைகளை நெஞ்சில் வைத்து அழுத்தினோம். அச்சத்தில் நடுக்கம் உண்டானது. சிலர் மட்டும் "பாருங்கள் அது வேந்தன் கொடி" என்றனர். எழுந்து நின்றோம். "சுணங்க நேரமில்லை" என்று கத்தினோம்.

வேந்தன் வந்துவிட்டான். ஆனால் எங்கே விளக்குகள்? எங்கே மாலைகள்? அமர அரியணை எங்கே? ஆ. வெட்கம்' படுவெட்கம்! எங்கே கூடம்? எங்கே அலங்காரங்கள்? சிலர் "இந்தக் கூச்சல் வீணே. வெறுங்கைகளோடு வரவேற்று உங்களின் வெறுமையான அறைகளுக்கு அழைத்துச் செல்லுங்கள்"என்று யாரோ ஒருவர் சொன்னார்.

கதவுகளைத் திறவுங்கள். சங்குகளை முழக்குங்கள், ஆழ்ந்த இரவில் நம் இருண்ட வறண்ட வீட்டுக்கு வேந்தன் வந்திருக்கிறான்.விசும்பில் இடி இடிக்கிறது. மின்னலால் இருள் நடுங்குகிறது. உனது கிழிந்த பாயைக் கொண்டு வந்து முன்றிலில் விரி. அச்சம் தரும் இரவில் திடீரென்று வேந்தன் புயலோடு வந்திருக்கிறான்.

▢ தொடர் உருவகக் கதையாக அமைந்த இந்தத் தன்னுணர்ச்சிப் பாடல், மனிதன் கடைசி வரை கடவுள் குறித்துப் புறக்கணிப்பாக இருப்பதையும் மாசறு காட்சிக்கான ஆன்மிகத் தெளிவு கிடைக்கும் தருணம் வாய்த்ததும், தான் அதனைத் தன்மயம் ஆக்கிக் கொள்ள ஆயத்தமின்றி இருப்பதை உணர்கிறான் என்பதையும் தெரிவிக்கிறது.

'விழித்திரு, காத்திரு என்றாற் போன்று விழிப்புடனும் இறையை வரவேற்க ஆயத்தமாகவும் இருக்க வேண்டும் என்பது இதன் கருத்து.

இதில் 'அரசன்' என்பது இறையைக் குறிக்கும் குறியீடு.

☐ இறைவனுக்கு ஆடம்பரமான வரவேற்புத் தேவையில்லை என்ற கருத்தை இந்தத் தொடர் உருவகக் கதை கொண்டுள்ளது. நம் பணிவான, எளிய, நேரிய வரவேற்பை-போற்றுதலை-அவன் ஒப்புக் கொள்கிறான்.

☐ ''நம் இருண்ட-வறண்ட-வீட்டின் வேந்தன்; ''அச்சம் தரும் இரவின் வேந்தன்'' என்பது மரணத்தைக் குறியீடாகக் கொண்டிருப்பதாகவும் கருதலாம்.

எதிர்பாராது மரணம் வந்து விடும் என்பதால் நாம் அதை வரவேற்க எப்போதும் ஆயத்தமாக இருக்க வேண்டும் என்பதாம்.

O

# ஐம்பத்திரண்டு
## வீரவாள் பரிசில்

☐ கவிஞராகிய காதலியைக் கடவுளாம் காதலர் இரவிற் சந்திக்க வந்திருந்தார். அவர் காலையிற் சென்று விடும் போது அவரது ரோஜா மாலையை அன்பளிப்பாகப் பெற்றுக் கொள்ள விரும்புகிறாள் அன்புத் தலைவி. ஆனால் அவளுக்குத் துணிவு வரவில்லை. தலைவன் பிரிந்து சென்றதும் அவர் படுக்கையில் பூ இதழ்கள் கிடைக்கும் என்று ஒரு பிச்சைக்காரனைப்போல் தேடு கிறாள். ஆனால் அந்தோ! அவளுக்கு மலர்களோ மணப் பொருள்களோ பன்னீர்க் கலசமோ கிடைக்கவில்லை. அவற்றுக்குப் பதிலாக அவர் விட்டுச் சென்றது நெருப்பு எனச் சுடர்வதும் இடியேறு போல் கனத்திருப்பதுமான பெரியதொரு வாள்!

திகைப்பும் வியப்பும் உடையளாகத் தலைவி புதுமையான அந்த அன்பளிப்பைப் பார்க்கிறாள். அதைத் தரித்துக்

கொள்ள வெட்கம் அடைகிறாள். அவள் பலமற்றவள், அதனைத் தன் மார்பில் வைத்து அழுத்தும் போது அஃது அவளை ஊறுபடுத்துகிறது. இருப்பினும் வேதனைச் சுமையைத் தெய்விகப் பரிசு என்று ஏற்றுக் கொள்கிறாள்.

இந்த அன்பளிப்புப் பொருள் அவளது உயிருக்குத் துணிவு தரும், அஞ்சாமலும் துணிவுடனும் அவள் உலகியல் கெடுதிகளையும் தீப்பேறுகளையும் இனி எதிர்த்து நிற்பாள், வெற்றி முடி சூடுவாள். பற்றின்மையை அவள் பழகிக் கொள்வாள். சாவினை இனிய கூட்டாளி என்று உவகையுடன் வரவேற்பாள். அதிகாரம் செல்வம் என்பவற்றால் வரும் பொய்யும் பகட்டும் ஆன தளைகளை அவள் விட்டு விடுவாள். எல்லாப் பிணிப்புகளும் அகன்ற பிறகு திட்பமாகவும் உறுதியுடனும் அவள் வாழ்வின் அறை கூவல்களை ஏற்றுக் கொள்வாள்.

52. நீ அணிந்திருந்த ரோஜா மாலையை நின்னிடம் கேட்க நினைத்தேன். ஆனால் துணிவு வரவில்லை. பிரிந்து செல்கையில் படுக்கையில் மலர்கள் கிடைக்கும் என்று காலை வரை காத்திருந்தேன். விடிந்ததும் ஒன்றிரண்டாயினும் பூவிதழ்களை இரவலன் போல் தேடினேன்.

ஆ நான்! நான் காண்பதென்ன? நின் அன்புச் சின்னமாகக் காண்பது என்ன? பூ அன்று, மணப் பொருள் அன்று; பன்னீர்க் கலசம் அன்று. நினது வாள், தீச் சுடரென மிளிர்வது; இடியேறு போல் கனப்பது.

காலை இளங் கதிர் சன்னலூடு வருகிறது; நின் படுக்கை மேல் படர்கிறது. பறவை 'கிச்கிச்' என்கிறது; "பெண்ணே உனக்கு என்ன கிடைத்தது?" என்று கேட்கிறது. அது பூ அன்று, மணப் பொருள் அன்று; பன்னீர்க் கலசம் அன்று. அது நின் அச்சம் தரும் வாள்.

உட்கார்ந்து வியப்பில் நான் சிந்திக்கிறேன்; "என்னே நினது இந்தப் பரிசில்" என்று! அதை ஒளித்து

வைக்க இடம் காணேன்; வெட்குகிறேன். அதனைத் தரிப்பதற்கு வலிமையில்லேன். மார்போடு சேர்க்க அஃது உறுத்துகிறது. இருப்பினும் இந்த நின் பரிசிலை, நோவின் சுமையாம் சிறப்பினை, என் நெஞ்சத்தே தாங்குவேன்.

இனி இவ்வுலகில் எனக்கு அச்சம் என்று எஞ்சி நிற்பது எதுவும் இல்லை. நீயே என் போராட்டம் யாவிலும் வெற்றியாளன். இறப்பை என் நண்பனாக அனுப்பினை. நான் என் உயிரால் அவற்கு முடிசூட்டுவேன். என் தளைகளை அறுக்க நின் வாள் என்னிடம் உளது. இவ் வுலகில் எனக்கு அச்சம் தருவது எதுவும் இல்லை.

இனி என் புல்லிய அலங்காரங்களை எல்லாம் விட்டொழிப்பேன், என் இதயத் தலைவா, இனியும் நான் காத்திருக்க வேண்டா, மூலை முடுக்கில் அழுது கிடக்க வேண்டா, நடத்தையில் வெட்கமோ நயமோ வேண்டா. நின் வாளினை அணிகலனாகத் தந்தனை. பொம்மை ஒப்பனைகள் எனக்கு இனி வேண்டா.

☐ இந்த இசைப் பாடல் குறியீட்டுப் பொருண்மை கொண்டது. மலர், வாசனைப் பொருள்கள், பன்னீர்க் கலசம் என்பன புலனுகர்ச்சி வசதி-சுக சாதனங்கள்-என்பவற்றைக் குறிக்கின்றன.

கடவுளின் வாள் என்பது அகத்தும் புறத்தும் உளவாம் தீமைகளை வெல்லும் ஆன்மிக வலிமை-துணிவு-ஆகியவற்றின் குறியீடாக உள்ளது.

ஆன்மிக வலிமை என்பது இறைவன் மனிதனுக்குக் கொடுத்துள்ள மிகப் பெரிய கொடை. எது வரினும் பொருட்படுத்தாமல் தீமையை எதிர்த்து நிற்கும் ஆற்றலை அது தருகிறது.

☐ வாள் என்ற படிமம் கீதையிலும் கபீரின் அனுபூதிக் கவிதையிலும் வருகிறது, கீதையும் கபீர் கவிதையும் தாகுரிடம் அதிகம் நெருக்கம் பெற்றிருந்தன.

"உங்கள் வாளை ஏந்துக, போரில் முனைக,
உடன்பிறந்தோரே. வாழுங்காறும் போரிடுவீர்;
காமம் வெகுளி மயக்கினுக்கு எதிராக
உடம்பாம் களத்தில் பெரும்போர் ஒன்று
நிகழ்ந்தவாறுளது;
உண்மை அமைதி தூய்மையின்
அரசில் போர் நிகழ்கிறது;
பலமாக ஒலிப்பது இறைவன் திருப்பெயர்
என்னும் வாளே"

என்று கபீர் பாடலில் வாள் என்ற குறியீடு வருதல் காணுமாறு உள்ளது.

O

## ஐம்பத்து மூன்று
## காப்பும் வாளும்

☐ இவ்வுலகின் அழகு, மானிடர்க்குக் கிடைத்த தெய்விகக் கொடை. அது எண்ணற்ற வண்ணமணிகளாம் நட்சத்திரங்கள் பதித்த இறைவன் கைக் காப்பாக உள்ளது. ஆனால் அதனினும் அழகிது, கவரும் தகையது, தெய்விக வாள். மின்னலின் நெளிவுடையது; திருமாலின் ஊர்தியாம் கருடனின், பகற் செவ்வொளியில் விரிந்த சிறகு போல்வது. சாவின் துன்பப் பரவசத்தில் ஆடும் மனிதான்மா போல் அது நடுங்குகிறது; உடம்புக் கூட்டிலிருந்து விடுபட்ட உயிருக்குயிரான ஆன்மா போல் அது விளங்குகிறது. கடவுளின் அவ்வாள் அதீதமான அச்சம் தருவது; ஆன்மிக வலிமையாகிய அவ் வாளினால் மானிடன் தன்னுள் இருக்கும் தீமையை வெற்றி கொள்ளவும் பற்றின்மையைப் பழக்கப் படுத்திக் கொண்டு உலகியல் கட்டினின்று முற்றான விடுதலை பெறவும் முடியும்.

இறைமை இருதிறம் உடையது. ஆக்கும் திறனும் அழிக்கும் திறனும் கொண்டது அது. இறைவனின் இனிய அழகிய கூறு, அவனது அன்பும் இரக்கமுமாகிய பகுதி; அழகிய விண்மீன் இழைத்துச் செய்யப் பெற்ற கைத்தடை (காப்பு)யினால் காணுமாறுள்ளது. அவனது நீதி

யும் ஒறுப்பும் ஆக அச்சம் தருவதாம் இன்னொரு கூறு அவன் சுழற்றும் மின்னொளி வாளால் காணுமாறு உள்ளது.

53. அழகிது நின் கைக்காப்பு, விண்மீன்களால் அலங்கரிக்கப் பெற்றது; பன்னூறு வண்ணமணிகளால் வித்தகமாகச் செய்யப் பெற்றது அது. ஆனால் அதனினும் எனக்கு அழகிது மறையும் வெய்யோனின் சினந்த செவ்வொளிக்கு எதிராகத் தெய்விகக் கலுழன் விரித்த சிறகுகள் போலும் மின்னல் வளைவுடைய நின் வாள்.

மரணத்தின் முடிவான அடியின் துன்பப் பரவசத்தில் வாழ்க்கை தரும் கடைசி விடை போல அது விதிர்க்கிறது; ஒரு மூர்க்கமான வீச்சினால் மண்ணுலகத்து இந்திரிய உணர்வை எரித்து விடும் தூய தீக் கொழுந்து போல் அது சுடர்கிறது.

அழகிது நின் கைக்காப்பு; விண்மீன் மணிகளால் அலங்கரிக்கப் பெற்றது. ஆனால் நின் வாள், ஆ, இடியின் அதிபனே, மிக உயர்ந்த வனப்புடன் இயன்றது; காணவோ எண்ணவோ அச்சம் தருவது அது.

□ பற்றறுத்தல் என்ற அடிக்கருத்து இந்தப் பாடலிலும் தொடர்கிறது, பற்றறுத்தல் என்ற மின்னலிடும் தெய்விக வாள் இறைவனது அழிப்புச் சக்தியின் அடையாளமாக உள்ளது; கணக்கற்ற ஒளி கனலும் வீண்மீன்களும் கை புனைந்து இயற்றாக் கவின் பெரு வனப்புகளும் இறைமையின் ஆக்கச் சக்தியின் அடையாளங்களாக உள்ளன.

கவிஞரின் கருத்தில் பற்றறுத்தல் ஆகிய தெய்விக வாளே அதிக அழகும் கவர்ச்சியும் கொண்டுள்ளது.

ஆக்கல் அழித்தல், பற்றறுத்தல் ஆகிய இரண்டுமே மனித குலத்தின் பாற் கொண்டுள்ள இறை அருளின் விளைவுகளாகும்.

□ கைக் காப்பு, மானிட ஆன்மா அஞ்சி நடுங்குதல், எரியும் நெருப்பு, இறைமையின் இருபாற் கூறுகள் — இந்தப் படிமக் காட்சிகள் கீதையின் செல்வாக்கைக்

காட்டுகின்றன. வாள் கபீரின் செல்வாக்கை மீண்டும் நினைவுக்குக் கொணர்கிறது.

O

# ஐம்பத்து நான்கு
# தண்ணீர் எடுக்கப் போனாள்

□ [கவிஞராகிய] காதல் தலைவி ஊரிலுள்ள மாதரொடு கேணியில் தண்ணீர் எடுக்க மட்குடம் தூக்கிச் சென்றாள். மற்றவர்கள் தண்ணீர் எடுத்துக் கொண்டு வீடு திரும்பு கிறார்கள். ஆனால் தலைவியோ தயங்குகிறாள். தன் னைச் சற்று மறந்து சிந்தனையில் ஆழ்ந்து விடுகிறாள். மற்ற மாதர் அவளை அழைத்தது அவள் செவியில் ஏறவில்லை, மரம் ஒன்றின் சாய்ந்த நிழலில் தன்னந் தனியே இருந்தாள்.

இறைவனாம் காதல் தலைவன் தாகமுள்ள ஒரு வழிப் போக்கனாக அங்கே சத்தமின்றி வருகிறான். தண்ணீர் கேட்கிறான். அவள் தன் மயக்கிலிருந்து விழிக்கிறாள். குடத்துத் தண்ணீரைச் சாய்த்து அவன் கைகளில் ஊற்றுகிறாள். அப்போது இலைகள் சலசலக்கின்றன. இருண்ட மரங்களிடைக் குயில் பாடுகிறது; வேலாவின் இனிய மலர்கள் மணம் வீசுகின்றன.

வழிப்போக்கன் அவள் பெயரைக் கேட்கிறான். நாணத் தால் அவளுக்குப் பேச்சு வரவில்லை, பெயரைச் சொல்ல முடியவில்லை. அவனுக்குத் தான் எதுவும் பெரிதாகச் செய்து விடவில்லையே, எதற்காகத் தன் பெயரைக் கேட்டான் என்று அவள் நினைத்தாள். அவன் சென்று விட்டான். தான் செய்த சிறு உதவியைத் தலைவி நினைக்கிறாள். அவளது நெஞ்சினுள் இனிமை சுரக்கிறது; நினைக்க நினைக்க அது பாய்ந்து பரவுகிறது. இயற்கை முழுதும் புதிய அழகும் இனிமையும் பொதிந்து பொலிவ தாக உணர்கிறாள் தலைவி.

54. நின்னிடமிருந்து நான் எதையும் கேட்கவில்லை. என் பெயரை நின் செவியில் உரைத்ததில்லை. நீ விடை பெற்ற போது நான் பேசாது நின்றேன், மரத்தின்

நிழல் சாய்ந்து கிடக்கும் கேணியின் அருகே நான் தனியாக இருந்தேன். தண்ணீர்க் குடங்களோடு பெண்டிர் வீடுகளுக்குக் கிளம்பினர். "வா எங்களோடு, ஞாயிறு மேலே ஏறுகிறது" என்று உரத்துக் கூவி அழைத்தனர். ஆனால் நான் மாலான சிந்தனையில் சற்றுச் சோம்பித் தயங்கினேன்.

நீ வருகிற காலடி ஓசை நான் கேட்கவில்லை. நின் கண்கள் என்னைப்பார்த்த போது அவற்றில் சோகம் இருந்தது. "தாகமுள்ள பயணி" என்று நின் குரல் தளர்ந்து ஒலித்தது, என் பகற் கனவுகளிலிருந்து விழித்தேன். நின் கைகளில் என் குடத்துத் தண்ணீரை ஊற்றினேன். தலைக்கு மேலே இலைகள் சலசலத்தன. இடந் தெரியா இருளிலிருந்து குயில் பாடியது. சாலை வளைவிலிருந்த வேலா மலர்களின் மணம் பரந்து மிதந்தது.

நீ என் பெயரைக் கேட்டபோது நான் நாணால் பேச்சற்று நின்றேன். என் பெயரை நினைவில் வைக்க உண்மையில் நான் என்ன செய்துவிட்டேன்? ஆனால் நின் தாகம் தீர்க்க நான் தண்ணீர் வார்த்த நினைவு என் நெஞ்சில் ஒட்டிக் கொண்டு அதனை இனிமை செறிய வைத்திருக்கும். காலைப் பொழுது கடக்கலானது. பறவை அயர்ந்த பண்களில் பாடுகிறது. வேம்பின் இலைகள் தலைக்குமேல் சலசலக்கின்றன. அமர்ந்தவாறே நான் நினைக்கிறேன், நினைக்கிறேன்.

☐ இறைவன் நம்மிடம் எவ் வடிவிலும் வரலாம் அவனைச் சந்திக்க நாம் எப்போதும் அணித்தாக-ஆயத்தமாக-இருக்க வேண்டும். தெய்விக வரவு, ஒருவனை மாற்றுகிறது, உயர்த்துகிறது. அதன் அன்பு, மானிட நெஞ்சைத் தூய்தாக்குகிறது; மேன்மையுறச் செய்கிறது. அன்றாடப் பொதுவும் எளிமையும் ஆக இருப்பதும் அதிசயமும் மாட்சியும் உடைய தாகிறது.

தலைவி தெய்விகப் பயணிக்குத் தண்ணீர் வார்த்தாள் என்பது அன்பு—ஈகை-பக்தி என்பவற்றின் குறியீடாகப் பொருள் தருகிறது. அவற்றால் மானிட நெஞ்சில் பேரின்பம் சுரக்கிறது.

கடவுள் அன்புருவானவர். நமது சிறிய அன்புச் செயல்களும் அவரது நினைவில் பதிந்து ஒன்றுக்குப் பத்தாக அருளும் வாழ்த்தும் வாய்க்கச் செய்கின்றன.

☐ இந்தப் பாடல் அன்பு ஈகையை வலியுறுத்துகிறது. கொடுத்தல் என்பது மானிட வாழ்விற்குப் பெருமை தருவதாக உள்ளது.

பாடல் முழுவதும் குறியீட்டுப் பாங்கில் உள்ளது. மலர்களின் மணம் பரவுதல் என்பது உலகியல் கட்டி விருந்து ஆன்மிக விடுதலையைக் குறிக்கிறது.

☐ தலைவன் தலைவி என வரும் வைணவ பக்திக் காதல் மரபில் இருக்கும் இப்பாடலில் வேலா வேப்ப மலர்கள் நம் நாட்டுப் பின்புலத்தைக் காட்டுகின்றன. தெய்விகத் தாக்குரவால் இயற்கையே இரசவாதம் பெற்றுச் சிறந்து மகிழ்ச்சி மயமாகத் திகழ்கிறது.

O

## ஐம்பத்தைந்து
## துன்ப நெஞ்சின் பேரின்ப இசை

☐ [கவிஞராம்] காதல் தலைவி, சோம்பலாக வீட்டில் உட்கார்ந்து உறக்கமும் சோர்வுமாக இருக்கிறாள். கற்களோடு குண்டுங் குழியுமாகக் கிடக்கும் பாதையில் செல்ல அவள் கருதவில்லை. அவள் தோழி, அவளை உடனே தலைவனிடம் செல்லுமாறு சொல்லுகிறாள். அவன் தனிமையில் இவளுக்காகக் காத்திருக்கிறான்; தெய்விகக் காதல் மலரை, வாழ்வின் இடும்பைகள் தடைகள் ஆகிய முட்களுக்கு இடையில் தான் பறிக்க வேண்டும் என்பதை அவள் அறிய வேண்டும். வானில் வெயில் அதிகமாகித் தரையில் மணல் எரிந்து கொண்டிருப்பினும் அவள் தயங்கக் கூடாது என்கிறாள்.

அவள் தலைவனைச் சந்திக்கப் புறப்பட்டு விட்டால் அவளது நெஞ்சில் ஆழ்ந்த இன்பம் ஊற்றெடுக்கும்; போகும் பாதை இன்னிசை எழுப்பும். அந்த இன்னிசை துன்புறும் நெஞ்சினில் தான் பிறக்கும், பெருக்கெடுக்கும்.

55. உன் நெஞ்சின் அசதி தெரிகிறது. உன் கண்களில் இன்னம் உறக்கம் இருக்கிறது.

மலர் தன் ஒளி குலுங்க முட்களிடை ஆட்சி புரிகிறது என்ற செய்தி உன்னிடம் வரவில்லையா? விழி, விழி, எழுச்சி கொள். காலம் வறிதே கழிந்துபோக விட வேண்டா.

கல் அடர்ந்த வழியின் முடிவில் மாசற்ற தனிமையாம் நிலப் பரப்பில் என் நண்பன் தன்னந் தனியாய் உட்கார்ந்திருக்கிறான். அவனை ஏமாற்றலாகாது. விழி. எழுச்சி கொள்.

உச்சி வெயிலின் வெம்மையில் வானம் மூச்சு முட்டி நடுங்கினால் தான் என்ன? எரியும் மணல் தன் தாகப் படாத்தைப் பரப்பினால் தான் என்ன?

உன் நெஞ்சின் ஆழத்தில் மகிழ்ச்சி இருக்கவில்லையா? உன் காலடி ஒவ்வொன்றுக்கும் பாதையாகிய யாழ் தன் வேதனையாம் இன்ப இசையை எழுப்பும் அல்லவா?

□ ஆன்மிக வழி கடினமானது, துன்பம் உடையது. இடர் பல நிறைந்த கடும் போராட்டத்தின் மூலமும் வேதனை மிகத் தரும் துன்பத்தின் மூலமும் தான் மனிதான்மா பரமான்மாவுடன் ஐக்கியம் ஆதல் முடியும்.

ஆனால் அவ் ஐக்கியமானது மிகவும் இனியது. உடைந்த நெஞ்சு உடைய ஒரு பாடகன் பாடும் இனிய இசை போன்று தெய்விக இன்பம் மானிட நெஞ்சினுள் ஓடிப் பாயும். இதனை இப் பாடல் உணர்த்துகிறது.

தயங்கும் தலைவிக்குத் தூண்டுதல் தரும் தோழி வைணவ பக்திக் காதலில் வரும் கோபிகை போன்று இருக்கிறாள்.

ஆன்மிக விழிப்புக்கு வழிகாட்டும் ஆசான் என்றும் தோழீ என்ற அந்தப் பாத்திரக் குறிப்பை விளக்கலாம்.

O

# ஐம்பத்தாறு
# ஒருவரை யொருவர் காதலித்தலே காதல்

☐ கடவுட்கு மானிடனின் அன்பும் அதே போல் மானிடற்குக் கடவுளின் அன்பும் தேவை. அதனால் தான் உயிர்களுக்கு அழகும் சிறப்பும் உடைய உருவங்களைத் தந்து படைத்தலில் கடவுள் மகிழ்ச்சி கொள்கிறார். அதனாலே தான் தெய்விகத்தின் உண்மையை அவ்வப் பொழுது மானிடன் அறியுமாறு செய்யப்படுகிறான். கடவுளின் காதல் மானுடக் காதல் போன்றே அவ்வளவு உயர்வானது. கடவுளின் விருப்பம் மானிடன் வாயிலாகவே அறியுமாறுள்ளது. மனிதன் தான் கடவுளின் படைப்பின்பத்தில் பங்கு கொள்கிறான். அதனால் படைத்தற்காம் இறை மகிழ்ச்சியை மனிதன் மிகுதிப் படுத்துகிறான்.

தெய்வக் காதலன் மானிட மனத்தைத் தன்னகப்படுத்தி மானுடக் காதலில் வெற்றி கொள்ளத் தன்னை ஒப்பனை செய்கிறான். இயற்கையின் அழகும் கவின்பெரு வனப்பும் அவ் வொப்பனைச் சாதனங்களே.

இவ்வாறாக மானுடக் காதல் தெய்விக்க் காதலில் ஒன்று படுகிறது; கலக்கிறது. இதுவே காதலின் முழுப்பேறான நிலையாகும்.

மானுடனுக்கும் தெய்வத்துக்கும் உள்ள இவ்வாறான காதல், காதல்களில் மிகவும் ஏற்றமானது; விழுப்பமானது. மனிதமும் தெய்வமும் ஒன்றிவிடுவது காதலின் முழு நிறைவேற்றமாகும். அதற்கு மானுடன் வேட்கையுறுவது போன்றே தெய்வமும் வேட்கையுற்று இருக்கிறது.

56. என்னிடம் நின் இன்பம் நிரம்பி வழிகிறது என்னுமாறு உள்ளது; கீழே இறங்கி நீ என்னிடம் வந்தாய் என்று கூறுமாறு உள்ளது. பரமண்டலங்களின் தலைவனே, நான் இல்லையேல் நின் அன்பு எங்கு இருந்திருக்கும்?

இந்தச் சொத்து முழுமைக்கும் என்னை நின் பங்காளியாக்கிக் கொண்டுள்ளாய், நின் ஈறிலா இன்பக்

கூத்து என் நெஞ்சில் நிகழ்கிறது, நின் விழைவு தான் என் வாழ்வில் உருப்பெறுகிறது

அதற்காக, மன்னர் மன்னனாகிய நீ என் நெஞ்சை அகப்படுத்த நின்னை எழில்பொங்க ஒப்பனை செய்துள்ளாய். அதனால் நின் அன்பு, அன்புக்கு உரியவளின் காதலில் தன்னை இழக்கிறது. இருவரின் நிறைவான ஐக்கியத்தில் நீ காணுமாறுள்ளாய்.

☐ இருவர் ஒருவர்க் கொருவர் கொள்வதே காதல், இருதலைக் காதலே அன்புக் காதல். ஒருவரின் அன்பில்லையேல் இன்னொருவரின் அன்பு பொருளற்றது. பாராட்டவும் விரும்பவும் பெறாத அழகு மதிப்பிழந்து போகும். இவ் ஆதார உண்மையை இப்பாடல் வலியுறுத்துகிறது.

"அழியும் பொருள்களில் அழிவின்மையின் முத்திரையை நாம் எங்கே காண்கிறோம்? காதலுள்ள இடத்தில் காண்கிறோம். காதல் தான் முடிவிலாப் பொருளின் நிழலைத் தந்து, முதுமையை முழு இளமையாக வைத்திருக்கிறது; சாவை ஒரு பொருட்டாக மதிக்க மறுக்கிறது" என்று தாகுர் "வழிபாடு" என்ற பகுதியில் எழுதியுள்ளமை இப்பாடலின் அடிக் கருத்தை விளக்க உதவுகிறது.

O

## ஐம்பத்தேழு
## ஒளியே நீ வாழ்க

☐ ஒளி இனியது, மாண்புடையது, யாண்டும் பரந்துளது. நம் கண்களையும் நெஞ்சையும் அது கொஞ்சி மகிழ்விக்கிறது. உலகினின்று இருளைத் துரத்துகிறது.

தெய்விக ஒளி ஆன்மாவின் அறிவையும் அன்பையும் சுடர்தர வைக்கிறது. ஒளியின் நடனம் கவிஞரின் இதயத்துக் காதலாம் யாழின் நரம்புகளை மீட்டுகிறது. வையமுழுதையும் அது உவகையாலும் வனப்பாலும் நிரப்புகிறது. ஒளிக் கூத்துக்கு எதிர்ஒளியாக வானம் துலங்கு

கிறது, காற்று வீசுகிறது, உலகம் இன்பத்தால் போர்த்தப் படுகிறது.

படைப்புத் தொழிலில் களிப்புறுகிறான் இறைவன். ஆகவே, அவனது படைப்பு அனைத்தும் அழகாக இருக்கிறது. பட்டாம் பூச்சிகள் கூத்தாடுகின்றன; தெய்விக ஒளியில் பூவரும்புகள் வாய்திறக்கின்றன. முகில்கள் பொன்னொளியில் குளித்து மகிழ்கின்றன; நவமணிகள் யாண்டும் ஏராளமாக அள்ளிக் கொட்டப் படுகின்றன.

சிறிய இலைகளும் உவகையில் நடம் புரிகின்றன. வானம் மகிழ்ச்சியில் பொங்கி வழிகிறது.ஆழங் காணா மகிழ்ச்சி—ஆறு வையகத்தின் கரைகளை எல்லாம் கடந்து விட்டது.

57. ஒளியே, என் ஒளியே, உலகை நிறைக்கும் ஒளியே. கண்ணை முத்தமிடும் ஒளியே, நெஞ்சில் இனிமை கூட்டும் ஒளியே!

ஆகா! ஒளி, ஒளி, என் உயிரின் நடுவண் நடனமிடு கிறது. என் கண்மணீ, ஒளி என் காதல் நாண்களை வருடுகிறது. வானம் திறக்கிறது, காற்று அமர்க்களம் செய்கிறது. நிலம் எங்கணும் மகிழ்ச்சி உலாவிச் செல்கிறது.

பட்டாம் பூச்சிகள் ஒளிக் கடலில் பாய் விரிக்கின்றன. தாமரை மல்லிகைகள் ஒளி அலைகளின் உச்சி மீது எழுகின்றன.

என் கண்மணீ, மேகம் எங்கும் ஒளி தங்கத்தைத் தட்டிக் கொட்டுகிறது; ஏராளமான மணிகளை வாரிச் சிதறுகிறது.

என் கண்மணீ, கொண்டாட்டம் இலைக்கு இலை மகிழ்ச்சியைப் பரப்புகிறது. வான் நதி தன் கரை களை மூழ்கடித்து விட்டது;எங்கும் உவகை வெள்ளக் காடாக இருக்கிறது.

◻ இயற்கை கடவுளின் மகிழ்ச்சியால் நிரம்பி வழிகிறது. அவனது மகிழ்ச்சிக்கும் மாட்சிக்கும் வெளிப்பாடு அது. கடவுளின் இந்த உயர் கொடையை ஏற்று மானிடன் நன்றியும் பணிவும் உடையனாயிருத்தல் வேண்டும்.

☐ இந்தத் தன்னுணர்ச்சிப் பாட்டு ஒளிக்கு ஒரு போற்றி இசையாக உள்ளது. மாந்திரிக வலிமை கொண்டதாக நன்றி ததும்பும் பாடலாக விளங்குகிறது.

கடவுள் – மனித ஐக்கியமே மெய்யின்பத்திற்கும் அறிவிற்கும் மூலாதாரம்.

☐ ஆ! எல்லா விருப்புகளும் நிறைவேறப் பெற்று
என் மகிழ்ச்சிக் கலசம்
விளிம்பு நிறைந்திருக்கிறது
இனிய காலைப் பொழுதின்
காற்றுகளை நான் ஆட்டுகிறேன்
அவற்றின் மலர்ச்சி முகத்தை
வியக்கிறவன் 'நான்' தான்!

என்று பரவசமாகப் பாடினார் சுவாமி இராம தீர்த்தர்.

''என்னையே நினைத்து, தம் வாழ்வை என்னிடமே வைத்து, என்னைப் பற்றியே உரையாடி ஒருவர்க்கொருவர் ஒளி சேர்ப்பவர், மனநிறைவும் மகிழ்ச்சியும் உடையராயிருப்பர்'' என்ற கீதை வாக்கு இங்கு நினைதற்கு உரியது.

O

## ஐம்பத்தெட்டு
## இன்ப வெள்ளம்

☐ மகிழ்ச்சி நதி பேருலகு அனைத்தினூடும் பாய்கிறது. அந்த நதி பாய்வதால் நிலமெலாம் புல் கவின்பெற வளர்கிறது; வனப்பமிகக் கொழிக்கிறது. இத்தகைய பேருலகு அளாவிய மகிழ்ச்சி கடவுளின் படைத்தல் தொழில் மகிழ்ச்சியின் நவிற்சியேயாகும். வாழ்வும் மறைவும் அதன் இரு கூறுகள். அவை இரண்டையும் செய்வதில் கடவுள் மகிழ்ச்சி கொள்கிறார். அழித்தல் அல்லது சாதல் என்பது வாழ்வை முடித்தலோ தொலைத்தலோ அன்று; வாழ்வைப் புதுப்பித்தலே அஃது. பிறப்பு இறப்பு, மறுபடி பிறப்பு இறப்பு என வரும் வளையம் அண்டமெலாம் சுழன்று வருகிறது. சூறைக் காற்று மரங்களை வேரோடு பிடுங்கும் போதும் நிலத்தை அதிரச் செய்யும்

போதும் அவற்றை மகிச்சியினால் செய்கிறது. செந்தாமரை நோவில் அழுகிறது. ஆனால் அதன் கண்ணீர் இன்பக் கண்ணீராக உளது. ஏனெனில், தான் உதிர்ந்து மண்ணில் விழுந்ததும் புதுமையுறல் தொடரும் என்பது அதற்குத் தெரியும்.

மகிழ்ச்சியை உண்டாக்கும் வேறு வேறு சுருதிகளை ஒன்றாக்கிக் கவிஞர் தன்னைப் படைத்தோனைப் போற்றுதற்கான தனது இறுதிப் பாட்டை புனைய விரும்புகிறார்.

58. இன்பம் —

> பூமியைக் கொள்ளை கொள்ளையான புல்லாகப் பெருகி ஓடும் இன்பம், அகன்ற உலகிற் கூத் தாடும் இரட்டை ஆகிய வாழ்வு சாவு என்ப வற்றை நேர்படுத்தும் இன்பம், உயிர் அனைத்தை யும் உவகைச் சிரிப்புடன் உலுக்கி விழிக்கச் செய்யும் சூறாவளியாக அடிக்கும் இன்பம், வேதனையாம் விரிந்த செந்தாமரை மேல் கண்ணீரோடு அமர்ந்தி ருக்கும் இன்பம், தன்னிடமிருந்து ஒரு சொல்லும் இன்றி ஒவ்வொன்றையும் புழுதியில் எறிவதும் ஆன
>
> இன்பம் —
>
> அந்த இன்பத்தின் எல்லாப் பண்களும் என் கடைசிப் பாட்டில் கலந்து விடுமாக.

☐ அண்ட பேரண்டம் ஆகிய யாவும் தெய்விக இன்பத் தின் வெளிப்பாடே ஆகும். ஆதலின் கவிஞர் தன் அன்னப் பாட்டில்—கடைசிப் பாட்டில் — இன்பச் சுருதிகள் யாவும் இணைய வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறார். புல்லைக் கொழித்துப் பொலிய வைப்பதும், வாழ்வு சாவு இரண்டும் உலகெலாம் நடனமிடச் செய்வதும் சூறாவளி யைக் கடுமையாக வீச வைப்பதும் வாழ்க்கையைச் சிரிப்பு மயமாக்குவதும் செந்தாமரையை இன்பக் கண்ணீ ரால் அழ வைப்பதும் இன்பம் தான்.

இன்பம் எப்பொருளையும் புழுதியில் வீசி எறிகிறது; ஒரு சொல்லும் பேசாமல் இருக்கிறது.

☐ 'எல்லாம் இன்பமயம்' என்ற உவகைப் பெருக்கில் பாய்ந்து ஓடும் இயல்பில் அமைந்து இனிமை சேர்க்கிறது இந்தத் தன்னுணர்ச்சிப் பாட்டு. O

# ஐம்பத்தொன்பது
# பெருமை யாவும் கடவுளுக்கே

□ படைப்பு அனைத்தும் அழகு மயமாக உள்ளது. தெய்விக அன்பின் அடையாளம் அழகு. அதுவே இறைவனின் மாட்சிக்கும் கீர்த்திக்கும் அடையாளம். படைத்தவின்பால் கொண்ட காதலால் இறைவன் இத்தகு அழகைப் படைத்துள்ளான். இலைகளின் மேல் விளையாடும் பொன் ஒளி, முகில்கள் வானூடு தவழ்ந்து போதல், கன்னங்களில் வந்து கொஞ்சும் இனிய தென்றல் ஆகியன தெய்விக அன்பின் வேறு வேறாய வெளிப்பாடுகள்.

இறையன்பு, உவகை மகிழ்ச்சிகளின் செய்தியைக் கொண்டு வருகிறது. ஒவ்வோர் இரவிலும் ஒளி மாள்கிறது. ஒவ்வோர் காலையும் அது புதுப்பிக்கப் படுகிறது; புதுமைப் பொலிவுடன் உதயம் ஆகிறது. அதன் மாட்சியும் பேரெழிலும் இறைவனின் அன்புக்கும் படைப்பு மகிழ்ச்சிக்கும் நவிற்சிகளாக உள்ளன.

இவ்வாறாகிய நொடிப்பொழுதுகளில் இறைவன் தன்னை அன்புடன் நோக்குவது கவிஞர்க்குத் தெரிகிறது. அப்பொழுது அவரது நெஞ்சம் பரவசமாகிறது, மேனோக்குகிறது. அவனைப் போற்றி இசைப்பதற்கு அவனிடம் செல்கிறது. எல்லாப் புகழும் இறைவற்கே உரியன.

59. என் நெஞ்சின் நேயனே, நான் அறிகிறேன்; இலைகளின் மேல் கூத்து ஆடும் இந்தப் பொன் ஒளி, வானூடு பாய் விரித்துச் செல்லும் இந்த மந்தமான மேகங்கள், தனது குளிர்மையை என் நுதலில் விட்டுச் செல்லும் இளங்காற்று – எல்லாம் நின் அன்பன்றி வேறில்லை.

விடியலின் ஒளி என் விழிகளில் வெள்ளம் பெருக்கியது. அது என் நெஞ்சுக்கு நீ தந்த செய்தி. நின் முகம் கவிந்து கண்கள் கீழ் நோக்கி என் கண்களைக் காண்கின்றன. என் நெஞ்சம் நின் திருவடிகளைத் தொட்டு விட்டது.

□ உள்ளூடு பரந்திருக்கும் தெய்விகச் செறிவைப் பாடுகிறார் கவிஞர். அழகிய காலைப்பொழுதும் அதன் தெளிவும் துலக்கமும் காலங்காலமாக முனிவர்களையும் கவிஞர்களையும் இன்பத்தில் கிறங்க வைத்திருக்கின்றன.

கவிஞர், யாவற்றினூடும் இருக்கும் பிரிவிலா ஒன்றை - பலவாகக் காட்சி தரும். வையப் பொருண்மையின் ஒருமைக் காட்சியை - தன் அனுபூதி அனுபவத்தை - இப் பாடலில் நவில்கிறார்.

படைப்பிலுள்ள தெய்விக அழகும் அன்பும் தரும் கவர்ச்சி, வெவ்வேறாய பொருண்மையை ஒற்றுமை - ஒருமையாம் நரம்புகளால் பிணைக்கிறது.

O

# அறுபது
# குழந்தை விளையாட்டு

□ குழந்தைமையைக் கொண்டாடுகிறது இந்தப் பாட்டு. கவலையின்றிக் குழந்தைகள் உலகின் கடற்கரைகளில் முற்காலத்தில் விளையாடியது போன்றே தற்காலத்தும் விளையாடுகிறார்கள்; எதிர் காலத்தும் விளையாடுவார்கள்.

வயதானவர்களுக்கு உலகம் இன்னல்கள் இடும்பைகள் திகைப்பு நெருக்கு உடையதாக இருக்கிறது. ஆனால் குழந்தைகளுக்கோ இன்னல்கள் இடும்பைகளால் இடர்ப்படாத அப்பாவித் தன்மையோடு விளையாடும் களங்களாக உலகங்கள் இருக்கின்றன.

பரந்து அசைவற்று இருக்கும் வானம், அவர்களின் தலைக்கு மேல் விரிந்து கிடக்கிறது. கடல் கொந்தளிப்பாக இருக்கிறது. ஆனால் குழந்தைகள் இயற்கையின் இனிமை கடுமை என்ற தன்மைகள் பற்றிக் கவலைப் படாமல் ஆடியும் பாடியும் குதித்தும் கூச்சலிட்டும் விளையாடுகிறார்கள்.

அவர்களது ஆடல்கள் பல பேதைமையானவை. மணலில் வீடு கட்டுகிறார்கள்; கிளிஞ்சலை வைத்துக்கொண்டு ஊதுகிறார்கள். காய்ந்த இலைகளால் படகு செய்கி

றார்கள். வாழ்க்கைக்கான வருவாய் பற்றி அவர்கட்குக் கவலை இல்லை. வயதானோர் மீன் பிடிக்க வலை எறிகிறார்கள், நீந்துகிறார்கள், முத்தெடுக்க மூழ்குகிறார்கள்; வாணிபத்திற்காகக் கடல் மேல் செல்கிறார்கள். இத்தகைய பொருளியல் செயல்கள் குழந்தைகளின் சிந்தனையில் இல்லை. உலக உடைமைகளுக்கு அவர்கள் அக்கறைப் படவில்லை. தங்களது சின்னஞ்சிறு வாழ்க்கைக்கான அப்பாவிப் பண்புடைய விளையாட்டுகளை நடத்துகிறார்கள்.

இயற்கை அவர்களுக்குத் தாய். அவளது கடுமையான நடவடிக்கைகட்கு அவர்கள் அஞ்சுவதில்லை. அவள் தங்களிடம் புன்னகை பூத்தால் அவர்கள் அவளை நேசிக்கிறார்கள்; அவள் சினங் கொண்டாலும் அவளை அவர்கள் நேசிக்கிறார்கள். அலைகளின் கருச்சனை அவர்களுக்குத் தாலாட்டாக இனிக்கிறது. சூறாவளியும் கடல் எழுச்சியும் அழிவை உண்டாக்கக் கூடும். ஆனால் குழந்தைகள் விளையாடிக் கொண்டேயிருக்கிறார்கள்.

மக்கள் எல்லாரும் கடவுளின் குழந்தைகள். அவர்களும் குழந்தைகள் போன்றே பயன் கருதாது யாவற்றையும் அவன் திருவுளத்துக்கு விட்டுவிட வேண்டும். பற்றின்மையை அவர்களிடமிருந்து பயின்று கொளல்வேண்டும்.

60. முடிவிலா உலகங்களின் கடற்கரையில் குழந்தைகள் கூடுகிறார்கள். தலைக்கு மேலே எல்லையிலா வானம் அசைவற்று இருக்கிறது. அமைதியிலாக் கடல் இரைச்சலுடன் கொந்தளிப்பாக இருக்கிறது. முடிவிலா உலகங்களின் கடற்கரையில் குழந்தைகள் இரைச்சலோடும் ஆட்டங்களோடும் கூடுகிறார்கள்.

அவர்கள் மணலில் தங்கட்கு வீடு கட்டுகிறார்கள்; வெறும் கிளிஞ்சல்களை வைத்து விளையாடுகிறார்கள். சருகுகளை வைத்துப் படகு கட்டுகிறார்கள். புன்னகையோடு அவற்றை அகன்ற ஆழத்தில் மிதக்க விடுகிறார்கள். உலகங்களின் கடற்கரையில் தங்கள் விளையாட்டுகளை நிகழ்த்துகிறார்கள் குழந்தைகள்.

அவர்களுக்கு நீச்சல் தெரியாது. வலை வீசி எறிதல் அவர்கள் அறியார்கள். முத்துக் குளிப்போர் முத்துக் களுக்காக மூழ்குகிறார்கள். வாணிகர் தங்கள் நாவாய் களில் பயணம் செய்கிறார்கள். சிறுவர்களோ கூழாங் கற்களை ஒன்று சேர்க்கிறார்கள். அவற்றைப் பழைய படி விட்டெறிகிறார்கள். மறைந்து கிடக்கும் புதையல் களை அவர்கள் தேடுவதில்லை, வலை வீசல் எப்படி என்பது அவர்கட்குத் தெரியாது.

நகைப்புடன் கடல் குதித்து எழுகிறது. கடற்கரையின் ஓரம் புன்னகையில் மின்னுகிறது. சாவு தரக் கூடிய அலைகள் குழந்தைகட்குப் பொருளற்ற கதைப் பாக்கள் பாடுகின்றன; தாய் தன் குழந்தைக்குத் தாலாட்டுப் பாடுவது போல்வது அது. குழந்தைய ரோடு கடல் விளையாடுகிறது. மணற் பரப்பின் புன்னகையால் கடல்துறை மின்னுகிறது.

முடிவிலா உலகங்களின் கடற்கரையில் குழந்தைகள், கூடுகிறார்கள், வழியற்ற வானில் சூறைக்காற்று திரிகிறது. தடமற்ற கடலில் கப்பல் மோதி உடை கிறது. மரணம் அப்பால் இருக்கிறது. குழந்தைகள் விளையாடுகிறார்கள். முடிவிலா உலகங்களின் கடற் கரையில் குழந்தைகளின் பெரிய சந்திப்பு நடக்கிறது.

☐ இந்தத் தன்னுணர்ச்சிப் பாட்டு குறிப்புப் பொருண் மையும் குறியீட்டுப் பாங்கும் கொண்டது. சூதுவாதற்ற தன்மைக்குக் குழந்தைகள் குறியீடு. முத்துக் குளிப்போர் முத்துக்களுக்காக மூழ்குதல், வணிகர் தம் கப்பல்களிற் செல்லுதல், மறைந்து கிடக்கும் புதையல் என்பன, வயதானோர் தீதுடனும் தீதின்றியும் தேடும் பொருள் வேட்கையை, பொருள்களைக் குறிக்கின்றன,

குழந்தைமையின் பண்பான அப்பாவிக் குணத்தைப் பாராட்டிச் சிறப்பித்தல் புனைவியல் [வியப்பார்வக்] கவிஞர்களின் பொதுப்பண்பு ஆகும். பிளேக், வேட்ஸ் வர்த் ஆகியோரின் வரிசையில் தாகுரும் அதனை இனி தாகச் செய்கிறார்.

'முடிவிலா உலகங்களின் கடற்கரையில்' என்ற பல்லவி இனிமை ததும்பி அமைந்துள்ளது. O

# அறுபத்தொன்று
# குழந்தை வனப்பு

❑ சிறு சேயின் கண்களில் தவழும் இனிய துயில் ஒரு மாந்திரிகத் துயில். வெறுத்தகு செயல்களாலும் பேராசைப் பழக்கங்களாலும் துன்பமும் அச்சுறுத்தலும் பெற்று உறக்கத்திலும் துன்புறும் வயதானோர் துயில் போன்றது அன்று அது. அது எங்கிருந்து வந்தது? மின்மினிகள் விளக்கேற்றி மினுக்கொளிரும் ஒரு மாந்திரிகத் தீவில் வளரும் இரு மொக்குகளிலிருந்து வந்தது அது.

அவ்வாறே சேயின் உதடுகளில் விளையாடும் புன்னகையும் பொதுப் புன்னகை போல்வது அன்று. கனிமுதிர் பருவத்து மேகத்தைத் தொட்டு வெளிச்சமாக்கியது பிறை நிலவு. அந்த மேகம் காலையில் மேலும் அழகாகத் திகழ்கிறது. சேயின் புன்னகை - பிறைத் திங்களின் பொன்னங் கதிர்களிலிருந்து வந்தது அது.

குழந்தையின் அங்கமெல்லாம் மின்னும் இனிய புதுப் பொலிவு எங்கிருந்து வந்தது? அதன் தாய் கன்னியாயிருந்த காலத்தில் அவள் நெஞ்சில் இனிய மெல்லிய காதல் நினைப்பு புதிராக நிறைந்திருந்தது. அதிலிருந்து வந்தது பூம்பொலிவு.

61. குழந்தையின் கண்களில் தங்கிச் செல்லும் துயில்-அது எங்கிருந்து வந்தது? யாருக்காவது அது தெரியுமா? ஆம். தேவதை ஊரில் மங்கலான ஒளி மினுக்கும் காட்டில் நிழல்களுக்கு இடையே இரண்டு மெல்லரும்புகள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. அங்குக் குடியிருப்பு உடையது அந்தத் துயில் என்று ஒரு பேச்சு இருக்கிறது. அங்கிருந்து அது குழந்தையின் கண்களை முத்தமிட வருகிறது.

 உறங்கும் போது குழந்தையின் உதடுகளில் மின்னிடும் புன்னகை — அது எங்கே பிறந்தது? அது யாருக்குத் தெரியும்? ஆம். வளர்பிறைத் திங்களின் ஓர் இளங் கதிர், மறையும் இலையுதிர் காலத்து மேகத்தின் ஓரத்தைத் தொட்டது. அது பனித்துளியில் குளித்த விடியற் காலத்துக் கனவின்போது

புன்னகை அதில் முதன் முதலாகப் பிறந்தது என்று ஒரு பேச்சு உள்ளது. அந்தப் புன்னகை குழந்தையின் உதடுகளில், அது உறங்கும் போது மின்னுகின்றது.

குழந்தையின் அங்கங்களில் பூத்திருக்கும் இனிய மெல்லிய பொலிவு — இது நாள் வரை அது எங்கே மறைந்திருந்தது என்று யாருக்காவது தெரியுமா? ஆம். அதன் தாய் இளம் கன்னியாயிருந்த பொழுது அவளது நெஞ்சில் மெல்லிய மௌனமான காதல் மருமமாக பரவிக் கிடந்திருந்தது. அந்த இனிய மெல்லிய பொலிவே குழந்தையின் அங்கங்களில் பூத்திருக்கிறது.

□ இந்தப் பாடலின் வசீகரம் அதில் உள்ள இன்சுவைவையான உவமைகளில் பொதிந்துள்ளது. உவமைகள் குறிப்புப் பொருள் உணர்த்துவனவாக, கற்பனை கனிந்தவையாக உள்ளன. தாகுர் என்ற கவிமேதையின் வியப்பார்வப் புனைவியல் பாங்கு சுவை மிக்கது என்பதைக் காட்டும் பாடல்களில் இதுவும் ஒன்று.

□ 'வானகம் நம் குழந்தைப் பருவத்தில் உள்ளது' என்றனர் கவிஞர் வேட்ஸ்வர்த்.

O

## அறுபத்திரண்டு
## ஏன் என்பது விளங்குகிறது

□ தந்தை, தன் குழந்தைக்குப் பல வண்ணப் பொம்மைகள் வாங்கி வருகிறான். குழந்தைக்குப் பாட்டுப் பாடுகிறான். இனிப்புகள் தருகிறான். அவனது இனிய முகத்தில் முத்தமிடுகிறான். இவ்வகைகளில் எல்லாம் குழந்தை மகிழ்ச்சியாக இருக்குமாறு செய்ய முயல்கிறான்.

குழந்தையின் முறுவலையும் இனிமை ததும்பும் பார்வையையும் கண்டு மகிழ்ச்சி கொள்கிறான். அவ்வாறே நாமெல்லாம் கடவுளின் குழந்தைகளாக உள்ளோம்.

இயற்கையில் பல்வேறு அழகுகளை-வண்ணம் கொழிக்கும் மேகங்கள், மலர்கள், இனியசாறு பொதிந்த கனிகள், இனிய விடியல் ஒளி, குளிர் பூந் தென்றல் காற்று முதலியயவற்றைத் தன் மக்களின் இன்பத்திற்கும் சுகத்திற்கும் படைத்தளித்துள்ளார் கடவுள். அழகிய பொருள்களை அவர் படைக்கிறார். ஏனெனில் தன் மக்கள். மகிழ்வது தந்தைக்கு மகிழ்ச்சி தருவது போலக் கடவுளுக்கு அது மகிழ்ச்சி தருகிறது.

62. வண்ண வண்ணப் பொம்மைகளை உனக்கு நான் கொண்டு வரும் போது, என் குழந்தாய், மேகங்களில், தண்ணீரில், இவ்வளவு வண்ணங்கள் விளையாடுகின்றனவே, அது ஏன் என்று எனக்கு விளங்குகிறது. மலர்கள் இவ்வாறு வண்ணம் தீட்டப் பெற்றிருக்கின்றனவே. அது ஏன் என்பது உனக்கு நான் வண்ண வண்ணப் பொம்மைகள் தரும் போது எனக்கு விளங்குகிறது.

நீ ஆடுதற்கு நான் பாடும் போது, இலைகளில் ஏன் இசை இருக்கிறது என்பது உண்மையில் எனக்குத் தெரிகிறது. அலைகள் தமது கூட்டிசைக் குரலைக் கேட்டுக் கொண்டிருக்கும் நிலத்தின் நெஞ்சுக்கு அதனை ஏன் அனுப்புகின்றன என்பதை நீ ஆடுதற்காக நான் பாடுங்கால் தெரிந்து கொள்கிறேன்.

உன் ஆசையான கைகளுக்கு நான் இனிப்புகள் கொண்டு வரும்போது; பூவின் கிண்ணத்தில் ஏன் தேனிருக்கிறது என்பது விளங்குகிறது. உன் ஆசையான கைகளுக்கு நான் கனிகள் தருங்கால், அவை ஏன் அறியப்படாமல் இன்சாற்றால் நிரம்பியிருக்கின்றன என்பது விளங்குகிறது.

நீ சிரித்தற்காக நான் உன் முகத்தில் முத்தமிடுங்கால், என் கண்மணீ, காலை ஒளியில் வானிலிருந்து என்ன இன்பம் பாய்ந்தோடி வருகிறது என்பதை உறுதியாக உணர்ந்து கொள்கிறேன். வேனில் இளங்காற்று என் மேனிக்கு என்ன சுகம் கொண்டு வருகிறது என்பதை, நீ சிரிக்க நான் உன்னை முத்தமிடுகையில் விளங்குகிறது.

☐ இந்தப் பாடலும் குழந்தைமை வாழ்வைச் சிறப்பிக்கிறது.

இயற்கையின் அழகை, படைப்பின் உண்மையை, மகிழ்ச்சியைப் புரிந்து கொள்ளக் குழந்தைகள் உதவுகிறார்கள்.

“உவகை விளையாட்டை நடைமுறையில் கொணர்ந்தான் படைப்பாளி; பூமி அவனது இன்பம்; விளையாட்டில் படைப்பு விரித்து வைக்கப்படுகிறது” என்றார் கபீர்.

O

# அறுபத்து மூன்று
# யாவருங் கேளிர்

☐ இறைவன் எங்கும் உள்ளான். அவன் ஒருவன்; பகுக்கப்பட ஒண்ணாதவன்; பரம் பொருள். ஆனால் அவன் தன்னை எண்ணற்ற வடிவுகளாக, தோற்றங்களாகப் புலப்படுத்துகிறான். ஒவ்வொரு வடிவமும், இயற்கையின் ஒவ்வொரு பொருளும் தெய்வத்தின் வெளிப்படு தோற்றமே. ஆகவே எல்லாரும் நம் நண்பர்கள், நெருக்கமும் உறவும் உடையவர்கள்.

மனிதன் சாவுக்கு அஞ்சுகிறான். ஏனெனில் சாவு என்பது, உயிரானது ஏதோ அறியாத இடத்திற்கு - இப்போது நன்கு அறிந்து பழகிய உலகை விட்டுப் பழக்கமில்லாத இடத்திற்குப் - போகிறது என்று பொருள்படுகின்றது. ஆனால் எதுவும் புதியது என்பதில்லை; பழக்கமில்லாதது என்பதில்லை. ஏனெனில் இறைவன் யாங்கணும் இருத்தலால்-எல்லாப் பொருளும் இறைமை புலப்படும் பொருளாக இருத்தலால்-பழைமை புதியதில் காட்சி தருகிறது. எந்த ஓர் உலகாக இருப்பினும் உயிர் எந்த வடிவிற் பிறந்தாலும் இறைவனே நம் தோழனாக உள்ளான். மானிட உயிர் அழிவற்றது, அதன் ஒரு தோற்றம் மற்றவற்றோடு அன்புத் தளையால் பிணைக்கப்பட்டுள்ளது. பழைமை இடையறாது புதுக்கப் பெறுவது என்பது படைத்தல் தொழிலில் இறைவன் கொள்ளும் மகிழ்ச்சியின் அடையாளம் ஆகும்.

அறிந்திராததற்கும் பழக்கமிலாததற்கும் மனிதன் கொள்ளும் அச்சம், இறைமையின் உண்மை இயல்பை அறியாத அறியாமையிலிருந்து எழுகின்றது. மேலாம் ஒரே பரம் பொருளின் வேறுபடு தோற்றங்களே எல்லா உயிர் வடிவங்களும் என்ற அடிப்படை உண்மையை மனிதன் உணர்ந்து கொண்டால் அதன்பின் புதியது- பழக்கமிலாதது- என்று எதுவும் தோன்றாது. அச்சம் யாவும் மறைந்தொழிந்துபோகும்.

வையத்திற் கணக்கின்றித் தோன்றும் உருவங்களாகக் காணப்படுவது என்று முளதாம் உண்மை-இறைமை-யின் மலர்ச்சிக் கூறுகளே என்று உணர்வதால் கிடைக்கும் இன்பத்தைத் தான் இழந்துவிடலாகாது என்று கவிஞர் வேண்டிக் கொள்கிறார்.

63. நான் அறிந்திராதவர்களை நண்பர்களாக்கி என்னைத் தெரியச் செய்திருக்கிறாய். எனக்குச் சொந்தம் அல்லாத வீடுகளில் எனக்கு இருக்கைகள் தந்திருக்கிறாய். தொலைவை அண்மைக்குக் கொண்டு வந்துள்ளாய். புதியாரை உடன்பிறந்தோர் ஆக்கியுள்ளாய்.

பழக்கப்பட்ட என் உறைவிடத்தினின்று அகல்வதற்கு மன அமைதி இழந்திருக்கிறேன். புதியதில் பழையது தங்கியிருக்கிறது, அங்கே நீயும் தங்கியிருக்கிறாய் என்பதை நான் மறந்து விடுகிறேன்.

பிறப்பு இறப்புகள் மூலம் இவ் வுலகிலோ வேறு உலகுகளிலோ எங்கே என்னை நடத்திச் சென்றாலும் நீயே—அதே நீ தான்-முடிவற்ற என் வாழ்வில் பழக்கமிலாதாரொடு என் நெஞ்சை மகிழ்ச்சிப் பிணிப்பில் எப்போதும் இணைக்கிற ஒரே தோழனாக இருக்கிறாய்.

நின்னை ஒருவன் அறிவானேல், அப்போது அன்னியர் என்று யாருமிரார்; கதவு எதுவும் அடைக்கப் பட்டிராது. பலரொடு கூடிய விளையாட்டில் ஒருவனாம் உன் தொடர்பால் வரும் பேரின்பத்தை

ஒருகாலும் நான் இழந்துவிடலாகாது என்ற என் வேண்டுதலுக்கு அருள் புரிவாயாக.

☐ இந்தப் பாட்டு, ஆன்மா மறுபடி பிறக்கும் என்பதிலும், கடவுள்-இயற்கை-ஆன்மா என்பன ஒரே பரம் பொருள் கூறுகள் என்பதிலும் கவிஞர்க்கு இருந்த நம்பிக்கையை உணர்த்துகிறது. அனுபூதி அருளியல் பற்றிய அவரது தெளிந்த அறிக்கையாகவும் இது திகழ்கிறது.

☐ நோபெல் பரிசு பெற விருக்கிறார் என்ற செய்தி தாகுருக்கு ஸ்வீடிஷ் அக்காடெமியிடமிருந்து வந்த போது இந்தப் பாடலிலுள்ள ''தொலைவை அண்மைக்குக் கொண்டு வந்துள்ளாய்; புதியாரை உடன் பிறப்பாக்கியுள்ளாய்'' என்ற அடியைப் பதிலாகத் தந்தி மூலம் அனுப்பி வைத்தார் அவர் என்பது அறிதற்கு உரியது.

☐ படைப்பின் மீதிப் பகுதியோடு தனக்கு உறவு ஏற்படுத்தித் தருவதற்காகக் கடவுளுக்கு நன்றி கூறுகிறார் கவிஞர். O

# அறுபத்துநான்கு
# சடங்குகளின் உயிரற்ற தன்மை

☐ கவிஞரின் இல்லம் இருட்டாகத் தனிமையில் இருந்தது. விளக்கு ஏற்றுதற்கு அதனைத் தேடினார்.

அந்தி இருளில் ஒரு மாது. தனிமையான ஆற்றங்கரையில் கைவிளக்குடன் போய்க் கொண்டிருந்தாள். தனக்கு விளக்கு தேவைப்பட்டதால் கவிஞர் அந்த மாதிடம் விளக்கினைத் தருமாறு வேண்டினார். ஆனால் அவளோ விளக்கை ஆற்றில் விடுகின்ற சம்பிரதாயப்படி அதனைச் செய்யப் போவதாகச் சொல்லித் தரமறுத்தாள்.

வீணாக விளக்கு அலைகளில் இழுத்துச் செல்லப்படுவதைக் கவிஞர் கண்டார்.

அதன் பின் இருள் கூடும் நேரத்தில் விளக்குடன் வந்த அந்தப் பெண்ணிடம் விளக்கைத் தருமாறு வேண்டினார்

கவிஞர். ஆனால் அதை வானத்துக்குப் படைப்புச் செய்வதாகக் கூறி அவரது கோரிக்கைக்கு மறுப்பு அளித்தாள் அவள்.

அந்த விளக்கு வீணே வெட்ட வெளியில் எரிந்து போவதைக் கண்டார் கவிஞர்.

அதே போன்று பின்பு பற்பல விளக்குகள் விளிக்கொளித் திருநாள் என்ற சடங்கிற்காக வீணே எரிந்தன. கவிஞர்க்கு விளக்கு ஒன்றும் கிடைக்கவில்லை.

64. தனியான ஆற்றங்கரைப் பக்கம் உயரமான கோரைப் புற்களிடை நான் அவளிடம் 'மாதே, உன் மேலாடையால் விளக்கை மறைத்துக் கொண்டு எங்கே செல்கிறாய்? என் வீடெல்லாம் இருளாகத் தனிமையில் கிடக்கிறது. உன் விளக்கை எனக்கு இரவல் கொடு'' என்றேன். அவள் தன் கரிய விழிகளை ஒரு கணம் உயர்த்தி மங்கல் ஒளியிடை என் முகத்தைப் பார்த்தாள். ''பகலவன் மேற்கே மறைகையில் என் விளக்கை ஆற்றில் மிதக்கவிட வந்திருக்கிறேன்'' என்றாள்.

உயரமான கோரைகளிடை நான் தனியாக நின்றேன். அவளது விளக்கின் அசையும் சுடரைப் பார்த்தேன்; பயனிலாது அலைகள் மேல் இழுத்துச் செல்லப்படுதல் கண்டேன்.

இருள் கூடும் அமைதியில் அவளிடம் ''மாதே உன் விளக்குகள் எல்லாம் ஏற்றப்பட்டுள்ளன. இப்போது விளக்குடன் எங்கே போகிறாய்? என் வீடெல்லாம் இருண்டு தனித்துக் கிடக்கிறது. உன் விளக்கை இரவல் கொடு'' என்றேன். தன் கரிய விழிகளை உயர்த்தி என்மேல் பார்வை செலுத்தினாள். ஐயம் உடையவளாக நின்றாள். கடைசியில் அவள் ''என் விளக்கை வானுக்குப் படையலிட நான் வந்திருக்கிறேன்'' என்றாள். நான் நின்றேன்; வெறும் வெளியில் அவளது விளக்கு பயனிலாது எரிவது கண்டேன்.

நிலவு இல்லாத நள்ளிருள் மயக்கில் அவளிடம் கேட்டேன்; 'மாதே மார்பின் அருகே விளக்கைப்

பிடித்துக் கொண்டு எதைத் தேடி நிற்கிறாய்? என் வீடெலாம் இருண்டு தனித்துக் கிடக்கிறது. உன் விளக்கை இரவல் கொடு'' என்றேன். ஒரு நிமிடம் அவள் பேசாது இருந்தாள், நினைந்தாள், இருளில் என் முகம் நோக்கினாள். ''விளக்கொளி விழாவுக்கு என் விளக்கைக் கொணர்ந்திருக்கிறேன்'' என்றாள். நான் நின்றேன். விளக்குகளுக்கு இடையே அவளது விளக்கு பயனிலாது ஒழிவது கண்டேன்.

☐ ஏழைகள் தேவைகளால் அலைக்கழி படுகிறார்கள். துன்பங்களால் இருளில் திக்குமுக்காடுகிறார்கள். அதே சமயம் காசு பணங்கள் வெறும் சடங்கு சம்பிரதாயங்களில் வீணே அழிக்கப் படுகின்றன. இந்து சமயத்தின் சடங்குகளில் உள்ள உயிரற்ற தன்மையை - வெற்றுத் தனத்தை - கூர்மையாக இந்த எளிய தன்னுணர்ச்சிப் பாடலில் கவிஞர் நயமுற எடுத்துக் காட்டுகிறார்.

உண்மையான இறையன்பு வழிபாடு என்பன சடங்கு சம்பிரதாயங்களில் இல்லை; துன்புறுவோர் தேவைப்படுவோர்க்கு உதவுவதில் இருக்கிறது. விளக்கும் பூவும் புகையும் படையலும் ஆற்றிலும் மேட்டிலும் பயனின்றி வைக்கப்படுகின்றன. அவ்வாறு செய்வோரை; ஏழை எளியோர்க்கு உதவுங்கள் என்றால் முணுமுணுக்கிறார்கள். சடங்குகளின்பால் உள்ள குருட்டு நம்பிக்கைகள் விருப்பங்கள் காரணமாக உண்மை இறைவழிபாட்டை மக்கள் மறந்துவிடுகிறார்கள்; உண்மையான வழிபாடு மக்கட் பணியில் இருக்கிறது என்பதை உணர்த்தினாலும் சம்பிரதாயங்களின் பழக்க மயக்கத்தினால் கடைப் பிடிக்கத் தயங்குகிறார்கள் என்பதனைக் கவிஞர் இனிதாக எடுத்து இயம்புகிறார்.

☐ நீதியுரைக்கும் கீதாஞ்சலியில் மென்மையான அங்கதமும், சீர்திருத்த நோக்கமும் இருப்பதை இப் பாடலால் அறிய முடிகிறது.

☐ 'பயனிலாது' என்ற தொடர், பாடலில் திரும்பத் திரும்ப வருவது ஆணியைத் திரும்பத் திரும்ப அடிப்பது போலக் கருத்தை உறுதியாக உட்செலுத்த உதவுகிறது.

# அறுபத்தைந்து
# அனுபூதி இனிமை

▢ மானிட வாழ்வு அன்பாலும் இறைப்பண்பாலும் அமுதாக நிரம்பி வழியும் பொழுது அது கடவுள் அருந்தும் கலம் ஆகிறது. மானிடன் இசைக் கருவி; இறைவன் அதில் இன்னிசை எழுப்புகிறான், அதில் அவன் மகிழ்கிறான். தன் இசையைச் செவிமடுக்கிறான், இயற்கையில் பல வடிவான அழகுகளைப் படைக்கிறான் இறைவன்; அவற்றால் மானிடன் பெறும் இன்பத்தில் தானும் இன்பம் எய்துகிறான்.

இறைவனிடம் கொள்ளும் அன்பும் இணக்கமும். ஆன்மாவைப் பேரான்மாவுடன் இசைவு பெற வைக்கின்றன. அதனால் அதனுள் தெய்விக இன்பமும் தெய்வ அருள் உணர்வும் உள்ளே பொங்குகின்றன. அவை இனிய இசையாக 'வெளிப்போதருகின்றன. இனிமை கொழிப்பதும் புனிதத் தன்மையதும் ஆய இன்னிசை-துறை தோறும் செய்யப்படும் புனித சாதனை - யாவும் ஆன்மா தீங்கெலாம் நீங்கித் தூய்தான பின்னரே இயல்வதாகின்றது.

இவ்வாறாக ஆன்மாவுக்கு, என்றுமுள ஆன்மாவுடன் இணக்கம் வரப்பெறுகின்றது. இத்தகைய இறைமை-இறையன்பு ஐக்கியத்தின் விளைவால் வருகிறது அனுபூதி இனிமை.

65\. என் இறைவா, நிரம்பி வழியும் என் உயிர்க் கலத்தில் என்ன தெய்விக அமுதைப் பெறக் கருதுகிறாய்?

என் கவிஞனே, நின் படைப்பை நான் என் கண்களால் பார்ப்பதும், நின் என்றுமுளதாம் சீரிசையைக் கேட்பதற்கு என் செவிவாயிலில் நிற்பதும். நினக்கு இன்பங்களா?

நின் உலகு என் உள்ளத்தில் சொல்நெசவு நடத்துகிறது. நின் உவகை அதற்கு இசை பெய்கிறது. அன்பால் நீ என்னைத் தருகிறாய், பின் நின் இனிமை யாவும் என்னில் காண்கிறாய்,

□ கடவுள், கவிஞரின் கவிஞராக இருக்கிறார். கவிஞர் வரைவது எதுவாயினும் அது தெய்விக அருள் உணர்வுத் தூண்டலாலே வருகிறது. மனிதன் பக்தன்; இறைவன் பக்தியின் இலக்கு – இது என்றும் உளதாம் கடவுள்-மனித உறவு. அந்த உறவு மானிட ஆன்மாவுக்குப் பேரின்பமாகும்; தெய்விகத்துக்கும் ஆழ்ந்த மகிழ்ச்சி யளிக்கும், இந்த அனுபூதி உண்மையை உரைக்கின்றது இந்த இனிய தன்னுணர்ச்சிப் பாடல்,

மெய்யன்பரின் ஆன்மா மாசுகள் நீங்கப் பெற்றுப் பேரான்மாவுடன் இணக்கம் பெறும் பொழுது அனுபூதி இன்பம் கிட்டுகிறது என்பது மகான்கள் கண்ட பொது வான அனுபூதி உண்மையாகும்.

O

## அறுபத்தாறு
## கன்னிப் பரிசில்

□ தன் நெஞ்சின் உள்ளறையில் கவிஞர் ஒரு முடிவான பரிசில் வைத்திருக்கிறார். அது பொதுவல்லாத ஒரு பரிசுப் பொருள். படைப்பியற் கற்பனையில் அது மறைந்து உறைகிறது. தன்னை ஆக்கியோற்குத் தன் கடைசிப் பாடற் படையலாக அதனை அவர் படையல் செய்வார். அந்தப் பரிசில் ஒரு கன்னி போல்வது.

வீட்டில் மறைவாக இருப்பாள்; பகலொளியில் முகங் காட்ட மாட்டாள் அந்தக் கன்னி. முகத்திரையை நீக்கித் தன் காதலற்கு மட்டும் தன் சுடர்மிகு அழகு முகம் திறப்பாள். வேறு யாருடைய தேனின் கசிவந்த சொற் களும் அவளை மசிய வைக்க மாட்டா.

அவ்வாறே கவிஞருள் மறைந்திருக்கும் திறம் சொற்களில் வெளிப்படாது இருக்கின்றது. அழகிய அவளது படிமத் தைக் கவிஞர் தன் நெஞ்சில் தாங்கி எல்லாக் காலங் களிலும் ஊர் ஊராக அலைந்திருக்கிறார், ஆனால் அவரது எண்ணங்கள் செயல்களையும், உறக்கம் கனவு களையும், ஆட்சி கொண்டிருந்த அவளோ ஒதுங்கியே

இருந்தாள்; தூயளாக, தொடப் படாதவளாக இருந்தாள். ஓர் இமைப் பொழுதாவது கிடைக்கும் அவள் காட்சிக் காகப் பலர் வீணே முயன்றார்கள்; சோர்ந்து புறம் போந்தார்கள். அவள் அவரது நெஞ்சில் மறைந்து இருக்கிறாள்; தன் தெய்வத் தலைவன் வருகைதந்து, தன்னை ஏற்றுக் கொள்ளும் நல்ல நேரத்துக்காகக் காத்திருக்கிறாள்.

66. என் உயிரின் உள்ளறையில் மங்கலான ஒளிக் கதிரிலும் கண நேரக் காட்சிகளிலும் குடியிருப்பவள்' காலைப் பகலொளியில் தன் முகத்திரையை விலக் காதவள், இறைவா, இவள் நினக்கு என் இறுதிப் பரிசிலாக என் இறுதிப் பாடலில் அடங்கி வருவாள்.

சொற்கள் அவளிடம் மணம் நயந்து வந்தன, தோல் வியுற்றன; இணக்கம் பெற நீண்டு வந்த ஆர்வமான கைகள் வறிதே ஒழிந்தன.

நாடு நாடாக நான் அலைந்த காலை அவளை என் நெஞ்சினுள் வைத்திருந்தேன். அவளைச் சூழ்ந்தே என் வாழ்வின் வளர்ச்சிகள் எழுந்தன; தளர்ச்சிகள் இயைந்தன.

என் எண்ணங்கள் செயல்களில், என் துயில்கள் கனவுகளில் அவள் ஆட்சிபுரிந்தனள்; இருப்பினும் தனித்தும் ஒதுங்கியும் இருந்தனள்.

மானுடர் பலர் என் கதவைத் தட்டினர், அவளைப் பெற வேண்டினர், ஏமாற்றத்துடன் திரும்பினர்.

உலகில் அவள் முகத்தை நேருக்கு நேர் கண்டவர் இல்லை. நீ ஏற்றுக் கொளல் கருதித் தன் தனிமை யில் காத்திருக்கிறாள் அவள்

□ குறியீட்டு நெறியில் அமைந்துளது இப்பாடல் கருத்து. தெய்விகக் காதலனிடம் தான் கொண்ட பக்திக் கற்பும் தூய்மையும் மாறாது போற்றி வரும் ஆன்மாவே கவிஞர் தன்னைப் படைத்தோற்குத் தரவிருக்கும் இறுதிப் படையலாகும். இதுகாறும் அவர் புனைந்திராப் போற்றிப் பாடலாகத் தான் புண்ணியக் கருதும் கவிதைத் திறமாகவும் இருக்கலாம் அந்தப் பரிசுப் பொருள்.

# அறுபத்தேழு
# நீண்ட வானமும் சிறிய கூடும்

இறைவன் வரம்பிலா வானமாகவும் இருக்கிறான். சிறிய பறவை குடியிருக்கும் கூடாகவும் இருக்கிறான். இறைவனின் வரம்பிலா இயல்பை வானம் காட்டுகிறது, வரம்புடைமையைக் கூடு தெரிவிக்கிறது. பறவைக்குக் கூடு என்பது அதற்கு அமைதியும் இருப்பும் தரும் ஓர் இடம், மனிதான்மா இறையான்மாவில் புகலிடம் காண்கிறது; அங்கே அது இறைவனின் அன்பாலும் அருட் கொடைகளாலும் வளர்ந்து பக்குவ முதிர்ச்சி பெறுகிறது.

வரம்புடையன் என்ற பாங்கில் இறைவன் இயற்கையின் பொருள்களில் எல்லாம் இருக்கிறான். காலை மாலையாம் பொழுதுகள் தத்தம் அழகுகள் கவர்ச்சிகளோடு இறைமையின் தோற்றங்களாகத் திகழ்கின்றன, இறைமை ஒன்றே; அஃது அலகிலாதது. எல்லையோ முடிவோ இன்றி, ஒளி நிரம்பி, இரவு பகல் நிறம் ஒலி என்ற வேறுபாடின்றி இருக்கும் வானத்தால் அஃது புலப்படுகின்றது; அதிசயமும் பேரச்சமும் தருவதாக அது வரம்பின்மையில் விளங்குகின்றது.

வரம்புடையதாக விளங்கும் இறைமை தன் படைப்புக்களிடம் அன்பு, நேயம், அளக்கலாகாக் கொடை, அருள் இரக்கம் என்பவற்றால் விளங்குகின்றது. வரம்பிலதாக விளங்குகையில் அதன் பண்பு பயங்கரமும் கடூரமும் தருவதாக இருக்கின்றது. படைப்பாளி, துடைப்பாளி; வாழ்க்கை மரணம் என்கின்ற கூறுகள் தலைவனை இனங் காட்டுகின்றன.

67. நீயே வானமாக இருக்கிறாய், பறவைக் கூடு ஆக இருக்கிறாய்.

கவின்மிக்கோனே, கூட்டினுள் வண்ணங்கள் ஒலிகள் மணங்களால் ஆன்மாவை வளைத்திருப்பது நின் அன்பேயாகும்.

காலையாம் கன்னி ஓசையின்றிப் புவியினுக்கு முடிசூட்ட, அழகெனும் மாலையை வைத்திருக்கும் தன்

பொற் கூடையை வலக்கையில் ஏந்திக் கொண்டு வருகிறாள்.

மாலையாம் மங்கை, ஓய்வு எனும் மேலைக் கடலி லிருந்து அமைதி எனும் தண் புனல் நிறைத்த தன் பொற்குடம் ஏந்திக் கொண்டு, ஆயர்கள் இருந்து நீங்கிய தனித்த புல்வெளிகளில் சுவடு அற்ற பாதை களில் வருகிறாள்.

ஆன்மா பறப்பதற்கு எங்கே எல்லையிலா விசும்பு பரந்து விரிந்திருக்கிறதோ அங்கே மாசிலா வெள்ளை ஒளி ஆட்சி புரிகிறது. ஆங்குப் பகலிரவு இல்லை, வடிவு நிறம் இல்லை, ஒருபோதும் ஒருபோதும் ஒரு சொல்லும் இல்லை.

☐ பூமிக்கு மாலையிட வரும் பூக்காரியாகக் காலைப் பொழுது வருணனை பெறுகிறது; அவ்வாறே தலையில் தண்ணீர்க் குடம் எடுத்து வரும் மாதாக மாலைப் பொழுது வருணிக்கப் பெறுகின்றது. பழங்கதைப் பாங்கில் புதுத் தொன்மங்களை உருவாக்குவதில் கவிஞர் மிகத் தேர்ந்தவர் என்பதனை இவ் வருணனைகள் தெரிவிக் கின்றன.

☐ இறைமையின் கூறுகளான வரம்பிலாமை வரம்பு டைமை என்ற இரண்டையும் உணர்ந்தாலே நம் உணர்வு நிறைவு பெறுகிறது என்பதனைத் தெரிவிக்கிறது இத் தன்னுணர்ச்சிப் பாடல்.

☐ வேறுபட்ட சொற்களாலும் குறியீட்டாலும் படைப் பாளி-துடைப்பாளி என்ற இருவகையான கடவுள் இயல்பு களையும் வாழ்வு -சாவு இரண்டுக்கும் அவனே தலைவன் என்ற உண்மையையும் இப்பாடல் இயம்புகிறது.

☐ ஒன்றான பொருள் இருக்கிறது
பலவாக இருப்பவை மாறுகின்றன மறைகின்றன
விண்ணின் ஒளி எப்போதும் சுடர்கிறது
பூமியின் நிழல்கள் பறந்து விடுகின்றன
வாழ்க்கை, பலநிறக் கண்ணாடியாலான
மேன் முகடு போல

நிரந்தரத்தின் தூய வெளிச்சத்தை
மாசாக்குகிறது
மரணம் அதனை நொறுக்கித் தூளாக்கும் வரை
அது நடக்கிறது

என்று அடோனியஸ் ஸில் வரும் ஷெல்லியின் சொற்கள் இங்கு நினைவு கூர்தற்கு உரியன.

'மாசிலா வெள்ளை ஒளி என்ற தாகுரின் தொடர், ''வெள்ளை ஒளியை - தூய வெளிச்சத்தை - மாசுபடுத்துகிறது'' என்ற ஷெல்லியின் தொடர்களை நினைவு படுத்துகிறது.

O

# அறுபத்தெட்டு
# இறைமையின் பரிவு

☐ தன் படைப்பு அனைத்தையும் இறைவன் நேசிக்கிறான். தன் கதிரொளிக் கற்றையை நிலவுலகிற்கு அவன் அன்பால் அனுப்புகிறான். தன் குழந்தையைத் தாய் அன்பு ஆதரவோடு கொஞ்சுவது போலக் கவிஞரைத் தழுவிக் கொள்ள நீட்டிய கைகளோடு அது வருகிறது.

இளம்வெய்யோனின் கதிர்கள் தெய்விகச் செய்தியை உணர்த்தி ஆறுதலும் அமைதியும் தர முன் வருகின்றன. அவரது துன்பக் கண்ணீராலும் பெருமூச்சுக்களாலும் ஆன மேகத்தைத் தூக்கிக் கொண்டு அவை இறைவனிடம் செல்கின்றன. பெருமூச்சுக்களும் கண்ணீரும் மானிட வேதனைகளின் குறிப்பான சின்னங்களாகும்,

தன் படைப்பின்பால் அளவற்ற அன்பு நிறைந்து ததும்புகிறது கடவுளின் நெஞ்சம். தன் அன்பையும் கொடைப் பரிவையும், துயருறும் மானிடத்திடம் பொழிவதில் இறைவற்கு இன்பம் உண்டாகிறது. அவன் மாசு மறுவற்றவன். இரவிற் சுடர் பொழியும் விண்மீன்கள் என எக்காலத்தும் ஒளி திகழ்பவன் அவன். மானிடத் துயரமாகிய பனிமுகிலைத் தெய்விக அழகால் ஒளியூட்டு

கிறான். எண்ணற்ற வடிவங்களையும் மாறிக் கொண்டே யிருக்கும் நிறங்களையும் வழங்குகிறான்,

களங்கமின்மையும் தெள்ளத் தெளிந்த அமைதியும் உடைய அவன் தன் நெஞ்சைத் துயரத்தால் போர்த்துக் கொள்கிறான், மானிட வாழ்வின் இரங்கற்பாலவாம் துயர நிழல்களால் தன் நட்சத்திர வெளிச்சத்தை மங்கச் செய்கிறான். மேகம் ஒன்று, முடிவிலா நீல விசும்பை மூடி அதன் அழகையும் துலக்கத்தையும் மறைப்பது போல, ஆதியந்தமிலா இறைமை, மானிடத் துன்பத்தால் தன்னைப் போர்த்திப் பரிவினால் இருள் படியச் செய்து கொள்கிறது. தன் ஆழ்ந்த அன்பு காரணமாக மானிடக் கண்ணீர்ப் பெருமூச்சால் ஆன மேகங்கள் தன்னை அடைந்ததும் இறைவன் தன் மாசிலா மணிஒளியை மங்க வைத்துக் கொள்கிறான்.

68. நின் பரிதி ஒளிக் கற்றை நீட்டிய கைகளோடு இந்த என் மண்ணகம் வருகிறது. என் கண்ணீரால், பெருமூச்சால், பாடல்களால் இயன்ற முகில்களை நின் காலடிக்கு எடுத்துச் செல்ல நாள் முழுதும் என் வாயிலில் காத்திருக்கிறது.

அந்தப் பனி முகிலை மேலாடையாக எண்ணற்ற வடிவு மடிப்புகள் ஆக, அடிக்கடி மாறும் வண்ணங் கள் ஆகச் செய்து, நின் விண்மீன் மயமான மார்பில் ஆசையின்பத்தோடு போர்த்துக் கொள்கிறாய்.

மாசிலோய், தெள்ளத் தெளிந்தோய், அது மிக இலேசாக அலைந்து செல்வதாக மென்மையாக கண்ணீர்த்தாக இருண்டதாக இருப்பதால் நீ அதனை அவ்வளவு விரும்புகிறாய். அதனால் தான் அதன் இரங்கற்குரிய நிழல்களால் நின் அச்சம் தரும் வெண் பேரொளியை அது போர்க்குமாறு உள்ளது.

☐ இந்தத் தன்னுணர்ச்சிப் பாட்டு இறைமையின் அன்பையும் பரிவையும் புகழ்கின்றது.

கதை வடிக்கும் கற்பனைப் பாங்கு இதில் இழைந்திருக் கின்றது. 'பரிதிக் கதிர்க் கற்றை' 'பனிமுகில்' என்பன

அழகிய சித்திரப் படிமங்களாக உள்ளன. யாண்டுமுள இறைவன் நம் இன்ப துன்பங்களில் பங்கு கொள்கிறான்; துன்பத்தைத் தான் ஏற்று இன்பம் வழங்குகிறான் என்ற கருத்து இதில் மிளிர்கின்றது

O

# அறுபத்தொன்பது
# தெய்விக ஒருமை

☐ காணும் உலகின் பொருள்கள் யாவும் ஒரு தெய்விக உயிரின் வடிவங்கள், தோற்றங்களே அன்றி வேறில்லை. இந்தப் புற உலகம் மாறுகிறது; தற்காலிமானதாக இருக்கிறது. அதனை உணர்த்தும் ஆன்மா நிரந்தரமானது. பொருள்களின் அடிமட்டத்தில் ஒருமைப் பண்பு இருக்குமானால் தெய்விகத்தின் கூறு மனிதனிடம் இருக்க வேண்டும். கடவுளின் இயற்கையில் சிலர் பங்கு அடைகின்றனர். ஆகவே மானிடன் தன் ஆன்மாவின் வாயிலாக,தன் இறைமைப் பகுதியின் வாயிலாக, இறைமையை உணர வல்லனாக இருக்க வேண்டும்.

தனது இரத்தக் குழாய்களில் இரவும் பகலும் ஓடும் அதே உயிராறு தான் உலகெலாம் ஓடுகிறது, உயிருள்ளன இல்லன ஆகிய எல்லாப் பொருள்களினூடும் இயற்கையினூடும் மானிட வாழ்வினூடும் ஓடுகிறது என்கிறார் கவிஞர். அதன் தொடர்பலனாக, மானுட வாழ்வில் மகிழ்ச்சியின் இசையொழுங்கான ஓர் இன்பக் கூத்து நடைபெறுகிறது.

இயற்கைப் பொருள்கள் யாவும் - புல்லின் தாள்கள், இலைகள் மலர்கள் – எல்லாம் உயிர்த்துடிப்போடு இருக்கின்றன, மகிழ்ச்சிப் பெருங் கூத்து ஆடுகின்றன; ஏனெனில் அவை உயிருள்ள ஓர் ஆன்மாவால் உயிரூட்டப்படுகின்றன. அதே தெய்விகம் தான் பிறப்பு இறப்பிலும் வெளிப்படுத்தப் படுகின்றது.

தனது வாழ்க்கையில் பெருமை கொள்கிறார் கவிஞர்; ஏனெனில் அவருள் இருக்கும் தெய்விகத்தின் மலர்ச்சியே

அது என்பது அறிகிறார் அவர்; என்றுமுளதாம் உயிரின்-இறைமையின் – ஐக்கியத்தைத் தன்னில் உணர்கிறார் அவர்.

69. இரவும் பகலும் என் நரம்புகளில் ஓடுகிற அதே உயிராறு தான் உலகினுள்ளும் ஓடுகிறது; ஒத்திசைச் சீர்களில் நடம் புரிகிறது.

அதே உயிர் தான் மண்ணின் துகள்களில் எண்ணற்ற புல்லின் தாள்களாக மகிழ்ச்சியில் குருத்து விடுகிறது; இலைகள் மலர்கள் என்று உணர்ச்சிப் பெருக்கின் அலைகளாக எழுச்சி கொள்ளுகின்றது.

அதே உயிர் தான் பிறப்பிறப்பு என்று எழுச்சி வீழ்ச்சியுள்ள கடலாகிய தொட்டிலில் தாலாட்டுப் பெறுகின்றது.

உயிருள்ள இவ்வுலகின் தொடுதலால் என் உறுப்புக்கள் பெருமை யுறுவதை உணர்கிறேன். ஊழிகளின் உயிர்த்துடிப்பு இந் நொடியில் என் குருதிக்கண் கூத்தாடுகிறது என்பதில் எனக்குப் பெருமிதம் உண்டாகிறது.

☐ தெய்விகம் உள்ளூடு பரவியிருத்தலையும் ஆன்மா அழிவிலாதிருத்தலையும் வலியுறுத்தும் இந்தத் தன்னுணர்ச்சிப் பாடல் தத்துவச் சார்புடன் இலங்குகின்றது.

☐ ''எங்கெங்கும் என்னைப் பார்ப்பவன், என்னில் ஒவ்வொன்றையும் பார்ப்பவன், என்னில் ஒவ்வொன்றையும் பார்ப்பவன் எவனோ அவனை நான் கைவிடுவது கிடையாது; அவன் என்னை விட்டுவிடுவதும் கிடையாது'' என்ற கீதை வாக்கு இங்குக் குறிக்கத் தக்கது.

☐ பிரபஞ்சத்தின் அறிவே உள்ளுயிரே<br>
சிந்தனை நிலைபேறாம் ஆன்மாவே<br>
அமைப்புகள் வடிவுகளுக்கு உயிர்மூச்சும்<br>
நிரந்தரமான இயக்கமும் நீ தருகிறாய்

என்று இதே உணர்ச்சிகளை வேட்ஸ்வர்த் விளம்புவது காணலாம்.

O

# எழுபது
# விரைவான இன்ப நாட்டியம்

□ இயற்கை அனைத்திலுமாக ஒரு விரைவான மகிழ்ச்சி நாட்டியம் காணுமாறு உள்ளது. அந்தக் களிநடனத்தைக் கொட்டும் கடுமழையும் அச்சந்தரும் சுழற்காற்றும் குறியீடுகளாகப் புலப்படுத்துகின்றன.

எல்லாப் பொருள்களும் நிரந்தரமாக முன்னோக்கி இயங்குகின்றன, நிறுத்தமோ பின்னோக்கித் திரும்பலோ இனறிப் புடைபெயர்ந்த வண்ணம் இருக்கின்றன. படைப் புப் பொருள்களின் இந்தக் கடும் பாய்ச்சலை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது.

பருவ காலங்கள் சந்தச் சீர்மை போன்ற ஒழுங்குமுறை யான மாறுதல்களால் நடையாடுகின்றன; விரைவான சுழற்சி மாறுதல்கள் நிகழ்கின்றன. நிறங்கள் ஒலிகள் மணங்கள் முதலியன மழை நீரோடையாக முடிவின்றிக் கொட்டும் அருவிபோல் பாய்ந்தோடுகின்றன.

70. இந்தச் சந்த நயத்தின் இன்பத்தில் இன்புறல் என்பது உனக்கு அப்பாற் பட்டதா? இந்தப் பயங்கர மான மகிழ்ச்சிச் சுழலில் மேலும் கீழும் வந்து தன்னை இழந்து ஒழிவது உனக்கு முடியாததா?

யாவும் பாய்ந்தோடுகின்றன. அவை நிற்கவில்லை, பின்னோக்கவில்லை, அவற்றை எத் திறமும் பிடித்து நிறுத்த முடியாது. அவை பாய்ந்தோடுகின்றன.

ஒய்வற்ற அந்த விரைவான இன்னிசைக்கு ஒத்த கதியோடு பெரும் பொழுதுகள் நடனமாடி வருகின் றன, செல்கின்றன. வண்ணங்கள் இசைப்பாணிகள் வாசங்கள் ஒவ்வொரு நொடியும் பொங்கும் இன்பத் தின் முடிவிலா அருவிகளாகச் சிதறி விடுபட்டு மறைந்து போமாறு பொழிகின்றன.

□ இயற்கை முற்றாகக் களிப்பில் பொங்கி வழிகிறது. வையமளாவிய இந்த மகிழ்ச்சியில் அதன் படைப்பாளி பங்கு கொள்கிறானா என்று கேட்கிறார் கவிஞர். அவன்

அவ்வாறு கொள்வது திண்ணம் என்று விடை காண்கிறார் அவர். உண்மை என்னவென்றால் இயற்கையின் இந்த உவகை, படைப்புச் செயலில் உள்ள இறைமையின் உவகை வெளிப்பாடேயாகும்.

உவகையுடனும் அன்புடனும் இறைவன் படைத்தான்; அவ்வாறே அன்பும் உவகையும் இயற்கையாவினுள்ளும் ஊடு பரவி இருக்கின்றன. எல்லாப் பொருளுக்கும் ஆதர வாக இருக்கும் தத்துவங்களாகவும் அவை இருக்கின்றன.

O

## எழுபத்தொன்று
## அறியாமை இறுமாப்பு

▢ இறைவன் பகுபடாதவன், அலகிலாதவன். ஆனால் தன்னைப் பகுத்து இயற்கை என்றும் மனிதன் என்றும் ஆக்குகிறான். ஆகவே இறைவனின் ஒரு கூறு தான் மனிதன். ஆனால் அவ்வாறு ஆக்கப்பட்ட மனிதன் தன் அறியாமையாலும் செருக்காலும் தன்னையே தெய்விக சக்தியாளன என்று கருதிக் கொள்கி றான்; தன்முனைப்பில் விஞ்சுகிறான். அதனால் அவன் தன் நிழலைத் தெய்விகத்தின் தூய வெண்பேரொளி மேல் படரச் செய்து மறைக்கிறான்; தன் தெய்விக மூலத்தை மறக்கிறான்.

படைத்தோனாகிய கடவுளுக்கும் படைக்கப்பட்டவனா கிய மாந்தனுக்கும் இடையே உள்ள பிரிவு மாயையால் உண்டானது.

வேறுபடு நிறங்களால் ஆன பொய்க்காட்சிகளாலும் அறியாமையாலும் வண்ணப் பூச்சுப் பெற்று மனிதன் தன்னைத் தனியன் சுதந்திரன் என்று எண்ணிக் கெள் கிறான.

இப்படிப் பொய்யாக வீண் பெரிதுபடுத்தலாகிய மாயை மானிடனின் தெய்விகப் பகுதியைத் தோற்கடிக்கிறது. தெய்விகத்தை விட்டுப் பிரிந்ததனால் துயரம் மிகுகிறது. அந்தத் துயரம் கண்ணீரிலும் புன்னகையிலும், நம்பிக் கையிலும் ஏமாற்றங்களிலும் காணுமாறு உள்ளது.

முடிவிலா இறைவன் தன் படைப்புத் திரைக்குப் பின் அமர்ந்திருக்கிறான். அந்தத் திரை மாயத் திரையாக-பல நிறப்படைப்புகளால் பல உருவங்கள் அமைப்பு களாகிய ஓடி ஒளியும் காட்சியாக-இரவும் பகலும் ஆனதாக- படைப்பாளியை மனிதனின் கண்ணினின்றும் மறைப்பதாக இருக்கிறது.

கடவுளின் மாயை வானம் போல் விரிந்து கிடப்பது. ஊழிகள் சென்றுகொண்டேயிருக்கின்றன. கடவுளொடு ஐக்கியமாகிவிட மனிதன் நாடிக் கொண்டேயிருக்கிறான். என்றுமுள பேரான்மாவுக்கும் தனி ஆன்மாவுக்கும் இடையில் உள்ள தேடல்-கண்ணாமூச்சி நடந்துகொண்டேயிருக்கிறது. இறைவனுடன் முழுமையாகக் கலந்துவிட வேண்டும் என்ற மானிட விருப்பம் முடிவிலதாக இருக்கிறது.

71. என்னைப் பெரிதுபடுத்திக் கொண்டு அந்தப் பெரிதினை எப்பாலும் திருப்பி நின் பேரொளியின் மேல் வண்ண நிழல்களை நான் வீச வேண்டும் என்பது நின் மாயையாக இருக்கிறது.

நின்னில் ஒரு தடுப்பை எழுப்பித் துண்டுபட்ட நின் பகுதிப் பொருளை ஆயிரம் பெயரால் அழைக்கிறாய். அந்த நின் சுய பிரிப்பு எனக்கு உடம்பாகக் கிடைத்திருக்கிறது.

ஆன்மக் கிளர்ச்சியான பாட்டு-வருத்தப் பாட்டு-வானகம் எங்கும் பலவண்ணக் கண்ணீரும் புன்னகையும், அச்சமும் நம்பிக்கையும் வாயிலாக எதிரொலிக்கிறது. அலைகள் எழுகின்றன, மீண்டும் உள்ளே ஆழ்கின்றன. கனவுகள் உடைகின்றன உருவாகின்றன. என்பால் நின் பகுதி தோல்வியுறுகின்றது.

நீ எழுப்பியுள்ள இந்தத் திரையில் இரவு பகலாம் தூரிகையால் கணக்கிலா வடிவுகள் வண்ணம் தீட்டப்படுகின்றன. திரையின் பின்பால் உள்ள நினது இருக்கை பயனிலா நேர்கோடுகளை விட்டொழித்து, வியத்தகு வளைவுப் புதிர்களால் நெய்யப் பெற்றிருக்கிறது.

நீயும் நானுமாக இருக்கும் அரிய காட்சியுலா வானில் மேல் பரவியுள்ளது; நீயும் நானுமான இசையொலி காற்றில் ஒலிக்கிறது நீயும் நானுமாக ஒளிந்து தேடுவதில் ஊழிகள் கழிகின்றன.

☐ தடுப்பு-அல்லது பிரிப்பு-மனிதனையும் கடவுளையும் பிரித்தலைக் குறிக்கிறது. அந்தப் பிரிவு தன்முனைப்பு அல்லது தாழ்ந்த அகத்தால் வடிவு கொள்கிறது.

வருத்தப் பாட்டு அல்லது ஆன்மக் கிளர்ச்சிப் பாட்டு என்பது இறைமையை விட்டு விலகியதால் மனிதற்கு விளைந்த துயரைக் குறிக்கிறது. திரை என்பது மயக்கத்தைக் காட்டுகிறது; இந்தத் திரை, படைக்கப்பட்ட உலகம் பலப்பல வடிவுகளால் அமைந்து இறைமையை மானிடக் கண்களினின்றும் மறைப்பதாக இருக்கிறது. மாயை என்றால் அமைத்தல் என்பது பொருளாகும். இவ்வுலகு இறைவனின் மாயை-ஏனெனில் அவன்தான் அதனை அமைத்தான்.

படைப்பு அனைத்தும் பல நிறங்களால் அமைந்த-பகட்டார்ந்த-காட்சியாக, மனிதனும் கடவுளும் ஒருவரை ஒருவர் தேடிக் கொண்டிருக்கும் நிரந்தர நாடகமாக இருக்கிறது.

முடிவிலாப் பொருள் முடிவுடைப் பொருளோடு கூடுவதற்கு ஆர்வமாக இருப்பது, முடிவுடைப் பொருள் முடிவிலாப் பொருளோடு கூடுதற்கு முயல்வது போன்றே ஆர்வம் மிக்கு இருக்கின்றது என்பது கவிஞரின் தத்துவம்.

☐ "புறத் தொடர்புகளால் வரும் இன்பங்கள் -அவை உண்மையில் வேதனையின் கருப்பைகள், அவற்றுக்குத் தொடக்கம் உண்டு இறுதியும் உண்டு. அறிவாளர் அவற்றில் மகிழ்ச்சி கொள்ளார்."

"யாருடைய ஆன்மா புறத் தொடர்புகளின் ஒட்டுதலை விட்டதோ, தன்னில் உவகை காண்கிறதோ, அது நிலைப் பொருளோடு யோகத்தால் ஆன்ம இணக்கமுற்று அழிவிலாப் பேரின்பம் எய்துகிறது"

"தீயன செய்தலையோ நல்லன செய்தலையோ பெருமான் ஏற்பதில்லை. மெய்யறிவு பொய்யறிவால் மூடப்பட்டிருக்கிறது; அதிலே மானிடர்கள் ஏமாற்றப் படுகிறார்கள்"

என்பன கண்ணா பெருமான் உரைகள்.

O

## எழுபத்திரண்டு
## அது, அவன் தான்

☐ மனிதனுள் உந்து ஆற்றலாக - இயக்கு திறனாக இருக்கிறான் இறைவன். உள்ளூடு நிரந்தும் - விரவியும்- இருக்கிறான், கடந்து அப்பாலாகவும் இருக்கிறான் மானிடர் நெஞ்சின் உட்புகுந்து, வெளிப்படத் தெரியாத தன் செல்வாக்கினால் வாழ்விப்பவன் அவன் தான். வகை தொகையான படைப்புகளைக் காட்டி மானிடக் கண்களில் மாயம் செய்பவன் அவன்தான். மானிட நெஞ்சாகிய வீணையின் நரம்புகளில் இணக்கமாக வெவ்வேறு பண்களும் திறங்களும் நிகழ்த்துபவனும் அவன் தான்.

வண்ண மிக்க - ஆனால் குறைந்த காலமே இருக்கும் பொன் வெள்ளிக் கவர்ச்சிகளாகிய உலகியல் வலை களைச் சாமர்த்தியமாக அவன் பின்னுகிறான். கிறங்க வைக்கும் பேரெழிலான உலகக் காட்சிகளின் வனப்பு மானிடனை. அவனது தெய்விக ஆதாரத்தை - மூலப் பொருளை - மறக்கச் செய்கிறது.

இறைவன் ஒருவனே எக்காலத்தும் மன்னியிருப்போன். அவன் பல பெயராலும் பல கோலத்தாலும் மானிடர் நெஞ்சின் உள்ளார்ந்து இருக்கிறான். உவகை கவலை ஆகிய பரவச அனுபவத்தை மானிடர் அனுபவிக்க வைக்கிறான் அவன்.

72. உள்ளுள் இருப்போன், என் உயிரைத் தன் ஆழ்ந்த மறைவான தீண்டுதல்களால் விழிக்கச் செய்வோன் - அது, அவன் தான்.

தன் வசியத்தை இந்த விழிகள் மேல் வைப்போன், என் நெஞ்சின் நரம்புகளில் இன்ப துன்பப் பலவாம் பண்ணின் திறங்களை உவகையோடு வாசிப்போன், - அது, அவன் தான்.

விரைந்து நிறம் மாறும் பொன் வெள்ளி நீலம் பச்சை நிறங்களிலான இந்த மாயையாம் பின்னலை நெய்வோன், எவற்றின் தீண்டுதலால் என்னை நான் மறக்கிறேனோ அவற்றை-தன் காலடிகளை-பின்னல் மடிப்புகளிடைச் சிறிது புறம் தோன்றியிருக்கச் செய்வோன் - அது அவன் தான்.

நாள்கள் வருகின்றன; காலங்கள் கழிகின்றன. என் நெஞ்சைப் பல் பெயர்கள் பல தோற்றங்கள் பல மகிழ் துயரப் பரவசத்தில் நெகிழச் செய்வோன் - அது, அவன் தான்.

☐ கீதையின் செல்வாக்கு இந்தப் பாடலில் படிந்திருப்பது தெளிவாக உணருமாறு உள்ளது.

☐ மாயை பற்றிச் செல்வி தொருதத் எழுதிய

"யான் அறிவேன் - நிலைமாறும் உலகிது
யாவும் மருள், எதுவும் மெய்யன்று
யான் அறிவேன் - அதன் காட்சிகள்
நீர்க்குமிழ்கள் இன்புறுத்தவும் புதுப்பிக்கவும்
திறந்துவிட்ட மூடுபனிகள்; வலுவற்ற நீண்ட
மாயையின் வலைப் பின்னலில்
மயங்கிக் கட்டுண்டு கிடத்தல் என்
குறிக்கோள் அன்று

என்ற அடிகள், இங்கு நினையுமாறு உள்ளன.

☐ மனிதன் செய்வது துய்ப்பது எல்லாமும் தெய்விகத் தூண்டலாலே நடைபெறுகின்றன. மனிதன் துன்புறுவதும் இறைவனின் கருத்தினால் தான். அவன் தன்னைப் பலவாறு தோற்றிக் கொள்கிறான்.

O

# எழுபத்துமூன்று
# புலனுகர்ச்சி இன்றியமையாதது

□ மெய்யான விடுதலை, உலகையும் அதில் செய்யும் செயல்களையும் துறப்பதில் இல்லை. ஒருவர் தமது கடமைகளை ஆற்றுவதனால் அவர்க்கு விடுதலை கிடைக்கிறது. தாம் தம் கடமையைச் செய்வதனால் ஆன்மிக இன்பமும் விடுதலையும் பெறலாம்.

இந்தப் படைப்பு, ஒரு குவளை போல்வது. இறைவன் அதில் இனிய நறுந்தேறலை - நல்ல மதுவை — மறுபடி மறுபடி நிரப்புகிறான். அதனைப் பருகாதிருப்பது நன்றியிலாத் தன்மையாகும். அழகிய இவ்வுலகு மானுடன் துய்த்தற்கு அமைந்தது. ஆகவே மிக மிக நிரம்ப இன்பங்கள் அருளப் பெற்ற மானுடன் அவற்றை நுகர்வது தன்னைப் படைத்தோனுக்குச் செய்யும் கடமையாகும். எண்ணிறந்த இன்பங்களுக்கு வழிவகை செய்து தரப் பட்டுள்ளமைக்கு மகிழ்ச்சியும் நன்றியும் ததும்பும் பாக்களை ஒருவன் பாட வேண்டும். புலனியல் இன்பம் இறைவன் தன் படைப்பின்பத்தற்குத் தரும் ஒப்புதல் ஆகும். எனவே புலனுகர்ச்சி உடையார் உண்மை அடியார் ஆவர்.

73. விடுதலை எனக்குத் துறவினில் வராது. ஆயிரம் இன்பப் பிணிப்புகளில் நான் விடுதலையின் அணைப்பினை உணர்கிறேன்.

பல்வேறு வண்ணமும் மணமும் உடைய நின் புத்தம் புது மதுவினை இந்த மட்கலத்தில் விளிம்பு வழிய எப்போதும் வார்க்கிறாய்.

நின் சுடரால் என் உலகு நூற்றுக்கணக்கான விளக்குகளை ஏற்றும். நின் கோவில் திருமுன் அவற்றை வைக்கும்.

இல்லை, என் புலன்களின் வாயில்களை ஒருபோதும் அடைக்க மாட்டேன். காணுதல் கேட்டல் உறுதலின் இன்பங்கள் நின் இன்பத்தை ஏந்தி யிருக்கின்றன.

ஆம். என் மனமாயை எல்லாம் உவகை விளக்கு களாக எரியும், என் ஆசைகள் எல்லாம் முதிர்ந்து அன்புக் கனிகளாகப் பழுக்கும்.

□ தாகுர் ஓர் அனுபூதியாளர். ஆனால் அவரது அனுபூதி இயல்-அருளியல் நெறி-மற்ற அனுபூதியாளரின் வேறு பட்டதாக இருக்கிறது. உலகை விட்டு ஒதுங்குவதிலோ புலனுகர்ச்சி இன்பங்களைப் புறக்கணிப்பதிலோ அவர்க்கு இணக்கம் இல்லை.

இதனால் மட்டமான புலனின்ப வாழ்க்கையை ஆதரிக் கிறார் கவிஞர் என்பது பொருளன்று. புலனுகர்ச்சிப் போக்கு உயர்வு நிலைக்கு உய்க்கவேண்டும்; ஆன்மிக மலர்ச்சிக்கு இடந்தருமாறு இயையவேண்டும்.

உலகின் அழகின்பங்களின்பால் தூய அன்பு மகிழ்ச்சி யாக, சிற்றின்பம் நல்லின்பமாகத் திருப்பப்படவேண்டும். இத்தகைய மாற்றம் தன் சக மனிதனுக்கு மனநிறைவான அன்புடனும் மகிழ்ச்சியுடனும் செய்யப்படும் தொண்டி னால்தான் இயல்வதாகும். அத்தகையோன் தெளிந்ததும் தூயதுமான மனப்பாங்குக்கு உயர்கிறான். அதில் கடவுட் படைப்பிலும் எல்லார்க்கும் அன்பு செய்வதிலும் இன்பம் உணர்கிறான்.

□ வேறுவேறாகிய நிறமும் மணமும் உடைய நின் புத்தம் புது மது என்பதும் என் உலகு நின் சுடரால் நூறு பல்வேறு விளக்குகளை ஏற்றும் என்பதும் உயரிய சொற்சித்திரமாக, குறிப்புப் பொருளுணர்த்தும் படிமப் பாங்காக அமைந்துள்ளன.

> அன்பு, பிழையா ஒளியாக இருக்க,
> மகிழ்ச்சி அதன் பாதுகாப்பாக இருக்க,
> நம் நாள்கள் ஒளியும் தெளிவும் பெறும்;
> நம் இயற்கை இன்பமாக இருக்கும்.

என்று வேட்ஸ்வர்த் 'கடமைப் பனுவலில்' பாடுவது இங்கு எண்ணற்கு ஏற்றதாக உள்ளது.

O

# எழுபத்துநான்கு
# புதியவனின் புல்லாங்குழல் இசை

□ அது மாலை நேரம். குடத்தில் தண்ணீர் முகந்து வரப் போக வேண்டும் நேரம் அது. சிற்றாற்றில் சோக மான 'முணுமுணு'ப்பாட்டு அவளை அழைத்தது. போகும் சந்து தனிப்பட்டு ஆள் நடமாட்டம் இன்றிக் கிடக்கிறது. காற்று அடிக்கிறது. ஆற்றின் மேல் மட்டத்தில் அலை கள் எழுந்து வீழ்கின்றன. தான் திரும்பி வருவோமா என்று அவளுக்குத் தெரியவில்லை. அங்கு யாரைக் காண்போம் என்று அவள் அறியாள். யாரோ ஒரு புதியவன் இசைக்கும் புல்லாங்குழல் இசை அவளுக்குக் கேட்கிறது. அவன் ஆற்றோரம் தன் படகில் அவளுக் காகக் காத்திருக்கிறான்.

74. பகல் போனது. புவி மேல் நிழல் படர்கிறது. என் குடத்தில் நீர் முகக்க ஆற்றுக்குச் செல்ல வேண்டிய நேரம் இது.

மாலைக் காற்று, தண்ணீரின் சோக இசையில் ஆசை கொள்கிறது.

ஆ! அது என்னை அந்தி இருளுக்கு அழைக்கிறது. தனித்த குறுந்தெருவில் வழிச் செல்வோர் எவருமிலர். காற்று மீறுகிறது. ஆற்றின் சிற்றலைகள் கடுமையா கின்றன.

இல்லம் மீள்வேனா என்று அறிகிலேன், யாரை நான் சந்திக்க நேரும் என்று தெரியவில்லை.

ஆழமில்லா அத் துறையில் சிறு படகினில் யாரோ ஒருவன் வேய்ங்குழல் ஊதுகிறான்.

□ பாடலில் வரும் மங்கை அடியார்க்குச் சார்பாக (பிரதிநிதியாக)வும், புதியவன் தெய்வத்தின் சார்பாகவும் வருகின்றனர் எனலாம்.

□ ஆறு குடம் மங்கை புல்லாங்குழல் புதியவன் என்பன கண்ணன் கதைத் தொடர்பான குறியீடுகளாகும்.

□ தெய்வத்தோடு இணைந்துவிட விரும்பும் ஆன்மாவின் ஆர்வத்திற்குக் குறியீடாகப் பாடல் துலங்குகிறது. O

# எழுபத்தைந்து
# மீண்டும் இறைவனிடம்

□ மனிதான்மா தெய்வத்திடமிருந்து நமக்கு வந்தது! யாக்கை வீழ்ந்த பிறகு அது தன் மூல இடத்துக்கு மீண்டும் போய் விடுகிறது. நாம் அனுபவிக்கும் கணக்கிலாக் கொடைகள் இறைவனை மூலாதாரமாகக் கொண்டவை. அவை அப்படியே, நதியானது ஊர்களினூடு பாய்ந்து குறைவிலாது கடலிற் கலப்பது போல், குறைவின்றி இறைவனிடமே சென்று சேர்கின்றன. மண்ணுலகில் மானிட ஆன்மா வைகியிருத்தல், வயல்கள் ஊர்களிடை ஓடும் ஆற்றின் பாய்ச்சல் போல்வது. முடிவாக மனிதான்மா நிலைபேறாகிய கடலில் ஒன்றாகி விடுகிறது.

பூ தன் மணத்தால் காற்றை இனிமையாக்குகிறது. முடிவில் வாடி வீழ்கிறது; இறைமையுடன் ஒன்றாகி விடுகிறது. தன்னை இயற்றியோர்க்குத் தன்னைத் தந்து விடுகிறது அது. இறப்பின் பின் அவனுடன் ஒன்றாகி விடுகிறது.

இறையை வழிபடுதல் யாரையும் வறியோர் ஆக்கி விடாது. அது ஆன்மிகச் செல்வத்தைப் பெருக்குகிறது. நதியும் பூவும் கூட அப்படித்தான் பெருமை பெறுகின்றன. கவிஞர் தன்னை இயற்றியோர்க்காகப் பாக்கள் இயற்றுகிறார். மக்கள் அவற்றுக்கு வெவ்வேறு விளக்கங்கள் தரலாம்; ஆனால் அவற்றின் இறுதிப் பொருள் இறைவனையே சுட்டுகிறது.

75. நிலைப்பிலர் மானிடர் ஆகிய எங்கட்கு நீ தரும் கொடைகள் எங்கள் தேவைகளை நிறைவு செய்கின்றன; ஆயினும் அவை யாவும் குறைவின்றி அப்படியே நின்பால் மீள்கின்றன.

ஆறு நாடொறும் ஆற்றத் தகும் வேலை இருக்கிறது;
வயல்கள் ஊர்களினிடை அது ஓடுகிறது, ஆயினும்
அதன் இடையறா ஓட்டம் நின் திருவடி கழுவுதற்கு
வளைய வருகிறது.

மலர் தன் மணத்தால் காற்றை இனிமை யாக்குகிறது;
இருப்பினும் அதன் இறுதிப் பணி நினக்குத் தன்னைத்
தந்துவிடலாகும்.

நின்னை வழிபடுதல் வையத்தை வறுமைப் படுத்தி
விடுவதில்லை,

கவிஞனின் சொற்களினின்று மானிடர் தமக்கு விருப்
பான பொருள்கள் கொள்கிறார்கள். ஆயினும் அவற்
றின் முடிந்த பொருள் நின்னையே சுட்டிக் காட்டு
கின்றது.

☐ ஆறு, பூ என்பன மானிடத்துக்குச் செய்யும் சேவை, இறைமைக்கு ஒப்படைப்பு என்பவற்றின் குறியீடுகளாகும். ஆன்மிகக் கருத்துக்களைப் பருப் பொருளான, புலத் தொடர்புடைய, படிமவியலால் விளக்குகிறார் தாகுர். குறியீடுகளையும் படிமங்களையும் அவர் பொருள் நோக்குடன் கையாள்கிறார்; அலங்காரத்திற்காக இல்லை.

☐ ஆறு கடலில் கலத்தல் என்ற படிமம்,
ஆற்று வெள்ளம் உக்கிரமாக ஓடிக்
கடலின் மடியில் நீரைக் கொட்டுகிறது;
இந்தப் பலசாலிகளும் பூமிப் பிரபுக்களும்
நின் எரியும் வாய்களில்
விரைவுடன் தங்களை வீழ்த்திக் கொள்கிறார்கள்

என்று கீதையில் வந்துள்ளது.

O

# எழுபத்தாறு
# கடவுளை மறவார்

☐ கவிஞர் தன்னை முழுமையாக இறைவன் திருவுளத்துக்கு ஒப்படைப்புச் செய்து விடுகிறார். தன்னைப் படைத்

தோனை— உலகம் யாவற்றுக்கும் தலைவனாக விளங்கு வோனை அவர் நினைவார். கூப்பிய கைகளால் பொழு தெல்லாம் அவனைத் தொழுவார். வாழ்வின் தனிமை யிலும் நோய் பரப்பும் பிளவுபட்ட நோக்குகள் கொண்ட வையத்திடை இருக்கும் போதும் அவர் அவனை நினைந் திருப்பார்; யாண்டும் பரந்திருக்கும் அவனது முன்னி லையை உணர்ந்திருப்பார். பரபரக்கும் கூட்டங்களின் இடையிலும் அவர் இறைக்காட்சி நாடுவார், தன் கடமை முடிந்ததும் அடக்கத்துடன் இறைவன் பால் தன்னைத் தந்து விடுவார்.

76. என்னுயிர்ப் பெருமானே. நாளும் நாளும் நான் நின் முன் நேருக்கு நேர் நிற்கலாகுமா? உலகம் யாவினுக் கும் தலைவனே, கை கட்டி நின் முன் நேருக்கு நேர் நான் நிற்கலாகுமா?

நின் பெரு வானத்தின் கீழ், தனிமையில், ஓசை யின்றி, பணிந்த நெஞ்சுடன் நின் முன் நேருக்கு நேர் நான் நிற்கலாகுமா?

கடும் வேலையாலும் போராட்டாலும் கொந்தளிப் பான இந்தப் பாடுமிக்க நின் உலகத்தில் பதறியவாறு ஓடும் கூட்டங்களின் நடுவில் நின் முன் நேருக்கு நேர் நான் நிற்கலாகுமா?

இவ் வுலகில் என் வேலை முடிந்தான பிறகு அரசர்க் கரசே, தனியாக, பேச்சிலாது, நின் முன் நேருக்கு நேர் நான் நிற்கலாகுமா?

□ தன் வாழ்க்கைப் பேறுகள் எவ்வாறிருப்பினும் தனக்கு அருள் தூண்டல் தந்து தன் சொல் செயல்களில் வெளிப் பாடு புரியும் இறைவனைக் கவிஞர் மறவார். உலகில் தன் கடமை முடிந்து விடை பெறும் பொழுது முழு அடக்கத்தோடு அவனிடம் தன்னை அளித்து விடுவார். O

# எழுபத்தேழு
# மானிட நேயம்

□ கவிஞர் இறைவனைத் தொலைவில் நின்று தன் தந்தை யென மதிப்புடன் தொழுகிறார். ஆனால் அவனைத் தன் சகோதரன் நண்பன் தோழன் என நெருங்குதற்கு அவர் துணியவில்லை. நாம் நம் உடன் பிறந்தார் எனவும் தோழர்கள் எனவும் கருதாத எல்லா மானிட உயிர்களிடத்தும் அவன் இருக்கிறான் என்ற அடிப்படை உண்மையை உணர்வதில்லை. ஆகவே நேர்மையான வழிபாடு செய்ய நாம் தவறிவிடுகிறோம்.

இறைவனோடு பொருள்களைப்பகிர்ந்து கொள்ள விரும்புகிறார் கவிஞர்; ஆனால் தன் சகோதரர்கள் நண்பர்கள் ஆகிய சக மானிட உயிர்களுடன் பகிர்ந்து கொள்ள அவர்க்கு மனம் வரவில்லை. ஆடவர் பெண்டிரின் துன்ப துயரங்களில் அவர்களின் பக்கம் நிற்பதில்லை அவர். இவ்வாறாக உண்மையில் இறைவனின் அருகே நிற்பதான வாய்ப்பை இழந்துவிடுகிறார். நம் உடனாய மானிடரை நேசித்தலும் அவர்கட்குத் தேவைக் காலத்து உதவுதலும் இறைவனை நேசிப்பதாகும். வறியோர், அன்பு வேண்டுவோர், எப்போதும் ஆவலோடு இருப்போர் ஆகியோர் கூட்டத்தின் கூட்டாளி, நண்பன் ஆக இறைவன் இருக்கிறான் என்பதை மறந்து விடலாகாது.

தன் தனி வாழ்க்கையை விட்டுவிட அஞ்சுகிறார் கவிஞர். அதனால் வாழ்வுப் பெருங்கடலில் மூழ்கித் திளைக்கும் வாய்ப்பைத் தவற விடுகிறார்.

77. நின்னை என் இறைவன் என அறிந்து தள்ளி நிற்கிறேன் – நின்னை என்னுடையவன் என்று அறிந்து அருகில் வரவில்லை. நின்னை என் தந்தை என்று உணர்ந்து நின் அடி பணிகிறேன்–நின் கையினை என் நண்பனின் கை என்று நான் பற்றிக் கொள்ளவில்லை.

நீ கீழ் இறங்கி வந்து என்னை நின்னவன் என்று கொள்ளும் இடத்தில் நான் நிற்கவில்லை! அங்கே நின்னை என் நெஞ்சோடு சேர்க்கவில்லை, என் தோழனாகக் கொள்ளவில்லை.

என் உடன் பிறந்தாருள் நீ மேலாம் உடன் பிறப்பு. ஆனால் நான் அவர்களைக் கருதவேயில்லை; என்னுடையன யாவற்றையும் நின்னுடன் பகிர்ந்து கொண்டு அவர்களுடன் என் ஈட்டங்களை கூறிட்டுக் கொள்வதில்லை.

உவகை நோவுகளில் நான் மானிடர் பக்கம் நிற்பதில்லை. இவ்வாறு நின் அருகில் நிற்கிறேன். என் வாழ்வை விட்டுவிடத் தயங்குகிறேன்; இவ்வாறு வாழ்க்கைப் பெருநீர்ப் பரப்பில் நான் மூழ்கவில்லை.

☐ மற்ற மாந்தர்க்கு, ஆடவர் பெண்டிர்க்கு, உதவுதலால் தெய்விகம் நம்மை நெருங்கி வருகிறது; அவர்களின் இன்னல் இடும்பைகளில் உதவி நேயம் செலுத்தினால் நாம் இறைவற்கு மெய்யான தொண்டு இயற்றுகிறோம் என்பது இப் பாடலின் கருத்தாக உள்ளது.

இத் தன்னுணர்ச்சிப் பாட்டு கவிஞரது மட்டற்ற மானிட நேயத்தைப் புலப்படுத்துகிறது.

O

## எழுபத்தெட்டு
## எங்கெங்கும் நிறைவு

☐ இறைவனின் படைப்பு நிறைவான தன்மை யுடையது. நிறைவின்மை, குறைவு, அழகின்மை, பொல்லாமை என்று நமக்குத் தெரிவது வெறும் தோற்ற மயக்கம். அது நம் அறியாமை, காட்சியுணர்வு போதாமை ஆகியவற்றின் விளைவாக வருவது. இந்த உண்மை இத் தன்னுணர்ச்சிப் பாட்டில் கதைப் பாங்கில் தரப்பட்டுள்ளது.

படைப்பின் தொடக்கத்தில், நட்சத்திரங்கள் புத்தம் புதுப் பேரொளியோடு திகழ்ந்த போது வானகத்தில் கடவுளர் திருச்சபை கூடியது. புதிதாகப் படைக்கப் பெற்ற மன்பேருலகங்களின் அழகை வியந்து மகிழ்ந்தனர் அவையினர்.

அவ்வாறிருக்கையில், அவருள் ஒருவர் ஒரு குறையைக் கண்டார். ஒளித் தொடரில் ஒரு நட்சத்திரம் காணாமற்

போயிற்று. மற்றக் கடவுளரும் அதனை ஒப்புக் கொண்டனர். தொலைந்து விட்ட நட்சத்திரம் மிகச் சிறப்புடையது என்று புகழ்ந்து வருந்தினர். தங்கள் போற்றிப் பாடல் இசையை நிறுத்தினர். காணாமற் போன நட்சத்திரத்தை அது முதல் தேடலாயினர். ஆனால் பயன் எதுவும் வாய்க்கவில்லை.

உண்மையை உணர வல்லவர்கள், இயற்கையினது மருமத்தின் அடியாழத்துக்குச் செல்ல வல்லவர்கள் மட்டுமே கீறல் இல்லா முழுமை - கேடிலா நிறைவு - கடவுளின் படைப்பு எங்கணும் உண்டு என்பதை உணர்வார்கள். நாம் காணும் கீறல்கள், நிறைவின்மைகள், நம் குறுகலான பார்வைக் கோளாறு காரணமாக வந்தவாகும். எனவே படைப்பினில் யாதும் குறைவில்லை என்பதாகும்.

78. புதிதாகப் படைப்பு உண்டான போது விண்மீன்கள் யாவும் பொங்கொளியோடு இலங்க, கடவுளர் வானில் பேரவை கூடினர். "ஆ, நிறைவின் ஓவியம், கலப்பிலா மகிழ்ச்சி" என்று பாடினர்.

ஆனால் ஒருவர், "ஒளிச் சங்கிலி ஏதோ ஓரிடத்தில் விடுபட்டதாகத் தெரிகிறது; விண்மீன் ஒன்று காணாமற் போனது; ஆம். காணாமற் போன அவ் விண்மீன் தவச் சிறப்பானது" என்று திடீரெனக் கத்தினார்.

அவர்களது பொன் வீணையின் கம்பி ஒன்று 'பட்'கென்று அறுந்தது. அவர்களது பாடல் நின்றது. ஏமாற்றத்தோடு, "ஆம். காணா தொழிந்த விண்மீன் நனி சிறந்தது. வானம் அனைத்துக்கும் அது பெரும் புகழாக இருந்தது" என்று கத்தினார்கள்.

அந்த நாள் முதல் அவ் விண்மீனைத் தேடுதல் விடாது நடக்கிறது. "அதனால் வையம் தன் மகிழ்ச்சி ஒன்றை இழந்து விட்டது" என்று ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குக் கூக்குரல் ஓடுகிறது.

இரவின் ஆழ்ந்த அமைதியில் விண்மீன்கள் புன்னகை செய்கின்றன. அவை ஒன்றற் கொன்று "இந்தத்

தேடல் வினையாம், உடைபடா முழுமை யாவற்றி லும் உளது'' என்று தம்முள் மெல்லச் சொல்லிக் கொள்கின்றன.

□ அழகிய தெளிவான சித்திரங்களை இத் தன்னுணர்ச் சிப் பாடல் நம் மனக் கண் முன் கொண்டு வந்து நிறுத்து கிறது. பழங்கதைகளை – தொன்மங்களை – வடிக்கும் கவிஞரின் திறனுக்கு இப் பாடலும் ஒரு சான்றாக உள்ளது.

□ இறைவன் படைத்தான் உலகை
இதில் எல்லாம் அழகே
இதனை அறிகிறது அன்பு;
அன்பே கடமை; கடமை அன்பே.

என்று இராபர்ட் பிரவுனிங் வரைந்த கவிதை அடிகள் இங்கு நினைக்கத் தகுவன.

O

## எழுபத்தொன்பது
## துயரில் மனநிறைவு

□ மனித வாழ்வு என்பது இறைவனை விட்டுப் பிரிந் திருக்கும் இருப்பாகும். வாழ்வின் இறுதி நோக்கு இறை வனை நேர் எதிரே காண்பதாகும். தெய்விகத்தை உணராதவரை மனித வாழ்வின் நன்னோக்கு நிறை வேறியதாகச் சொல்ல முடியாது. தெய்விகக் காட்சி காணப்பெறும் பேறு கிட்டாவிடில் அதன் பொருட்டுத் தன் கனவிலும் நனவிலும் பிரிவுத் துயரையாவது சற்று உணர்ந்திருக்க வேண்டும்.

கைகள் உலகியல் ஆதாயத்தால் நிரம்பியிருக்கும் போதும் இறைமையை உணராதவரை ஒருவன் அடைந்தவை ஆதாயம் அல்ல என்பதை ஒரு நொடியும் மறக்கலாகாது. பிரிவுத் துயரைக் கனவு நேரங்களிலும் விழித்துள செயல் நேரங்களிலும் போற்றியிருக்க வேண்டும்.

மனிதான்மா அமைதியும் இளைப்பாறலும் இறைவனிடம் தான் பெறல் இயலும், ஆகவே அதுவரை இறைமைப்

பிரிவின் துயரை அனுபவித்தலில் அது அமைந்திருக்க வேண்டும்.

79. இவ் வாழ்வில் நின்னைச் சந்திக்கும் நற்கூறு எனக்கு இல்லையேல் நின் காட்சியைத் தவற விட்டேன் என்பதை எக்காலும் உணர்ந்திருப்பேனாக; அதனை ஒரு கணமும் மறவாதிருப்பேனாக. அந்தத் துயரின் வேதனையை என் கனாக்களிலும் விழித்திருக்கும் நேரங்களிலும் சுமந்திருப்பேனாக,

இந்த உலகாகிய கும்பல் சந்தையில் நாள்கள் சென்றொழிய, என் கைகளில் அன்றாட ஆதாயம் பெருகி வழிய, நான் ஆக்கமாக ஒன்றும் அடையவில்லை என்பதை உணர்ந்திருப்பேனாக; அதனை ஒரு கணமும் மறவாதிருப்பேனாக. அந்தத் துயரின் வேதனையை என் கனாக்களிலும் விழித்திருக்கும் நேரங்களிலும் சுமந்திருப்பேனாக.

சாலையோரம் நான் சோர்ந்து மூச்சு இறைக்க உட்கார்ந்திருக்குங்கால், படுக்கையைத் தாழத் தரையில் விரிக்குங்கால் நெடும்பயணம் இன்னம் என் முன் உளது என்று உணர்வேனாக; அதனை ஒரு கணமும் மறவாதிருப்பேனாக. அந்தத் துயரின் வேதனையை என் கனாக்களிலும் விழித்திருக்கும் நேரங்களிலும் சுமந்திருப்பேனாக.

எனது அறை அலங்கரிக்கப்பட்டுக் குழல்கள் ஒலிக்க சிரிப்பு மிகுந்து இருக்குங்கால் நின்னை நான் என் மனைக்கு அழைக்கவில்லை என்பதை எக்காலும் உணர்ந்திருப்பேனாக; அதனை ஒரு கணமும் மறவாதிருப்பேனாக. அந்தத் துயரின் வேதனையை என் கனாக்களிலும் விழித்திருக்கும் நேரங்களிலும் சுமந்திருப்பேனாக.

O

## எண்பது
## தப்பி நின்ற மேகம்

☐ இலையுதிர் காலத்தில் காலைக் கதிரவனின் ஒளி வான் முழுதும் வெளிச்சமாகவும் மாட்சியாகவும் இருக்கும். அச்சமயம் மிச்சப் பட்டுத் தங்கி நின்ற மேகப் பகுதி பயனற்று அலைந்து கொண்டிருக்கும்.

கதிரவனின் வெம்மை அந்த மேகச் சிதரை உருக்கித் தன் ஒளியுடன் இன்னும் ஒன்றாக்கி விடவில்லை.

பயனற்ற மேகச் சிதர் போல் தான் இருப்பதாக அடக்கத் துடன் கூறுகிறார் கவிஞர். கடவுள் ஒளி சான்ற கதிரவன் போல் இருக்கிறார். அவரது ஒளி மானிட இருப்பைக் கரைத்து விடுகிறது அல்லது உலக உயிர்ப்புக்கு முடிவு தந்து விடுகிறது. விடுபட்ட ஆன்மா அதனால் அனைத்து உயிர்க்கும் ஒளிக்கும் ஊற்றுக் கண்ணான இறைவனுடன் ஐக்கியம் ஆகி விடுகிறது.

80. இலையுதிர் காலத்தில் வானில் பயனின்றி அலைந்து கொண்டிருக்கும் ஒரு மேகத் துணுக்குப் போல், யாண்டும் மாட்சியுள்ள கதிரோனே, நான் இருக்கி றேன். நின் ஒளியில் நான் ஒன்றிவிட நின் கைபட வில்லை, என் ஆவியை இன்னும் உருக்கவில்லை. இங்ஙனம் நான் நின்னைப் பிரிந்த மாதங்கள் வருடங் களை எண்ணிக் கொண்டிருக்கிறேன்.

நினக்கு இது விருப்பானால், நினக்கு இது விளை யாட்டானால், என் பறந்தோடும் வெறுமையை எடுத்துக் கொள். அதற்கு வண்ணம் தீற்று, மேற் பூச்சிடு. தன்னிச்சையான காற்றில் மிதக்க விடு. வேறுவேறான விந்தைகளில் பரவுமாறு செய்.

இவ் இரவு நாடகத்தை முடிப்பது எப்போது நினக்கு விருப்பமாக இருக்குமோ அப்போது நான் உருகி இருளில் மறைவேன். வெள்ளிய காலைப் புன்னகை யிலோ மாசிலாத் தூய்மையின் தண்மையிலோ அது நடந்தேறும்.

☐ பணிவும் தன் பயனற்ற நிலையும் புலப்படக் கவிஞர் தன்னை மேகச் சிதர் என்கிறார். மேகத்துக்குத் திடமான இருப்புக் கிடையாது. அது மிதந்து ஏகும் நீராவியால் ஆனது, கடவுள் மாட்சியுள்ள கதிரோன். கதிரொளி பட்டதும் மேகம் மறைந்து போகும், ஒளிபரவும், மேகம் ஒளியுடன் ஒன்றாகும்.

இது நினக்கு விருப்பானால் என்று இறைமையின் விருப்புக்கு ஆட்படுகிறார் கவிஞர். மேகத்தைக் கடவுட் கதிர் தங்கம் போல் ஒளிரச் செய்யலாம் அல்லது இருளில் மறைந்து போகச் செய்யலாம், மேகம் ஒரு பிறந்தேகும் வெறுமை யாயினும் கடவுள் அதில் வண்ணங்களைத் தீற்றவும் உருகிய பொன்னை விட்டுப் போர்க்கவும், விளையாடும் காற்றில் மிதக்க விடவும் வியத்தகு வடிவுகள் உருவுகளில் பரப்பிவிடவும் முடியும்.

தற்போது பயனற்று உடற்கட்டில் தடுமாறிக் கொண்டிருக்கும் கவிஞரது ஆன்மா விடுபட்டு இறைவனது படைப்பாகிய அதிசய அழகில் ஐக்கியம் ஆகிவிடுதற்குத் தான் தன் உடம்பினுள் இருத்தலைக் கரைத்துவிட அவர் வேண்டுகிறார். மேகத்துணுக்கு இரவின் இருளில் மறைந்தோ காலை ஒளியில் கரைந்தோ போதல் போல் இறைவனும் கவிஞரின் உலகியல் வாழ்வை விலக்கி அவனுடன் ஒன்றாக்கி விடுவான் என்கிறார்.

☐ பெரிய அனுபூதிச் சிந்தனைகளைப் பருப்பொருளான படிமவியலில் வெளியிடும் கவிஞரின் கவித்திறம் இத் தன்னுணர்ச்சிப் பாடலில் விளங்கி நிற்கிறது. உயரிய கவிதை அணியியல் மொழியில் தம் ஆழ்ந்த இறைமை ஐக்கிய ஆவலைப் புலப்படுத்துகிறார்.

O

# எண்பத்தொன்று
# காலம் கடவுளின் கையில்

☐ இறைவனிடத்தும் நீக்கமற நிறைந்திருக்கும் அவனது நிறை தன்மையிலும் கவிஞர்க்கு முழுமையான நம்பிக்கை

இருக்கிறது. எவ்வெவ்விடத்தும் இறைவன் இடையறாது வேலை செய்கிறான். இயற்கையின் செயல்கள் யாவற்றுக்கும் பின்னால் அவனது கை இருக்கிறது. விதைகள் முளைத்து வளர, அரும்பு விரிய, மலர்கள் கனிகள் ஆக முதிர வைக்கிறான்.

தனது காலம் வீணே கழிந்தது என்றோ, இன்னும் வேலைக் குறை இருக்கிறது என்றோ மனிதன் வருந்தத் தேவையில்லை. அவன் தன்னை இறைவன் கையில் கொடுத்துவிட வேண்டும். இறைவன் எல்லாவற்றுக்கும் நேரம் வைத்திருக்கிறான். அவன் எல்லாம் வல்லன், எல்லாம் உடையன், அன்பும் நேயமும் மிக்கோன். நம்முடைய நலம் அவன் மனத்தகத்து எப்போதும் இருக்கிறது; மனிதனின் வேலைகளை அவன் ஒவ்வொரு நிமிடமும் மேற்பார்க்கிறான்; மானிட முயற்சிகளுக்கு வெற்றி தந்து வாழ்த்துகிறான். மானுடன் செய்ய முடியாததை அவன் செய்கிறான்.

இறைவன்பால் கவிஞர்க்குப் பூரணமான பற்றுறுதி இருக்கிறது. அவர் களைத்துப் போய் ஒரு குழந்தை போன்று தன் வேலையை மறந்து உறங்குகிறார். மறுநாள் காலையில் அவர் கண்விழிக்கையில் காண்கிறார்; தோட்டம் முழுதும் அதிசயமான மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. இறைவனின் இச் செயல்முறைக்கு முடிவே கிடையாது.

81. இழந்துவிட்ட காலம் பற்றி, நான் சோம்பியிருந்த பல நாள்களில் வருந்தினேன். ஆனால் அஃது இழந்துபடவில்லை; எம் பெருமானே; என் வாழ்வின் ஒவ்வொரு நொடிப் பொழுதையும் நின் கைகளில் எடுத்துக் கொண்டுள்ளாய்.

பொருள்களின் மையத்தில் நீ மறைந்திருந்து, வித்துக்கள் முளைகள் ஆக, அரும்புகள் மலர்கள் ஆக, முதிரும் மலர்கள் பலன் கனிவனவாக வளம் சேர்க்கிறாய்.

நான் களைப்புற்று என் சோம்பற் படுக்கையில் துயின்று என் வேலை யாவும் தீர்ந்தது என்று கற்பனை செய்தேன். காலையில் கண் விழிக்க, என்

தோட்டம் மலர்களாகிய விந்தைகளால் நிறைந் திருக்கக் கண்டேன்.

❑ முழுப் பற்றுறுதியே-விசுவாசமே-தேவை. இறையின் பம் முழுமையாக நம்மை மூழ்க வைத்து விடுகிறது. இந்த அனுபூதி அனுபவம் அப்படியே ஓர் ஓவியம் வரையப் பெற்றது போன்ற படிமத்தின் மூலம், சோர்ந்த குழந்தை உறங்குவது-மறுநாள் அதிசய மலர்கள் நிறைந்த தோட் டத்தில்—விழிப்பது-ஆகிய காட்சியின் மூலம், தரப்படு கின்றது.

O

# எண்பத்திரண்டு
# இன்னமும் நேரம் இருக்கிறது

❑ கடவுள் நிலையானவர். அவருக்குத் தோற்றம் இறுதி கிடையா. முடிவிலாக் காலம் அவர் வசம் உள்ளது. இன்று சிரித்து நாளை உலரும் மலர்களைப் போல ஊழிகள் தோன்றி மறைகின்றன. நிலைபேறு என்பதுடன் ஒப்பிடுகையில் நூற்றாண்டுகள் என்பன இமைப் பொழுது களே. தன் வேலை நிறைவு பெறக் கடவுள் இடையறாது இயற்றுகிறார். ஒரு சிறு காட்டுப்பூ. அது ஒன்றும் பெருமையுடையது அன்று. ஆயினும் அதனை முழுமை பெறச் செய்ய நூற்றாண்டுகள் ஆகின்றன. இந்தக் கருத்தை அறிவியலும் ஒப்புகிறது. மானிடன் தானும் இன்றைய நிலைக்கு வருவதற்கு எத்தனை ஊழிகள் ஆயினவோ! கடவுளுக்கு எல்லாம் ஒன்றே. பூவும் சரி, மானிடனும் சரி. எல்லாம் முக்கியம் தாம்.

மானிட வாழ்வு சிறியது. சற்றுச் சோம்பிச் சுணங்கி யிருக்க முடிவதில்லை. நமது வாய்ப்புக்கு முந்தியடித்து ஓட வேண்டியிருக்கிறது. உலகியல் வினைகள், பொருளா தாரச் சேர்க்கைகள் என்று நாம் தலைதடுமாறித் தவிக் கிறோம். கடவுளை நினைக்க முடிவதில்லை.

வாழ்வின் அந்தி நேரம் வந்ததும் நமக்கு அச்சம் உண்டாகிறது. கடவுளை நினைக்கவும் அருளை உணர வும் செய்யாது போயினோம் என்று விரைவு கொள்

கிறோம். ஆனால் கடவுளோ மறப்பு அறியாதவர், காத்திருக்கிறார். அவரது இரக்கமும் பொறுமையும் ஆதரவும் ஈறிலாதவை. ஆகவே மானிடன் மனம் தளரத் தேவையில்லை. இறைவன் பக்கம் அவன் திரும்ப நேரமாகி விட்டது என்பது ஒருபோதும் இல்லை.

82. நின் கையில் முடிவிலாக் காலம் இருக்கிறது. எம் பெருமானே, நின் நிமிடங்களைக் கணக்கிட எவரும் இல்லை.

பகல் இரவுகள் செல்கின்றன. ஊழிகள் மலர்கள் போல் மலர்ந்து உலர்கின்றன. காத்திருப்பது எங்ஙனம் என்று நீ அறிகுவை.

நின் நூற்றாண்டுகள் ஒரு வனச் சிறு பூவை முழுமை ஆக்குவதில் ஒன்றன் பின் ஒன்று செல்கின்றன.

எங்களுக்கு வீண் போக்க நேரம் இல்லை. எங்கள் வாய்ப்புகளுக்கு நாங்கள் முண்டியடித்து ஓட வேண்டும். காலம் தாழ்த்த முடியாதவாறு நாங்கள் வறியவர்கள்.

குறை பேசும் ஒவ்வொருவனுக்கும் நான் நேரம் போக்கலால் அந் நேரமும் போய் விடுகிறது. இறுதி வரை நின் திருமுன்னர் எந்தப் படையலும் வைக்கப் படாமல் வறிதே இருக்கிறது.

பொழுது அடைகையில் நின் கதவு சாத்தப்பட்டு விடுமோ என்று நான் அச்சத்தில் விரைகிறேன். ஆனால் இன்னும் நேரம் இருக்கிறது என்று அறிகிறேன்.

☐ இந்தப் பாடலின் அடிக்கருத்தும் காலமே. ஒரு வகையில் காலம் விரைந்து பறந்தோடினாலும் இன்னொரு வகையில் காலம் ஏராளமாக இருக்கிறது என்பதாம். ○

# எண்பத்துமூன்று
# அன்னைக்கு முத்தாரம்

□ கடவுள் நமக்குத் தாயாகவும் இருக்கிறார். இந்த இசைப்பாவில் கடவுளைத் தாயே என்று விளிக்கிறார் கவிஞர்.

தனது ஆழ்துயரில் உதிர்த்த முத்து அனைய கண்ணீர்த் துளிகளால் அவளுக்கு ஆரம் தொடுக்கப் போவதாகக் கூறுகிறார். விண்மீன்கள் தெய்வத்தாயின் அடிகளுக்கு ஒளிச் சிலம்பு செய்திருக்கின்றன. கவிஞரோ அவளது மார்புக்கு அணியாக மாலை தொடுப்பார்.

பொருள் புகழ் என வரும் கொடைகளைக் கவிஞர் அன்னையிடமிருந்து தான் பெறுகிறார். ஆனால் துன்ப துயரங்கள் என்பன அவருக்கே சொந்தமானவை. அவற்றை அவர் தெய்வத்தாயின் திருமுன் படைப்பார். அதனை அவள் உவகையொடு ஏற்றுக் கொள்வாள்; கருணை பொழிவாள்.

வையகத்தில் உள்ள செல்வம் பேர் புகழ் என்பன துன்புறும் ஆன்மாவின் கண்ணீர்த் துளிகள் போல இறைவற்கு விருப்பானவை என்று சொல்ல முடியாது. ஏனெனில் பொன் பொருள் போல்வன இறைவன் தருபவை. அவற்றிற் சிலவற்றைத் திருப்பித் தருவது எங்ஙனம் காணிக்கையாகும்? ஆனால் துன்பத்தில் போதரும் அடியாரின் கண்ணீர் அடியார் தமக்குத் தனி உரிமையானவை. ஆகவே காணிக்கை என்பதன் உண்மையான பொருளில் அது தரப்படுவதாகும்; ஆகலின் இறைவனால் மதிக்கப் பெறுகிறது. துயரம் ஆன்மாவைத் தூய்மைப் படுத்துகிறது. அது ஆன்மாவைக் கடவுளுக்கு அணுக்கம் ஆக்குகிறது.

83. தாயே நின் கழுத்தில் அணிய ஒரு முத்தாரம், என் துன்பக் கண்ணீரால் தொடுப்பேன்.

விண்மீன்கள் நின் அடிகளுக்கு அலங்காரமாக ஒளிச் சிலம்புகள் செய்திருக்கின்றன. ஆனால் என்னதோ நின் மார்பில் கிடக்கும்.

சொத்தும் புகழும் நின்னிடமிருந்தே வருகின்றன. அவற்றை வழங்குவதும் வைத்துக் கொள்வதும் நின் சித்தம் ஆகும். ஆனால் என்றன் இந்த துயரம் முழுக்க எனக்குச் சொந்தம். அதனை நான் நினக்குக் காணிக்கையாக் கொணர்கையில் நின் அருட்கனிவை அதற்குப் பரிசிலாக வழங்குகிறாய்.

□ தாயாக இறைவனை இப் பாடலில் பேசுகிறார் கவிஞர். அப்பனும் அம்மையும் அருமைத் தலைவனும் மற்று எல்லாமுமாக – எல்லாம் ஆனவனாக இறைவன் இருக்கிறான். நமக்கு அருள்கிறான்.

O

## எண்பத்து நான்கு
## பிரிவுத் துயரின் விளைவு

□ இந்தப் பேருலகை இறைவன் தன்னிலிருந்து, தன்னைப் பிரித்த, கூறுகளுக்குப் பேரெண்ணிக்கையான வடிவுகள் தந்து அவற்றைப் படைத்தளித்தான். இவ் எண்ணிலா அழகிய வடிவுகள் வண்ணங்கள் ஒலிகள் என்பவற்றை நாம் நம் பொறிபுலன்களால் உணர்கிறோம்.

மனிதனும் இயற்கையும் மற்றும் இறைமையில் எல்லாக் கூறுகளும் பிரிவுத் துயர் சூழ்ந்தவாறு இருக்கின்றன. பிரிவின் துயரம் விண்ணின் ஒரு பக்கமிருந்து இன்னொரு பக்கம் வரை பரவியிருக்கிறது. ஓசைப்படாமல் இராப் பொழுதில் விரைந்து சென்று நட்சத்திரங்களின் ஒளிப் பெருக்கில் அது மிளிர்கிறது. இருள் மலிந்த ஆடி மழை நாளில் இலைகளின் சலசலப்பு உணர்ச்சிப் பாடலாக அது மெல்லொலி செய்கிறது. அது மானுடக் காதல் ஆசை துயரம் உவகைகளில் வெளிப்படுகின்றது.

ஐக்கியமே எல்லாவற்றுக்கும் மூலாதாரம். தனித் தனியாக உள்ளன யாவும் பரம்பொருளோடு, படைப்புக்கு முந்திய காலத்தில் இருந்ததுபோல் ஐக்கியம் ஆகும் வரை இத் துயரம் இருக்கும். இந்தப் பிரிவுத் துயரம் முடிவிலாப் பொருளாம் இறைவனிடத்திலும் முடிவுறு

பொருளாம் மானிடனிடத்திலும் பொதுவாக மிகுந்திருக்கும். ஐக்கியத்துக்கான தூண்டுதல், படைப்பிலுள்ள யாவற்றையும் உந்துகிறது.

84. பிரிவின் பெருந்துயரம் உலகெலாம் பரவி, முடிவிலா வானத்தின் எண்ணிலா வடிவுகளைப் பிறப்பிக்கிறது.

இந்தப் பிரிவுத் துன்பமே இரவெலாம் ஒரு விண்மீனிலிருந்து இன்னொரு விண்மீனுக்கு ஓசைப்படாமல் பார்வை செலுத்துகிறது; ஆடித்திங்களின் மாரி இருளில் சலசலக்கும் இலைகளின் உணர்ச்சிப்பாடல் ஆகிறது.

மிகுந்து பரவிய இவ் வேதனையே, மனையகங்களில் காதல் - ஆசைகளை, நோவுகள்-உவகைகளை ஆழமாக்குகிறது. அதுதான் எப்போதும் உருகி என் கவிநெஞ்சில் பாக்களாகப் பெருகிப் பாய்கிறது.

□ இயற்கையில் இருக்கும் தன்போன்ற கடவுட்பகுதியின் மூலம், அதாவது தன் சுய உணர்வின் மூலம் இறைவனை அறியக் கூடிய சக்தி மனிதனுக்கு இருக்கிறது என்கிறார் கவிஞர்.

□ தெய்வத்திடமிருந்து பிரிந்திருத்தல் பற்றிச் சரோஜினி நாயுடு பாடுகிறார்;

ஆழ்ந்த வேதனையும் பேரின்பமும்,
நிறைவேற்றமும் விடைபெறலும் - என்று
ஒருங்கே ஒரு முத்தத்தில் வைக்கப்பட்டிருத்தல்
போன்று

இரட்டையாக வளர்க்கப் பெற்ற அன்பின் வரம்-
—இது போல் புதுமையானது
இறைவன் உலகில் அளித்த கொடைகளில்
வேறு யாது உளது? யார் அறிவார்?

O

# எண்பத்தைந்து
# மறுபடி பேரின்ப அமைதி

☐ வானகத்தில் உள்ள தன் வீட்டை விட்டு மனிதன் பூவுலகிற்கு வருகிறான். அப்படி வருகின்றவனுக்கு வலுவும் இல்லை துணையும் இல்லை. உலகின் துன்ப துயரங்களிலிருந்து இடும்பைகளிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள அவனிடம் ஆயுதங்கள் இல்லை. வல்லமை இல்லை.

பூவுலகில் அவன் தங்கல் முடிந்ததும் வானகத்திலுள்ள தன் வீட்டுக்குத் திரும்புகிறான். பாடுபட்டுத் தான் சேர்த்த சொத்து சுகங்களை எல்லாம் இங்கேயே விட்டு விட்டுச் செல்கிறான். ஆனால் அங்கே தெய்விகக் கலப்பின் நிறை இன்பமும் அமைதியும் மறுபடி கிடைக்கின்றன.

85. தங்கள் தலைவனின் கூடத்தை விட்டு முதலில் போர்வீரர்கள் வந்த போது அவர்கள் தங்கள் ஆற்றலை எங்கே மறைத்து வைத்திருந்தார்கள்? அவர்களது கவசமும் போராயுதங்களும் எங்கே இருந்தன?

அவர்கள் ஏதும் இல்லாதவராகவும் ஆதரவற்றவராகவும் காணப்பட்டார்கள். அவர்கள் தங்கள் தலைவனின் கூடத்தை விட்டு வெளியே வந்த நாளில் அவர்கள் மேல் அம்பு மாரி வந்து வீழ்ந்தது.

போர்வீரர்கள் தங்கள் தலைவனின் கூடத்துக்கு மறுபடி அடிவைத்துச் செல்கையில் தங்கள் ஆற்றலை எங்கே ஒளித்து வைத்தார்கள்?

அவர்கள் வாளையும் வில்லையும் அம்பையும் போட்டு விட்டார்கள். அவர்களின் நெற்றியில் அமைதி விளங்கியது. தங்கள் தலைவனின் கூடத்துக்கு மறுபடி அடிவைத்துச் சென்ற நாளில் அவர்கள் தங்களின் வாழ்வின் பலன்களைத் தங்களுக்குப் பின்னால் விட்டுச் சென்றார்கள்.

☐ அதிகாரம் பணம் முதலியவற்றின் பயனிலாமையைச் சுட்டுவதோடு இந்தப் பாடல் ஆன்மாவின் மெய்யான தன்மையையும் எடுத்துக் காட்டுகிறது.

☐ இது தொடர் உருவகமான ஒரு பாட்டு. சுவர்க்கத்தை ஒரு கூடம் — மன்றம்-ஆகக் கற்பிக்கிறார் கவிஞர். கடவுள் அவ்விடத்தின் நாயகர். மானிடர் உயிர்கள் யாவும் அங்கே தலைவனிடம் பணியாற்றும் வீரர்கள். அவர்கள் வானகத்தில் - சுவர்க்கத்தில்-இருந்த வரை அவர்களுக்கு மிகுதியான வலிமை இருந்தது. போர்க் கருவிகளும் கவசமும் தரிந்திருந்தார்கள். இவ் வுலகிற்கு அவர்கள் வந்ததும் அவர்களின் வலிமையும் போர்க் கருவிகளும் அவர்களிடமிருந்து தப்பி ஓடின. அதாவது அவர்கள் மானிடக் குறைகள் - பலவீனங்களுக்கு உள்ளானார்கள். திரும்ப அவர்கள் வானகம் சென்றதும் மறுபடி அமைதி பெற்றார்கள். உலக உடைமைகளோ மானிடப் போராயுதங்களோ அங்கு அவர்களுக்குத் தேவைப்படவில்லை

O

## எண்பத்தாறு
## கால தேவன்

☐ காலன்-அவன் கடவுளின் தூதன். அவனது வருகையால் தனக்கு இறைவனிடமிருந்து செய்தி வருகிறது. என்று உணர்கிறார் கவிஞர்.

அமரத்துவம்-நிலைபேறு என்ற கடல் கடந்து வருகின்ற அவன் இருண்ட அச்சம் தரும் இரவு ஒன்றில் வருகின்றான். நெஞ்சார, பணிவுடன் அவனைக் கை தொழுது வரவேற்பார் கவிஞர். தன் இதயக் கருவூலத்தை அவனது காலடியில் வைப்பார். தன் வாழ்வையும் பொருள்களையும் கால தேவனிடம் கொடுத்து விடுவார். ஆனால் ஒன்றை மட்டும் தன்னிடம் வைத்திருப்பார். அஃது 'கைவிடப்பட்ட' அவரது ஆன்மா.

கடைசியானதும் மிகச் சிறந்ததுமான தனது காணிக்கையாக அதனை அவர் இறைவனுக்குக் கொடுத்தற்காக வைத்துக் கொள்வார்.

86. நின் பணியாளாகிய மரணம் என் கதவருகே இருக்கிறான். அறிந்திராக் கடல் கடந்து வந்திருக்கிறான். நின் அழைப்பை என் இல்லத்துக்குக் கொண்டு வந்துள்ளான்.

இருட்டாக இருக்கிறது இரவு. என் நெஞ்சில் அச்சமாக இருக்கிறது. இருப்பினும் விளக்கை எடுப்பேன், வாயிலைத் திறப்பேன். அவனை வரவேற்க வணங்குவேன். என் வாயிலருகே நிற்பவன் நின் தூதுவன் தான்.

கூப்பிய கைகளோடும் கண்ணீரோடும் அவனை வணங்குவேன். என் நெஞ்சக் கருவூலத்தை அவனது காலடியில் வைத்து வணங்குவேன்.

அவன் தான் வந்த காரியம் முடித்து, எனது காலைப் பொழுதில் ஓர் இருண்ட நிழலை விட்டுவிட்டுத் திரும்புவான். ஆளற்ற என் வீட்டில் திக்கற்ற எனது ஆன்மா மட்டும் நினக்குக் காணிக்கையாகத் தங்கியிருக்கும்.

☐ மரணம் இறைமையோடு கலக்க ஆன்மாவை வழி நடத்துகிறது என்பதும் வாழ்க்கையைக் காலனுக்கும் ஆன்மாவை இறைவனுக்கும் அளிப்பார் கவிஞர் என்பதும் அறியலாகின்றன.

O

## எண்பத்தேழு
## அங்கே காணலாம்

☐ கவிஞர் தன் அன்பு மனையாளை இழந்தார். மனம் தளர்ந்தவராக வீட்டின் மூலை முடுக்கெல்லாம் தேடுகிறார். வீடு, இந் நிலவுலகம்.

இந்த வுலகை விட்டுச் சென்றோர் திரும்ப வருதலில்லை. ஆனால் சிறியதும் நிலையற்றதுமான—இவ் வுலகை விட்டுப் போன—பொருள்கள் முடிவற்ற நிலையான இறையுலகில் பாதுகாக்கப் படுகின்றன. தன் அன்பு மனைவி

யைக் கவிஞர் அவ்வுலகில் சந்திக்க முடியும். அதில் அவர்க்கு உறுதி உண்டு.

பொன்மயமான ஆகாய விதானத்தின் கீழே நின்று கொண்டு கவிஞர் அண்ணாந்து மேலே பார்க்கிறார். ஊக்கம் தரும் செய்திகளோடு ஒளி மிளிரும் விண்மீன்களைக் காண்கிறார்.

நம்பிக்கைகள் ஆசைகள் மகிழ்ச்சிகள் அன்புமுகங்கள் என்று இவ்வுலகினின்று காணாற் போனவை இறைவனின் உலப்பிலா உலகிற் காணுமாறு உள்ளன. ஆகவே அவர் தன் வாழ்க்கையாம் வெறும் கலயத்தை அளவற்றதாகிய நிலைபேறாம் கடலில் அமுக்கச் சொல்கிறார் அதனால் அவர் தன் அன்புக்குரியாளின் இனிய தொடுதலை-பரிசத்தை- அனுபவிக்க முடியும், அழகு முகத்தைக் காண முடியும்.

87. நம்பிக்கைத் தளர்ச்சியோடு அவளை நான் என் அறையின் மூலைகள் எல்லாம் தேடுகிறேன், அவளைக் காண்கிலேன்.

சிறியது என் இல்லம். அதனின்று ஒரு முறை சென்றதனைத் திரும்ப அடைய இயலாது.

ஆனால் நின் மாளிகை எல்லையில்லாதது. எம் பெருமானே, அவளைத் தேடி நின் கதவருகே வருகிறேன்.

மாலைக் காலத்து விசும்பாகிய பொன் முகட்டின் கீழே நான் நிற்கிறேன். ஆர்வ மிக்க என் விழிகளால் மேனோக்கி நின் முகம் பார்க்கிறேன்.

□ தம் இல்லத்தில் அடுத்தடுத்து நிகழ்ந்த மரணப் பிரிவுகளால் தாகுர் மிகவும் மனம் வருந்துதலுக்கு உள்ளானார். அவரது துயரமும், இழப்புகட்குப் பின் வந்த நம்பிக்கையும் இந்தப் பாடலில் வெளிப்படுகின்றன.

□ விடைபெற்றுக் கொள்கிறேன், நண்பர்களே;
பிரபஞ்சம் ஆகிய உறைவிடம் மிகச் சிறியது.
ஆகா, நானும் என் அன்புமே விளையாடுவோம்;
இருவர் சேர்ந்து நீந்தும் மகிழ்ச்சிகள்!

இருவர் சேர்ந்த மகிழ்ச்சியா? இல்லை, நீந்துவோர்கள் கடலாகவே உருண்டு கரைந்து விடும் மகிழ்ச்சி.

என்று நம்பிக்கையும் மகிழ்ச்சியும் வெளியிடுகிறார் சுவாமி இராமதீர்த்தர்.

O

# எண்பத்தெட்டு
# பாழடைந்த கோயில்

□ ஒரு பாழடைந்த கோயில். அங்கு வழிபாடு நடை பெறவில்லை. தெய்வத் திருமேனியின் முன் போற்றிகள் தோத்திரம் எதுவும் பாடப் பெறுவதில்லை. வழிபாட்டு நேரங்களை அறிவிக்கும் மணியோசை அங்கு எழுவதில்லை. பருவத்தே மலரும் போதுகள் மணம் வீசுகின்றன. ஆனால் அவை இறைவற்குச் சாத்தப் பெறுவதில்லை. நிறைவேறா விருப்பங்களை நெஞ்சில் சுமந்தவாறு அங்கும் இங்கும் திரிந்த முதிய பக்தர் ஒருவர் சோர்வுடன் மங்கலான ஒளியில் கோயிலுக்குத் திரும்புகிறார்.

அவர் விளக்கேற்றவும் இல்லை. வழிபாடு இயற்றவும் இல்லை.

திருநாள்கள் வருகின்றன, போகின்றன. ஆனால் அந்தப் பாழ்ங்கோயிலின் தெய்வத் திருவுருவுக்குச் சிறப்பொடு பூசனை எதுவும் இல்லை. இரவுகள் கழிகின்றன. ஆனால் அங்கு விளக்கு எதுவும் இல்லை.

புதிய பல சிலைகள் திறமான கைவினைஞர்களால் தோன்றுகின்றன. காலப் போக்கில் அவை மறக்கப்படுகின்றன.

ஆனால் கடவுட் சிலை சிதைந்த கோயிலில் இருப்பது வழிபடப் படாமல் கருதுவாரற்று இருக்கிறது.

88. பாழடைந்த கோயிலின் திருமேனியே, வீணையின் கம்பிகள் அறுந்து நின் புகழ் இசைத்தல் தீர்ந்தது. நின் மாலைக் காலப் பூசனைக்கு மணிகள் சாற்று

வதில்லை. நின்னைச் சுற்றியுள்ள காற்று அசை வின்றி ஓசையற்று இருக்கிறது.

ஊர் சுற்றும் இளவேனில் காலத்துத் தென்றல், கைவிடப் பட்ட நின் குடிக்கு வருகிறது. நின் பூசனைக்குப் பயன்படுத்தாமல் விடப்பட்ட மலர் களின் செய்தியை அது கொண்டுவருகிறது.

நின் பழைய பக்தன், இன்னமும் மறுக்கப்படும் அனுகூலத்துக்கு ஆசை கொண்டு சுற்றித் திரிகி றான். மாலை நேரத்து நெருப்பும் நிழலும் புழுதி மங்கலில் கலக்கும் சமயம் தன் நெஞ்சிற் பசியோடு பாழடைந்த கோவிலுக்குக் களைத்துத் திரும்பு கிறான்.

நின் விழாநாள்கள் பல அரவமில்லாமல் வந்தன; பாழ்ங்கோயிலின் திருமேனியே, பூசனைக்கான இரவுகள் பல, விளக்கு ஏற்றப்படாமல் சென்றொழி கின்றன.

நுண்வினைச் சிற்ப வல்லுநர் பல புதுப் படிமங்களை ஆக்குகின்றனர். அவை தத்தமக்கான நேரம் வரும் பொழுது புனித மறதி ஓடைக்குத் தூக்கிச் செல்லப் படுகின்றன.

பாழ்ங் கோயில் திருமேனி மட்டும் வணங்கப் படாமல் அழிவற்ற புறக்கணிப்பில் இருந்து வருகிறது.

☐ புதிய அமைப்புகள், மதிப்புகள், கொள்கைகள் என்று தோற்றுவிப்பதில் மானிடர் ஆர்வம் காட்டுகின் றனர். அவைதாமும் கால ஒழுங்கில் ஆதரவு இழந்து மறதியுட் பட்டு மடிகின்றன.

கடவுளும் சமயமும் என்றென்றும் இருப்பன. ஆனால் இந்த உலகாயத காலத்தில் அவை புறக்கணிப்புக்கு உள்ளாகின்றன.

☐ தெய்வச் சிலை, அஃது இருக்கும் பாழ்ங்கோயில், அங்கிருக்கும் அமைதி என்ற காட்சி அழகிய கற்பனை யுடன் வரைவு பெற்றுள்ளது. பாழ்ங்கோயில் சிலை என்பது பொருள் வேட்கை மிக்க யுகத்தில் மனிதன் கடவுளை மறந்து விட்டதன் குறியீடாக உள்ளது.

# எண்பத்தொன்பது
# திடீரென வந்த ஒளிப்பெருக்கு

☐ ஆன்மிக ஒளி வரப்பெற்றார் கவிஞர். தெய்விகச் செய்திகள் அவருக்குக் கிடைக்கின்றன. ஆகவே, உலகத்துப் பெரும்பாலோர் பொருளியல் சேர்க்கைகட்காக ஒருமுகப்பட்டு உளங்கொண்டிருக்கையில் உரத்த குரலில் உள்ளீடற்ற சொற்களால் இறைவனை ஏத்துவது போன்று அவர் வழிபாடு செய்ய மாட்டார். அதற்கு மாறாக அவர் பேச்சுஉரை யின்றிப் போற்றுதல் செய்வார். தன் மெய்யான உணர்ச்சிகளை இனிய இணக்கமான இசைப் பாக்களில் பெய்வார்.

இவ்வுலகு, மன்னாதி மன்னனான ஒரு மன்னனின் அங்காடி போன்றுளது. வாங்குவதும் விற்பதும் ஆகிய வினைகளில் மக்கள் இயங்குகிறார்கள். அவ்வாறிருக்கக் கவிஞர்க்கோ இறைமை அழைப்புக் கேட்கிறது. அதனால் அவர் உலகியற் பொருள் ஈட்டங்களை விட்டு ஒதுங்குகிறார். அதாவது அவர்க்கு இறையியல் ஒளி வாய்க்கிறது. பயனற்றவும் பொருளற்றவுமாகிய உலகியற் சேர்க்கைகளை உதறுகிறார். உள்ளத்தையும் உயிரையும் தெய்விக வழிபாட்டில் உட்படுத்துகிறார்.

விண்டுரைக்க முடியாத இன்பம் அடைகிறார் கவிஞர். அவர் அடையும் தெய்விக இன்பத்தில் இயற்கையும் பங்கு கொள்கிறது.

அவரது தோட்டத்தில், காலமன்றியும் பூக்கள் பூத்துக் குலுங்குகின்றன. தேன் ஈட்ட வந்த ஈக்கள் மந்தமான மொய்ப்பிசை புரியத் தொடங்குகின்றன.

நல்லதும் கெட்டதுமான பூசல்களில் கவிஞர் தனது காலத்திற் பெரும் பகுதியைக் கழிய விட்டார். ஆனால் உலக அடைவுகளிடை உணர்ந்துகொள்ள முடிந்திராத தம்பிரானாகிய தோழன் தன்னைத் திடுமென அழைப்பதை உணர்கிறார். காலமல்லாக் காலத்தில் வரும் அந்த அழைப்பின் காரணம் கவிஞர்க்குத் துலக்கமாக வில்லை. ஆயினும் தன்னைப் படைத்தோனை நெஞ்சின் அடியாழத்தில் வைத்து வணங்குதல் செய்வார் அவர்'

89. இனிக் கூச்சலான உரத்த வாய்ச் சொற்கள் என்னிடமிருந்து வாரா. அஃது என் தலைவனின் சித்தம். இது முதலாக ஓசைப்படாது மென்முறைல் நான் இயம்புவேன். என் நெஞ்சின் பேச்சு முணுமுணுப்பாக ஒரு பாடலில் ஏந்தி வரப்பெறும்.

வேந்தனின் அங்காடிக்கு மானிடர் விரைகின்றனர். வாங்குவோர் விற்போர் அனைவரும் ஆங்கு உளர். நாளின் நடுவில் வேலை நெருக்கில் காலமிலாத் தருணத்தில் நான் விடைபெறுகிறேன்.

என் தோட்டத்து மலர்கள் தமக்கான நேரம் இஃது இல்லை எனினும் மலருமாக. நண்பகல் தேனீக்கள் தமது நிதானமான மொய்ப்பு இசையை எழுப்புமாக.

நல்லவும் தீயவுமாகிய பூசலில் நான் நேரம் பல செலவிட்டேன். வெறும் நாள்களில் என் விளையாட்டுத் தோழனானவனுக்கு என் நெஞ்சைத் தன்பால் ஈர்ப்பது மகிழ்ச்சியாக உள்ளது. பயனற்றதும் தொடர்பில்லாததுமான எந்த விளைவுக்கோ இந்தத் திடீர் அழைப்பு என்பது அறிகிலேன்.

▢ எல்லாப் பொருளையும் உள்ளூடு காணும் பேறு கவிஞரிடம் வாய்க்கவே கவிஞரிடம் திடீரென்று ஒளிப் பெருக்கு உண்டாகிறது. அதனால் கிட்டிய அனுபூதியாம் அனுபவத்தை இந்த இசைப்பாவில் கண்ணெதிர் காணும் வடிவாகச் சமைக்கிறார் அவர்.

இந்தத் தன்னுணர்ச்சிப் பாடல், குறிப்புப் பொருண்மையும் குறியீட்டு இயல்பும் பெற்றுத் திகழ்கிறது.

O

## தொண்ணூறு
## காலனுக்கு அன்பளிப்பு

▢ காலனுக்கு அஞ்சவில்லை கவிஞர். அவன் அவரது வீட்டுக் கதவை வந்து தட்டும் போது அவர் அவனிடம் முழுமையாகத் தன்னதைத் தந்து விடுவார்.

கால தேவன் தன் வீட்டுக்கு வருகையில் சிறப்புக்குரிய விருந்தாளி போல் அவனை வரவேற்று, நிரம்பிய தன் வாழ்க்கைக் கலத்தை அவன் முன் வைத்து விடுவார். கால தேவன் வெறுங்கையோடு போக அவர் விடமாட்டார். தன் வாழ்க்கை முழுதும் திரட்டிய இனியனவும் மதிப்பு மிக்கனவுமாக உள்ள எல்லாவற்றையும் அவன் காலடியில் வைத்து விடுவார்.

90. மரணம் உனது கதவைத் தட்டுகிற நாளில் நீ என்ன கொடுப்பாய்?

என் விருந்தாளியின் முன் என் வாழ்க்கையென்னும் நிரம்பிய கலத்தை இருக்கச் செய்வேன். வெறுங் கையோடு அவன் திரும்பிப் போக விடமாட்டேன்.

என் கனிமுதிர் பருவத்துப் பகல்களின் கோடை இரவுகளின் இனிய கனித் தொகுதியையும் என் சுறுசுறுப்பான வாழ்வின் ஈட்டங்கள் சேர்க்கைகள் யாவற்றையும், என் நாள்களின் இறுதியில், மரணம் என் கதவைத் தட்டும் போது அவன் முன் வைப்பேன்.

□ உடம்பின் பிணைப்பிலிருந்து விடுபடுவது மரணம். கவிஞரின் எண்ணம் மரணத்தின்பால் திரும்புகிறது. அவர் அதற்கு அஞ்சவில்லை. மாறாக அவர் அதனை வரவேற்கிறார். தெய்விகத்தை நேர் எதிரே ஆன்மா சந்திப்பதற்கான வாயிலாக மரணம் இருக்கிறது என்பது அதற்குக் காரணம்.

O

## தொண்ணூற்றொன்று
## அவனுக்காகவே

□ வாழ்வின் இறுதியாக நிறைவு தருவது மரணம் என்று கவிஞர் கருதுகிறார். அதற்குரிய வரவேற்புக்கு வாழ்வில் நாம் ஆயத்தம் செய்ய வேண்டும். தன் வாழ்வை ஒரு மணப் பெண்ணாகவும் மரணத்தை மணமகனாகவும் ஒப்பிட்டுக் காண்கிறார்.

தன் மணாளன் வரும் வரும் என்று நாளும் நாளும் மணப் பெண் காத்திருக்கிறாள். அவனுக்காகவே தன் இன்ப துன்பங்களைத் தாங்கி நிற்கிறாள். தனது யாவற்றையும் அவனுக்காகத் தியாகம் செய்ய ஆயத்தமாக உள்ளாள். அவளது இதயத்தின் இடைவெளி எல்லாம் விவரிக்க முடியாத காதல் உணர்வு பொங்கி வழிகிறது. அவன் உயிரோட்டமான ஒரு பார்வையை அவள் மீது வீசினால் அவள் முழுக்கத் தன்னை அவனிடம் ஒப்படைத்து விடுவாள். மணமகனுடன் கூடிய முழு ஐக்கியத்தில் நிறைவையும் முழு ஆனந்தத்தையும் உணரும் மணப் பெண்போலக் கவிஞர் சாவின் ஐக்கியத்தில் நிறைவும் ஆனந்தமும் அடைவார்.

91. நீ எனது வாழ்வின் இறுதி நிறைவேற்றம். மரணமே, என் மரணமே, வா, என்னிடம் மெல்லப் பேசு.

நாளும் நாளும் நான் உனக்காக விழிப்புடன் காத்திருந்தேன். வாழ்வின் மகிழ்ச்சிகள் வேதனைகளை உனக்காகத் தாங்கியிருந்தேன்.

நான் என்ற எல்லாமும், நான் வைத்திருப்பனவும், நான் நம்புவனவும், என் எல்லா அன்பும் எப்பொழுதும் நினக்காக மறைவின் ஆழத்தில் பாய்ந்திருக்கின்றன. நின்னிடமிருந்து முடிவான ஒரு பார்வை வீச்சு - அத்துடன் என் உயிர் எப்போதும் நின்னுடையதே.

மலர்கள் மாலையாகத் தொடுக்கப்பட்டு மணமகனுக்கு ஆயத்தமாக உள்ளன. மணம் முடிந்ததும் மணமகள் தன் தலைவனைத் தனிமையான இரவில் தனியாகச் சந்திப்பாள்.

☐ மணவினை முடிந்ததும் மணமகளாகிய தனி ஆன்மா தன் பெற்றோரின் இல்லம் விட்டு நீங்கித் தன் தலைவன்-கணவனின்-வீட்டில் திருமண மங்கலம் நிறைவேற்றம் பெறும் இரவில் இருளில் சந்திக்கச் செல்வாள். அவ்வாறே கவிஞர் மகிழ்ச்சியோடு இறப்பார். இறப்பில் அவர் வாழ்வு தன் நிறைவேற்றம் காணும்.

நுண்மையான அருளியல் நினைப்பினை விளக்குதற்கு வந்துள மணப் பெண் படிமம் துலக்கமாக-கண் கூடாகக்-காணுமாறு சித்திரிக்கப் பெற்றுள்ளது.

ஆன்மா கடவுளின் இராச்சியத்திற்குச் செல்லவும் அவரோடு ஐக்கியமாதற்கும் வாயிலாக இருக்கும் மரணத்தைக் கவிஞர் வரவேற்கிறார்.

O

# தொண்ணூற்றிரண்டு
# விடை பெறும் நாள் வரும்

❏ தன் வாழ்வின் முடிவு நேரம் வந்து விட்டது என்று கவிஞர் உணர்கிறார். மரணச் சிந்தனைகள் அவர் மனத்தை வழி நடத்தத் தொடங்கின.

அவர் இறந்து விடுவார். அதனால் இயற்கை எந்த மாற்றமும் இன்றித் தன் வழியில் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும். இரவில் விண்மீன்கள் மிளிரும். விடியற் காலம், வழக்கமான தன் பொங்கொளியோடு தோன்றும். ஒவ்வொரு நாழிகையும் தான் தனக்கு உரிய இன்ப துன்பங்களைக் கொண்டு வந்தவாறிருக்கும்.

மரணம் நெருங்கியிருப்பது, பொது மதிப்புகள் பற்றிய அவரது உணர்வுகளை மாற்றுகிறது. மிகத் தாழ்ந்தனவும் எளியனவும் தாம்தாம் முக்கியத்துவம் உடையனவாக இருத்தலை உணர்கிறார். இயற்கையின் ஒழுங்குமுறையில் அவற்றைவிட அவர் ஒன்றும் அதிக முக்கியமானவர் அல்லர். இயற்கையானது எளியோர் தாழ்ந்தோரிடம் அலட்சியமாக இருப்பது போன்றே பெரியோர் செல்வரிடமும் அலட்சியமாக இருக்கிறது.

செல்வங்கட்கு அவர் அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்தார். இதுகாறும் அவர் புறக்கணித்து வந்த ஆன்மிகத்துக்கு அதிக நாட்டம் கொள்கிறார்.

92. இம் மண்ணகக் காட்சி என் கண்களை விட்டு நீங்கக் கூடிய வாழ்க்கை என் கண்களின் மேல் கடைசித்

திரையை இழுத்து விட்டு ஓசைப்படாமல் விடை பெற்றுக் கொள்ளக் கூடிய அந்த நாள் வரும் என்று நான் அறிவேன்.

ஆனாலும் முன்போலவே இரவில் விண்மீன்கள் விழித்து நோக்கும்; காலைப் பொழுது தோன்றும், கடல் அலைகள் போல் நாழிகைகள் இன்ப துன்பங் களை வீசி எறிந்து விம்மி வீழும்.

எனது வினாடிகளின் இந்த இறுதியை நான் நினைக்கும் பொழுது வினாடிகளாகிய குறுக்கீடு உடைகின்றது. மரணத்தின் ஒளியால் நினது இவ் வுலகை, அதில் கவனிப்பாரற்றுக் கிடக்கும் புதையல் களோடு பார்க்கிறேன். மிக மிகத் தாழ்வாகக் கிடப் பதும் அரிய பொருளே; மிக மிகப் புல்லிய உயிர் களும் அரியனவே.

வீணாக நான் ஆசைப்பட்டனவும் நான் அடைந் தனவும் ஆகிய அவை சென்றொழிக; ஆனால் நான் வேண்டாம் என்று எப்போதும் தள்ளியனவும் கண்டு கொள்ளாதனவும் ஆகியவற்றுக்கு உண்மையில் நான் உரிமை பெறுவேனாக.

❑ நாழிகைகள், கடல் அலைகளோடு ஒப்பிடப் பெற் றுள்ளன; அழகான சொற்சித்திரம் அது. அலைகள் ஏறு வதும் இறங்குவதுமாகக் கரையில் நீரை எறிவதும் பின் வாங்குவதுமாக இருக்கின்றன. அவ்வாறே நாழிகைகள் ஏறி இறங்குகின்றன; ஏற்ற இறக்கத்துடன் வாழ்க்கைக் கரையில் இன்பங்களைச் சில போதும் துன்பங்களைச் சில போதும் நாழிகைகள் எறிகின்றன.

O

## தொண்ணூற்றுமூன்று
## வாழ்த்துங்கள் என்னை

❑ தன் இறுதிப் பயணத்திற்கான கப்பல் ஏற இருக்கி றார் கவிஞர். தன் நேய மாந்தர்க்கு விடை சொல்லிக் கொள்கிறார்.

அவர்களை உடன் பிறப்புக்கள் என்று விளித்து அன்பும் நல்லெண்ணமும் அவர்களிடம் தான் திரும்பி அளித்ததை விட அவர்களிடமிருந்து அதிகம் பெற்றதனைத் தெரிவித்துக் கொள்கிறார். இறுதி விடைபெறுகிற நேரத்தில் அவர்களின் நல்லாசிகளை வேண்டிக் கொள்கிறார். தனது சொத்துப் பற்றுகள் இனித் தனக்குத் தேவையில்லை; ஆகவே அவற்றை அவர் அண்டை அயலார்க்கு விட்டு விட்டுச் செல்கிறார்.

மரணத்தின் அழைப்பு, அறியப் படாத பெரும்பொருளிடமிருந்து அவர்க்கு வந்திருக்கிறது. ஆகவே தன் கடைசிப் பயணத்தை இப்பொழுது தொடங்குகிறார்.

92. நான் புறப்பட இசைவு பெற்றுக் கொண்டேன். என் உடன் பிறந்தோரே, விடை தாருங்கள். உங்கள் அனைவர்க்கும் தலை தாழ்த்துகிறேன், புறப்படுகிறேன்.

நான் என் கதவின் திறவு கோல்களை இங்குத் திருப்பித் தருகிறேன். என் வீட்டுக்கான எல்லா உரிமைகளையும் விட்டு விடுகிறேன். உங்களிடமிருந்து இறுதியான அன்பு மொழிகளை மட்டும் வேண்டுகிறேன்.

நெடுங்காலம் நாம் அண்டை அயலாராக இருந்தோம். கொடுக்க முடிந்ததை விட நான் பெற்றுக் கொண்டது மிகுதி. பொழுது விடிந்து விட்டது. என் இருள் மூலையில் ஏற்றி வைத்திருந்த விளக்கு அமர்ந்து விட்டது. அழைப்பு வந்துவிட்டது. பயணத்துக்கு நான் ஆயத்தமாயுள்ளேன்.

□ தான் பிறர்க்கு அளித்ததை விட அவர்களிடமிருந்து பெற்ற அன்பே மிகுதி என்ற எண்ணம் மேலோங்கியிருப்பது சிந்தனைக்கு உரியது. உலக உடைமைகள் மறு உலகிற்கு உதவா, உடன்வரா என்பதால் அவற்றை மனவிருப்போடு வழங்கி விட்டுச் செல்வது நல்லது என்ற கருத்து யாவராலும் மறவாதிருக்கக் தகுவது.

O

# தொண்ணூற்று நான்கு
# விடை பெறுகிறேன்

☐ தான் புறப்பட விருப்பதால், தனக்கு நற்பேறும் வெற்றியும் கிட்ட, வாழ்த்து உரைக்குமாறு கவிஞர் தன் நண்பர்கள், உலக மக்களைப் பணிவுடன் வேண்டிக் கொள்கிறார். பயணத்திற்கு அவர் தயங்கவோ அஞ்சவோ இல்லை. மாறாக நம்பிக்கையும் நல்லன எதிர்பார்த்தலுமே அவரிடம் உள்ளன. போகும் வழி அழகியதாக, விடியலின் ஒளி பொலிவதாக இருக்கிறது.

அவர் தன்னுடன் எதனையும் கொண்டு செல்லவில்லை. வெறுங்கையோடு, தன் தலைவனைக் காணும் உயர்ந்த எதிர் நோக்கோடு போகிறார்.

அவர் துறவி யல்லர். ஆகவே காவி யுடுத்துச் செல்ல மாட்டார். மாலை அணிந்து மணக் கோலத்தில் தன் தலைவனைச் சந்திக்க விரும்புகிறார். வழி நெடியது, முன் அறிந்திராதது. ஆகவே இடையூறுகள் இடும்பைகள் இருக்கலாம். ஆனால் அவர் அவற்றுக்கு அஞ்சாமலே ஏகுவார்.

கவிஞரின் பயண நிறைவில் மாலை வெள்ளியின் வெளிச்சம் இருக்கும். தன் தலைவனின் வாசலில் வரவேற்பு இன்னிசை முழங்கும். இவ்வாறாகத் தன் தலைவனாம் கோமானிடம் அவர் சென்று சேர்வார்.

94. நான் பிரிந்து செல்லும் இந்த நேரத்தில், என் நண்பர்களே, எனக்கு நன்மை யுண்டாக வாழ்த்துங்கள். விடியலால் வானம் முகம் சிவந்திருக்கிறது. போகும் வழி அழகாகத் திகழ்கிறது.

என்னுடன் நான் என்ன எடுத்துச் செல்கிறேன் என்று வினவாதீர்கள். வெறுங்கைகளோடும் வாய்ப்பை எதிர்பார்க்கும் உள்ளத்தோடும் என் பயணத்தைத் தொடங்குகிறேன்.

என் மண மாலையை அணிந்து கொள்வேன். பயணம் செய்வோரின் காவி உடை அன்று என்னு

டையது. வழியில் இடர்கள் எதிர்வரலாம். ஆயினும் என் மனத்தில் அச்சம் இல்லை.

என் பயணம் முடிவுற்றதும் மாலை வெள்ளி முளைத்து விடும். அந்தி இசையின் சோகப் பண்கள் அரசரின் முற்றத்திலிருந்து வெளிவரத் தொடங்கும்.

☐ மரணம் என்பது திருமணத்தின் நிறைவேற்றமான கூடலாக இங்கு வருணிக்கப் பெறுகின்றது. படிமம் காதல் சார்புடையதாக இருக்கிறது.

O

## தொண்ணூற்றெந்து
## அறியப்படாத ஒரு பொருள்

☐ வாழ்வின் வாயிற்படியில் எப்போது ஏறி வந்தோம் என்பதை மானிடன் அறியான். நள்ளிருள் நேரத்தில் காட்டில் ஓர் அரும்பு மலராக விரிதல் போல், பெரிய மருமத்தில் வாழ்க்கைச் சுடர்ப் பொறிகளைக் கொண்டு அவனுக்கு எந்த மருமமான சக்தி உயிர்தந்து வாழ்வளிக்கிறது என்பதையும் அவன் அறியான். இருண்ட காட்டில் அரும்பு பூவாதல் போல இருக்கிறது ஆன்மா இவ்வுலகில் பிறப்பு எடுப்பது.

மனிதன் உலகில் பிறக்கும் போது, தான் அறிந்திராத, வழக்கமில்லாத, சூழ்புறத்தில் பிறந்திருப்பது காண்கிறான். யாக்கையுட் பொதிந்த ஆன்மாவை அதற்கு அன்னியமான புதியதோர் இடத்திற்குக் கொணர்கிறது பிறப்பு.

மரணத்திலும், அதே மருமமான சக்தி விளங்கிக் கொள்ள முடியாத தெய்விக சக்தி யாக்கையை விலக்கிக் கரைத்து விடுகிறது. ஆன்மா எங்கிருந்து வந்ததோ அதனை அந்தப் பெரிய, தெரிந்திரா இடத்திற்கு இறப்பு கொண்டு போகிறது.

ஆன்மா வடிவம் ஒன்று பெற்றிருந்த தன் வாழ்வை முழுமையாக நேசித்தார். அவ்வாறே அது பிரிந்து விடுவதான

மரணத்தையும் அவர் நேசிப்பார். வாழ்வும் சாவும் தெய்வத் தாயின் இரு மார்புறங்கள். தாய் தன் வலப்புற மார்பிலிருந்து குழந்தையை எடுத்ததும் அது அழுகிறது. அதனை இடப்புற மார்பில் வைத்ததும் ஆறுதல் கொள்கிறது. அவ்வாறே உலகியல் நுகர்ச்சிக்குப் பிறகு ஆன்மா மரணத்தின் வழி அடைகிற உலகத்தே முழு ஓய்வும் அமைதியும் அடையா நிற்கும்.

95. இவ்வாழ்வின் வாயிற்படியில் எப்போது ஏறிவந்தேன் என்பதை நான் அறிகிலேன்.

நள்ளிரவில் வனாந்தரத்தில் ஓர் அரும்பு போல இந்தப் பெரிய மருமத்தில் என்னை மலர வைத்த சக்தி எது?

காலைப் போதில் நான் ஒளியினைப் பார்த்ததும், இந்த உலகிற்கு நான் புதியவன் இல்லை; பெயரும் உருவும் இல்லாததும் அறிவுக்கு எட்டாததுமான சக்தி என்னை என் சொந்தத் தாயின் வடிவத்தில் தன் கைகளில் என்னைத் தாங்கிக் கொண்டது என்பதை ஒரு நொடியில் உணர்ந்து கொண்டேன்.

அவ்வாறே அதே அறியப்படாத சக்தி, எப்போதும் எனக்குத் தெரிந்ததாக, மரணத்திலும் என் முன் தோன்றும். இவ் வாழ்வை நான் நேசிக்கிற காரணத்தால் அவ்வாறே நான் மரணத்தையும் நேசிப்பேன் என்று எனக்குத் தெரியும்.

தாய் தன் வலப்புற மார்பிலிருந்து குழந்தையை எடுக்குங்கால் அஃது அழுவது அடுத்த நொடியில் இடப்புற மார்பில் அமைதி பெறற்கேயாகும்.

❏ கீதாஞ்சலியாகிய தன்னுணர்ச்சிப் பாமாலையில் குறிப்பிடத்தக்க பாக்களில் இதுவும் ஒன்றாக உள்ளது. சுயத் தன்மையும் திகைக்கச் செய்யும் படிமவியலும் கொண்டுள்ளது இது. படைப்புக் கற்பனையில் வியத்தகு துணிச்சலுடன் சாவும் வாழ்வும் ஒரே பொருளின் இரு பகுதிகளாக - தெய்வத் தாயின் இரு மார்பகங்களாக - இதில் ஒப்புமை செய்யப்பட்டுள்ளன.

# தொண்ணூற்றாறு
# பிரிவுச் செய்தி

இவ்வுலகை விட்டுப் புறப்படு முன் கவிஞர் தன் உடனாய மாந்தர்க்குத் தன் பிரிவுரையை விளம்புகிறார்.

இந்த உலகில் தான் கண்டதும் அனுபவித்ததும் விரித்துரைக்க முடியாதவை என்று அவர் கூறுகிறார். வாழ்க்கை ஒரு தாமரை போன்றது. விடியற்காலத்துக் கதிர்ஒளியில் கடலில் ஒரு தாமரை பூத்தது போன்று அவரது வாழ்க்கையாகிய தாமரை அன்புக் கடலில் தெய்விக ஒளியில் விளங்கித் திகழ்கிறது. இந்தத் தாமரையின் இரகசியமான தேனை அவர் முழுக்கச் சுவைத்து அனுபவித்து விட்டார். அதாவது இவ் வாழ்க்கையில் தெய்விகக் காதல் இன்பத்தை அவர் நன்கு துய்த்து விட்டார்.

வையகமாகிய மாளிகையில் அவர் வடிவற்ற,எல்லையற்ற, பொருளின் கோலங்களாகிய எண்ணற்ற வடிவங்களின் மாட்சியையும் எழிலையும் பார்த்திருக்கிறார். தொட முடியாத ஒன்றன் தொடுதலால் அவரது நெஞ்சம் விண்டுரைக்க முடியாத இன்பத்தில் நிரம்பித் ததும்புகிறது.

தான் பிறந்ததனை ஓர் அருட்பேறாகக் கவிஞர் கருதுகிறார். சாவதில் அவர் நிறைவு பெறுகிறார். ஏக்கமும் தயக்கமுமான பார்வையால் அவர் பார்க்கவில்லை. இதுவே அவரது இறுதிச் செய்தி.

96. நான் கண்டது, மிகச் சிறந்தது, விஞ்சுதற்கு அரியது. இங்கிருந்து நான் புறப்படும் போது இஃது என் பிரிவுச் செய்தி ஆகுக.

ஒளிப் பெருங்கடல் மேல் விரியும் இந்தத் தாமரையில் பொதிந்துள தேனைச் சுவைத்து விட்டேன். இவ்வாறு நான் பேறு பெற்றேன். இஃது என் பிரிவுச் செய்தி ஆகுக.

முடிவிலா உருவங்களால் ஆகிய இவ் விளையாட்டு அகத்தில் எனக்கு விளையாடக் கிடைத்தது;

உருவமற்றவனாகிய அவனது காட்சியை இங்குக் காணப் பெற்றேன்.

தொடுவதற்கு முடியாத அப்பாலில் இருப்போனாகிய அவன் தொட்டதனால் என் உடம்பு முழுவதும் உறுப்புகளும் சிலிர்ப்பு அடைந்தன. இங்கு இறுதி வருமானால், அது வருக. இஃது என் பிரிவுச் செய்தி ஆகுக.

☐ இந்தப் பாடல் தாகுரின் மானிடத் தன்மையையும் வாழ்க்கையிடம் அவரது அன்பையும் தெரிவிக்கிறது. வாழ்வைப் பூரணமாக நேசித்ததையும் அதனால் பேறு பெற்றதையும் மகிழ்ச்சி நிறைவோடு தெரிவிக்கிறார்.

கீதையின் அடிகளில் அவர் நன்கு தோய்ந்திருப்பார் என்பது தெரிகிறது. "பிறந்ததற்கு மறைவு உறுதி; அவ்வாறே மறைந்ததற்குப் பிறப்பு உறுதி; ஆகவே தவிர்க்க ஒண்ணாததற்கு நீ வருந்த வேண்டா". என்பது கீதை மொழி.

☐ உலகை விட்டு விடை பெறலே இந்தப் பாடலின் அடிக்கருத்தாயினும் உரைக்கப்படும் முறை வேறுபட்டிருக்கிறது. தான் இந்த உலகை நன்கு அனுபவித்ததாகச் சொல்கிறார் கவிஞர். கடவுளை அவரது படைப்பில் உணர்ந்ததாகவும் கூறுகிறார். அந்த உணர்ச்சிச் சிலிர்ப்பு அவர்க்கு நிறைவைக் காட்டுகிறது. ஆகவே சாதல் பற்றிய கவலைக்கு இடம் இல்லை.

O

## தொண்ணூற்றேழு
## விளையாட்டுத் தோழன்

☐ எல்லாவற்றையும் ஆக்குதல்-படைத்தல்-இறைவனின் அலகிலா விளையாட்டு. மானிடனோடு தெய்வம் ஆடல் புரிகிறது; மானிடன் தெய்விகத்துடன் ஆடல் புரிகிறான். தன் வாழ்வில் அதிக காலம் அவன் இறைவனோடு நண்பனாக-சமானனாக, கூச்சமோ அச்சமோ இன்றி

விளையாடுகிறான். தன் விளையாட்டுக் களிப்பில் செருக்கி இருக்கிறான் தன் விளையாட்டுக் கூட்டாளி யார் என்று தெரிந்து கொள்ள அவன் முயன்றதே இல்லை.

விடியற்காலையில் விளையாடற்குத் தெய்விகத் தோழன் மனிதனை அழைக்கிறான். அவர்களது விளையாட்டின் போது காட்டு வெளியில் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு ஓடுகிறார்கள். தெய்விக நேயன் மானிடனிடம் பாக்கள் இசைக்கிறான்; அவற்றின் பொருள் தெரிய மானிடன் அக்கறைப் பட்டதில்லை. அதாவது தெய்விகத் திருமுன்பை உணரும் சமயங்கள் சில தோன்றின; அத்தகைய சிறு பொழுதுகளின் சிறப்பை அவன் கண்டு கொள்ளவில்லை. விள்ள முடியாத பேரின்ப அனுபவக் கூறு கிடைத்தது; நெஞ்சம் உவகையில் கூத்தாடியது.

மானிடன் தன் வாழ்க்கையின் இறுதித் தருணத்தில் தான் தன் கூட்டாளியை இனம் காண்கிறான். வாழ்க்கையில் மிகத் தாமதமாகவே உண்மை அவனுக்கு விடிகிறது. விளையாட்டுக் கூட்டாளி, விண்ணும் விண்மீன்களும் உட்படப் படைப்பு யாவும் யாருக்குத் தலை தாழ்கின்றவோ அவன் மன்னர் மன்னன் ஆகிய இறைவன் என்று காண்கிறான்.

97. நின்னுடன் நான் விளையாடிய காலை, நீ யார் என்று நான் ஒரு போதும் கேட்டதில்லை. என் வாழ்வு ஆரவாரமாக இருந்தது; கூச்சமோ அச்சமோ அறிகிலேன் நான்.

வைகறையில் என்னை நீ உறுதோழனாக வந்து துயில் எழுப்புவாய்; காட்டு வெளியில் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு ஓட்டமாக நடத்திச் செல்வாய்.

அந்த நாள்களில் நீ என்னிடம் பாடிய பாடல்களின் பொருளை நான் கருதியதில்லை. என் குரல் மட்டும் அவற்றின் பண்களைப் பற்றிக் கொண்டது; என் நெஞ்சம் அவற்றின் இனிய தாளங்களுக்கு ஏற்ப நடனம் புரிந்தது.

இப்பொழுது விளையாட்டு வேளை முடிவுற்றது. இஃது என்ன திடீர்க் காட்சி என் முன் தோன்று கிறது? தன் எல்லா விண்மீன்களுடன் உலகம் மௌன மாக அச்சத்துடன் நின் காலடியில் கண் கவித்து நிற்கிறதே!

□ கடவுளைப் பற்றிய உண்மை, தனக்குக் கடவுளிடம் உள்ள உறவு என்பன வாழ்க்கையின் பிற்கூறில் தான் விளங்குகின்றன.

தொடக்கத்தில் அருள் உணர்வுத் தூண்டல்கள், மினுக்கு கள், ஒளிவீச்சுகள் சில வினாடிகள் தோன்றுதல் உண்டு. ஆனால் அவற்றின் முழுச் சிறப்பும் உணர்ந்திடற்கில்லை. ○

## தொண்ணூற்றெட்டு
## தோல்வியேவெற்றி

□ வென்றவன் இறைவன், வெல்லப் பட்டவர் கவிஞர். தோல்வியுற்ற ஒருவரைப் போலக் கவிஞர் தன் உடைமை கள் யாவைற்றையும் தன்னை வென்றவன் காலடியில் வைத்து விடுவார். தன் செருக்கு ஆணவம் ஆகியவற்றை விட்டுவிடுவார். உடற்கட்டை உடைத்து விட்டு அவரது ஆன்மா, தன் துன்பம் வேதனைகள் யாவற்றையும் பெருமானாகிய தலைவனது காலடியில் வைத்து விடும். முடிவில் கடவுளின் நெஞ்சமாகிய தாமரை ஒரு பூவாக விரியும். அவர் அதிலுள்ள தெய்விக அன்பாகிய கருணை அமுதினைப் பருகுவார். முடிவில் இறைவன் தன் அன்பின் பரிவால் வாழ்த்துவான். கடைசியாக அந்த நாள் வரும். இறைவன் அவரை அன்புடன் நோக்குவான். மேலுள்ள உயர் வானத்திலிருந்து-அவன் தன் இருக்கையிலிருந்து- அழைப்பான். கவிஞர் உற்சாகத்துடன் மரணத்தை வர வேற்பார்; இறைவனின் தாளுக்கு மகிழ்வுடன் செல்வார். மரணம் அவரது வரவேற்புக்கு உரியதாக உள்ளது. ஏனெனில் மரணத்தில் தான் மானிடமும் அதிமானிடமும் சந்திக்கின்றன.

98. என் தோல்வியால் நினக்கு விருதுகள் மாலைகள் சூட்டுவேன். தோல்வியுறாது தப்புதற்கான வல்லமை என்னிடம் ஒருபோதும் இருந்த தில்லை.

என் செருக்கு ஒன்றுமிலாது போகும், என் வாழ்க்கை அளவிறந்த வேதனையால் தன் கட்டுகளை உடைத் தெறியும், என் வெற்று நெஞ்சம் ஒரு குழல் போல இசையில் தேம்பி அழும், கல் கண்ணீராக உருகும் என்பது எனக்குத் திண்ணமாகத் தெரியும்.

தாமரையின் நூற்றிதழ் எக்காலும் மூடியே இராது; தேன் இருக்கும் அதன் மறைவான உள்ளிடம் திறக் கப்படும் என்பது எனக்கு நன்றாகத் தெரியும்.

நீல வானிலிருந்து ஒரு கண் என் மீது பார்வை செலுத்தும்; ஓசைப்படாது அழைக்கும்; எனக்கென்று எதுவும்-அது எதுவாயினும் சரி-எஞ்சி யிராது. நின் காலடியில் மரணத்தை முழுமையாக ஏற்பேன்.

❑ பாடலில் பாலியல் போக்கு காணப்படுகிறது. தோல் வியும் வெற்றியும் முரணானவை, அவை காதலில் ஒன்று இன்னொன்றாக இணையும். தோற்றவர் வென்றார் என்று இன்பத்துப் பாலில் இயம்புவர். தன் மணாளனைச் சேர்ந்த கன்னி, தோல்வி, வெட்கம், தன் நிறைஇழப்பு, வேதனை ஆகியன அனுபவிக்கிறாள். ஆயினும் எதிர்ப் பின்றித் தன்னை அவனிடம் முழுமையாகத் தந்துவிடுகி றாள். மேலெழுந்தவாரியாகத் தோன்றும் தோல்வி, இழப்பு முதலியவற்றில் தான் காதல் நிறைவேற்றம் இருக்கிறது. தன் தனித்தன்மையைக் கடவுளில் இழந்து விடுவதாகக் கூறுகிறார் கவிஞர். உண்மையில் அந்த மரணமே அவர்க்கு ஆன்ம நிறைவேற்றம் ஆக உள்ளது.

நிருவிகற்பசமாதி அடையுமுன் தனக்கு ஏற்பட்ட வேதனை தோல்வி எல்லாமும் இறையிடம் தான் ஒன்றாகிவிடும் பேரின்ப நிலையில் சுவடு இன்றி மறைகின்றன. அந் நிலையடைந்தோன் 'உடம்பும் மிகை' என்று பேரின்பப் பேரா நிலையில் நிரந்தர ஐக்கியம் பெறுகிறான். கவிஞரின் பாடல் உடல் மரணமாக, சிற்றின்பத்தில் தனித் தன்மை இழப்பாக, பேரின்ப நிலையில் தன்னுயிர்

தான் அற்ற நிலையாகக் காட்சி அமைப்புப் பெற்றிருக் கிறது.

O

# தொண்ணூற்றொன்பது
# இருக்கும் இடமே போதும்

☐ உலகியல் தொடர் வாழ்வு ஒரு கடற்பயணம் போன்றது. இது காறும் கவிஞர் கப்பல் தலைவனாக இருந்தார். இப்பொழுதோ அவர் தன் அதிகாரத்தை-ஆட்சியை—தெய்விகத்தின் கையில் கொடுத்து விடுகிறார். இறைவனின் விருப்புக்கு எதிராக அவர் இனியும் வீணே போராட மாட்டார். தன்னை முழுக்கக் கடவுளின் கையில் ஒப்படைத்து விடுவார். வாழ்க்கையில் தன்னு டைய நிலையில் முழுக்கத் திருப்தி அடைவார். மேலும் எதுவும் வேண்டும் என்று விரும்ப மாட்டார். கடவுளின் விருப்புக்கு எதிரே மனிதன் வலுவற்றவன் என்பதை உணர்கிறார். தனது முயற்சி வீண் என்று உணர்கிறார்.

உலகியல் சொத்து ஈட்டம் காரணமாக, உலகியல் கொள்கைகளில் சுறுசுறுப்பாக இருந்து, மனிதன் தனது ஆன்மிகத் தேவைகளை மறந்து விடுகிறான். இதற்கு மேலும் கவிஞர் எதுவும் செய்ய மாட்டார். தன் தலைவ் னின் வருகைக்காகக் காத்திருந்தார். அவனுக்கு எப்போது இயலுமோ அப்போது அவன் வருவதை அவர் எதிர் பார்ப்பார். கவிஞரின் வாழ்க்கை முடிவுக்கு வருகிறது. அவன் வருகையில் அவர் வரவேற்பார்.

99. ஆட்சிப் பிடியை (சுக்கானை) நான் விட்டதும் அதை நீ பிடித்துக் கொள்ளுதற்கான தருணம் வந்து விட்டது என்பது எனக்குத் தெரியும். எது செய்யப்பட வேண்டுமோ அது உடனடியாகச் செய்யப்படும். வீணானது இந்தப் போராட்டம்.

என் நெஞ்சமே, உன் கைகளை எடுத்து விடு. பேசாமல் உன் தோல்வியைப் பொறுத்துக் கொள். நீ

வைக்கப்பட்டிருக்கும் இடத்தில் முழு அமைதியாக உட்கார்ந்திருப்பது நற்பேறு என்று எண்ணிக் கொள்.

என் விளக்குகள் இவை, ஒவ்வொரு சிறு காற்று அலையின் போதும் அணைந்து விடுகின்றன. அவற்றை ஏற்ற முயல்கையில் மற்ற எல்லாவற்றையும் மறுபடி மறுபடி மறந்து விடுகிறேன்.

ஆனால் இம் முறை நான் அறிவுடையனாயிருப்பேன். தரையில் பாயை விரித்துக் கொண்டு, இருளில் காத்திருப்பேன். எப்போது நினக்கு விருப்பமோ என் பெருமானே, ஓசையின்றி அப்போது வருக; இங்கே நின் இருக்கை கொள்க.

□ மரணத்தைத் தடுப்பது - எதிர்ப்பது மனித இயல்பு. மரணத்தின் பின் வாழ்க்கைக் கப்பல் நிலைகெட்டு இழுத்துச் செல்லப்படும் என்பது கிடையாது, ஏனெனில் கடவுளே அதன் மீகாமன் என்பதை மனிதன் புரிந்து கொள்ள வேண்டும். படகின் சுக்கானைக் கடவுள் பிடித்திருக்கிறார் என்பதால் நாம் நற்பேறுடையர் என்று ஒவ்வொருவரும் கருத வேண்டும். அச்சமயம் தத்தம் சிறு அகல்விளக்குகளை ஏற்றுவதால் பயனில்லை. ஏனெனில் அடிக்கும் காற்று அவற்றை ஊதிவிட்டுப் போய்விடும். ஆகவே இறைவற்காக இருளில் காத்திருத்தல் நல்லது இறைவன் தனக்கு உகந்த நல்ல வேளையில் வருவான். O

## நூறு
## உருவமற்ற உயர்முத்து

□ கடவுளாகிய முத்து மதிப்புயர்ந்தது. அது உலகமாகிய கடலின் ஆழத்தில் கிடக்கிறது. உலகமோ கோடிக் கணக்கான உருவங்களால் நிரம்பியிருக்கிறது. எண்ணற்ற உருவங்கள் தெய்வத்தின் புறத்தோற்றங்களே. அவை உருவமற்ற ஒருவனாகிய இறைவனை அறிய உதவுகின்றன. அந்த மதிப்பு மிக்க முத்தினைத் தேடுவதில் கவிஞர் தன் வாழ்க்கை முழுவதையும் செலவிட்டார். கடலின் ஒரு பக்கமிருந்து இன்னொரு பக்கத்

துக்குப் பயணம் செய்தார். எண்ணற்ற வடிவுகள் உருவு களாகிய அலைகளால் மேலும் கீழுமாகப் பந்தாடப் பெற்றார்.

அவரது உயிராகிய நலிந்த படகு தடமற்ற கடலில் அலைக்கழிபட்டது; அலைக்கழிப்பு அனேகமாக முடிந்துவிட்டது. அவர் சாகவும், மரணமில்லா நிலை பேறு என்ற கடலில் மறைந்து கலந்துவிடவும் விரும்பு றார். செறி இருளில் ஒலியற்ற நரம்புகளால் இசை பாடப்படும் பெரிய அரங்க மண்டபத்தில் அவர் தன் உயிராகிய யாழை ஏந்திச் செல்வார். அதனால் அவரது உயிர் யாழின் பண்கள் இறைமை இசையோடு ஒன் றாகக் கலந்துவிடும்.

தன் பண்கள் என்றுமுளதாம் இறைமையின் பண் களுக்கு ஒத்து இசைக்கத் தன்னால் முடிந்த அளவு முயற்சி செய்வார் கவிஞர். அவரது பண்கள் இறுதிச் சோக இசையை வாசித்ததும் அவர் தன் ஒலியற்ற யாழை இறைவனின் திருவடியில் வைத்து விடுவார்.

100. உருவமில்லாததாகிய செவ்விய முத்தினை அடை யலாம் என்ற நம்பிக்கையில் உருவங்கள் மயமான பெருங்கடலின் ஆழத்தில் மூழ்குகிறேன்.

ஒரு துறைமுகத்திலிருந்து இன்னொரு துறைமுகத் துக்கு, பருவகாலங்களால் அடிபட்ட என் படகை வைத்துக் கொண்டு இனிப் பயணம் செய்வதற் கில்லை. அலைகளில் தூக்கி எறியப்படுவது என்ற என் விளையாட்டு முடிந்து பல நாள்கள் ஆகி விட்டன.

இப்பொழுது நான் மரணமின்மையில் மரணம் அடைய ஆர்வமாக இருக்கிறேன்.

அடி காணமுடியா ஆழத்தின் அருகில் உள்ள சபை மண்டபத்தில் - அம்பலத்தில் - ஒலியற்ற நரம்புகளி லிருந்து எழும் இன்னிசை பெருகுகிறது. அங்கே நான் என் உயிராகிய இவ் யாழை எடுத்துச் செல்வேன்.

எப்போதைக்குமான பண்களை நான் அதில் எழுப்பு வேன். அதன் இறுதி ஒலிப்பு தேம்பித் தீர்ந்ததும் ஓசையடங்கிய என் யாழை, ஓசையற்ற பொருளின் காலடியில் வைத்து விடுவேன்.

☐ இயற்கையிலிருந்தும் வாழ்க்கையிலிருந்தும் எடுக்கப் பட்ட, கருத்துணர்வைத் தூண்டும் படிமங்களின் ஓவியங் கள் இந்தத் தன்னுணர்ச்சிப் பாடலில் செழிப்பாக அமைக்கப் பட்டுள்ளன. இறைமையோடு ஒன்றாகும் கவிஞரின் அனுபூதி உணர்ச்சிகளைத் தெள்ளத் தெளி வாகவும், கண்கூடாகவும் வெளியிடும் படிமப் பாங்கு இதில் அமைந்துள்ளது. 'உருவமற்ற முழு முத்தாக' இறைவன் உவமிக்கப்படுகிறான். உலகம் 'வடிவுகள் மயமான கடலாக' இருக்கிறது. மானிட வாழ்க்கை, 'பருவகாலங்களால் அரிக்கப்பட்ட படகாக உள்ளது; 'யாழாக'வும் உள்ளது. இறைமையோடு ஐக்கியமாக விரும்பும் அருளியல் ஏக்கம் மரணத்தின் மூலம் நிறை வேறும் என்ற கவிஞர் நம்பிக்கை இதில் தெளிவுறக் காணப்படுகின்றது.

O

## நூற்று ஒன்று
## பாடல்களால் விளை பயன்கள்

☐ தன்னைப் படைத்தவனைக் கவிஞர் தன் பாடல்கள் மூலமே தேடினார். உலகைப் பற்றியும் அவர் நிறையத் தெரிந்து கொள்ள அவரது பாக்களே அவர்க்குத் திறம் தந்தன. இன்ப துன்பமாகிய பலவகை அனுபவங்களை அவை கற்பித்தன. இரகசியமான பல மருமங்கள், புதுமை களை அவை அவருக்குப் பழக்கம் செய்வித்தன. இதய அடிவானத்து நட்சத்திரங்கள் பலவற்றை அவை அவரது காட்சிக்குக் கொணர்ந்தன.

தன் வாழ்வின் அந்தி மாலையில் தன் பயணம் முடிவ டையப் போகும் தருணத்தில் தான் சேர்தற்கு உரிய இடமான தெய்விக மாளிகையின் வாயிலுக்குத் தனது

பாக்கள் வழி நடத்திச் சேர்க்கும் என்று அவர் நம்பு கிறார். இறைமையின் இன்பக் கலப்பின் அனுபவத்தினை அவர் எதிர்நோக்குகிறார்.

101. என் வாழ்வெல்லாம் நின்னை என் பாடல்களால் தேடினேன். அவைதாம் என்னை வீடு வீடாக நடாத்திச் சென்றன. அவற்றாலே நான் என் உலகைத் தேடியும் தொட்டும் என்னைப் பற்றி உணர்ந்தேன்.

நான் எக்காலத்தும் கற்ற எல்லாப் பாடங்களையும் கற்பித்தவை என் பாடல்களே. இரகசியமான வழி களை அவை எனக்குக் காண்பித்தன. என் நெஞ்ச மாம் அடிவானத்தில் விண்மீன்கள் பலவற்றை அவை என் காட்சியுள் கொணர்ந்தன.

இன்ப துன்பமாம் தேசத்தின் மருமங்களுக்கு அவை என்னை நாள் முழுக்க வழிகாட்டின. என் பயணத் தின் முடிவில் மாலைப் பொழுதில் இறுதியாக அவை, எந்த அரண்மனை வாயிலுக்கு என்னைக் கொண்டு வந்திருக்கின்றன?

□ என் இதய அடிவானத்து நட்சத்திரங்கள் என்பதில் இதயம் வானத்துக்கு ஒப்பாகக் கூறப்பட்டுள்ளது. கண்டு பிடிக்கப்படாத கோள்களும் நாள்களும் வானத்தில் எவ்வளவோ இருக்கின்றன. கவிஞர்க்குத் தனது கவிதை தன் நெஞ்சை நன்கு புரிந்து கொள்ள உதவியிருக்கிறது.

கவிதையாம் சாதனத்தின் மூலமாகவே கவிஞர் ஒவ் வொன்றையும் உணரவும் புரிந்து கொள்ளவும் முடிந்தது. கடவுளையும் தன் கவிதை வாயிலாகவே தேடி வந்தார். அதாவது அவரது கவிதையே அவரைக் கடவுளுக்கு அருகில் கொண்டு செல்வது என்று நம்புகிறார். அவர் அறிவினால் கற்கவில்லை, உணர்ச்சியினால் தன் கவிதை யின் வழிக் கற்றார். அவரது பாடல்கள் அவருக்கு இரகசிய வழிகள் பலவற்றைச் சொல்லிக் கொடுத்தன. உலகின் இன்ப துன்பங்களை அவற்றாலே அவர் கண்டு கொண்டார். வாழ்வின் முடிவில் அவர் தன் பாடல்கள் தன்னை ஏதோ ஒரு சுவர்க்கத்தின் வாயிலுக்குக் கொண்டு வந்திருப்பதாக உணர்கிறார். O

# நூற்றிரண்டு
# சொற்களால் விளக்க முடியவில்லை

☐ கவிஞர் தன் பாடல்கள் வாயிலாகவே இறையுணர்வு கைவரப் பெற்றார். இறைமையின் பெருமிதத்தைத் தன் பாடல்களில் அவர் சொல்லோவியமாகத் தீட்ட அருமையாக முயன்றிருக்கிறார்.

அவரிடம் மக்கள் வருகிறார்கள். உருவமற்ற இறைவனைத் தன் பாக்களில் அனுபூதிக் குறியீடுகளால் அவர் அழகாகச் சித்திரிக்கின்ற உட்பொருளை விளக்கும்படி கேட்கிறார்கள். அவரால் முடியாது.

முழுப் பற்றுறுதியால் தான் இறைமையின் முன்னிலையை உணர்தல் இயலும். கடவுளின் மாட்சி மகத்துவங்களைக் கவிஞர் பாடுகிறார். கடலை நோக்கிப் பாயும் ஆறு போல கவிஞர் தனது அனுபவங்களைக் கடவுளை நோக்கிச் செலுத்தி வந்திருக்கிறார். ஆனால் தன் அனுபவங்களை அவரால் விண்டுரைக்க முடியவில்லை. அதன் காரணமாக மக்கள் அவரை அலட்சியமாகப் பார்க்கிறார்கள்; வெறுப்போடு வெளியேறுகிறார்கள்.

102. எனக்கு நின்னைத் தெரியும் என்று நான் மக்களிடம் பெருமை அடித்துக் கொண்டேன். என் எழுத்துக்களில் எல்லாம் நின் ஓவியங்களை அவர்கள் காண்கிறார்கள். அவர்கள் என்னிடம் போந்து "அவர் யார்?" என்று கேட்கிறார்கள். எவ்வாறு விடை பகர்வது என்று அறிகிலேன். "ஆம்; என்னால் உண்மையில் சொல்ல முடியவில்லை" என்றேன். அவர்கள் என்னைப் பழிக்கிறார்கள்; ஏளனத்துடன் சென்று விடுகிறார்கள். நீ அங்கே புன்னகையுடன் அமர்ந்திருக்கிறாய்.

நின் கதைகளை நான் நிலையான பாக்களில் புனைகிறேன். என் நெஞ்சிலிருந்து இரகசியம் மோதிக் கொண்டு வருகிறது. அவர்கள் வருகிறார்கள். "நீ கருதும் பொருளை எல்லாம் விளம்பு" என்று கேட்கிறார்கள். என்ன விடை சொல்வது என்று நான் அறிகிலேன், "அவற்றின் பொருள் என்ன

என்பது யாருக்குத் தெரியும்?'' என்கிறேன். அவர்கள் சிரிக்கிறார்கள். மூழு ஏளனத்தோடு போய்விடுகிறார்கள். நீ அங்கே புன்னகையுடன் அமர்ந்திருக்கிறாய்.

☐ கவிஞரின் இறையனுபூதிப் பண்பை இவ் இசைப் பாடலும் கற்பனை அழகோடு இயம்பிநிற்கிறது. இறைமையே அவரது பாக்களுக் கெல்லாம் அடிக் கருத்தாக விளங்குகிறது. ஆனால் அனுபவ உணர்வுகளை முற்றாக விளக்கி விட முடியாது. சொற்களுக்கு வரம்பு உண்டு; அனுபவத்துக்கு ஏது அது?

○

## நூற்றுமூன்று
## இறுதியாக ஒரு வணக்கம்

☐ இறுதியாக உள்ள இந்தத் தன்னுணர்ச்சிப் பாடலில் கவிஞர், இறைவற்குத் தலை தாழ்த்தி வணக்கம் புகல்கிறார்.

தன் புலன்கள் உயிர் உடைமைகள் யாவற்றையும் அவனுக்கு ஒப்படைப்புச் செய்கிறார். அவர் தன் இன்ப துன்பங்கள் பாடல்கள் ஆர்வங்கள் செய்வினைகள் என எல்லாவற்றையும் அவர் படையல் செய்துவிட விரும்புகிறார்.

சூல் கொண்ட மேகம் உலகின் மேல் சூழ்ந்து கவிந்து மழை பொழிவது போல் கவிஞர் தன் அறிவுக் கருவூலம் எண்ணங்கள் எனும் எல்லாவற்றையும் இறைவன் காலடியில் பொழிந்து விடுவார்.

ஆறு ஓடிப் பரவிக் கடலில் கலப்பது போல், அவரது பாக்கள் எல்லாம் ஒரு நீரோட்டமாகப் பாய்ந்து நிலைபேறாகிய இறைமை என்னும் கடலிற் கலந்துவிடும். தத்தம் இருப்பிடத்துக்குத் திரும்பும் வேட்கை மிக்க நாரைகள் மலையிலுள்ள தம் கூடுகளை அடைந்து அமைதியும் ஓய்வும் கொள்ள இரவும் பகலும் பறப்பது

போலக் கவிஞரின் வாழ்க்கை முழுதுமான நோக்கம் குறிக்கோள் விருப்புகள் - சுருங்கக் கூறின் அவரது உயிர் முழுக்க – வாழ்க்கைப் பயணத்தால் களைப்படைந்து நிரந்தர ஓய்வும் அமைதியும் உடைய இடமாகிய நிலை பேறாம் இல்லத்தை நாடிப் பறந்து செல்லும்.

103. என் இறைவா, நினக்கு ஒரு வணக்கத்துடன் என் புலன்கள் யாவும் நின்னடியில் விரிந்து இவ் வுலகைத் தொடுமாக.

பொழிந்திரா நீர்ச் சுமையுடன் தாழத் தொங்கும் ஆடித் திங்கள் மழைமுகில் போல் என் மனம் முழுதும் நினக்கு ஒரு வணக்கத்துடன் நின் கதவருகே தாழ்ந்து கவியுமாக.

என் பாடல்கள் யாவும் பலவாறாய தம் பண்களை ஒரு நீரோட்டமாகத் திரட்டி, நினக்கு ஒரு வணக்கத் துடன் ஒலியற்ற பெருங்கடலுக்குப் பாய்ந்தோடுமாக.

மலையிலுள்ள தம் கூடுகளுக்கு இரவு பகலாகப் பறந்தோடும் மனைஆவல் மிக்க நாரைக்கூட்டம் போல் என் உயிரனைத்தும் நினக்கு ஒரு வணக் கத்துடன் தன் நிலையான மனையகத்துக்குப் பயணம் செய்யுமாக.

☐ இங்ஙனம் இறுதியாகவும் முழுமையாகவும் தான் யாவற்றையும் இறைவன் திருமுன் படையல் இடுங்கால் அவற்றை மிகத் தெளிந்த படிமங்களால் நன்கு புலப் படுத்தியுள்ளார் கவிஞர். படிமப் பாங்கு கற்பனையும் குறிப்பு உணர்வும் கொண்ட இனிய சித்திரமாக உள்ளது. தன் சொல் செயல் சிந்தை ஆருயிர் என்று ஒப்படைப்புச் செய்வதனை உருக்கம் உறக் கூறிக் கவிஞர் முடிப்பது, பாடற் படையல் - கீதாஞ்சலி - என்ற மகுடத்துக்குப் பொருத்தமான [illegible] நிறைவுணர்வு தருவதாக அமைகிறது.

O

